# இயற்பா

## நாலாயிர திவ்யப் பிரபந்தம்

ஸ்ரீ பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்கியானத்தை முழுமையாகத் தழுவியது.

தெளிவுரை :

ஸ்ரீ உ.வே. டாக்டர் மதி. சீனிவாசன், எம் ஏ,பி.டி.,பி.எச்டி.,

வெளியீடு :

ஸ்ரீ வராகி பிரிண்டர்ஸ்

பதிப்பகத்தார் & விற்பனையாளர்

144, ஆழ்வார்பேட்டைதெரு,

ஆழ்வார்பேட்டை, சென்னை - 600018

☎ 4335524

## நூல் விவர அட்டவணை

| | | |
|---|---|---|
| நூல் | : | இயற்பா - நாலாயிர திவ்யப் பிரபந்தம் |
| பொருள் | : | சமயம் |
| ஆசிரியர்பெயர் | : | தெளிவுரை : ஸ்ரீ உ.வே. டாக்டர் மதி. சீனிவாசன், பேராசிரியர், முன்னாள் தமிழ்த்துறைத்தலைவர், வைணவக் கல்லூரி சென்னை. |
| பதிப்பு ஆண்டு | : | 2000 |
| பதிப்பு | : | ஸ்ரீ வராகி பிரிண்டர்ஸ் (பதிப்பகத்தார் & விற்பனையாளர்) |
| உரிமை | : | பதிப்பகத்தாருக்கே. |
| மொழி | : | தமிழ் |
| நூலின் அளவு | : | கிரௌன் |
| தாள் | : | மேப்லித்தோ |
| அச்சு எழுத்து | : | 11 பாயிண்ட் |
| மொத்தப்பக்கம் | : | 320 (20 பாரம்) |
| விலை | : | ரூ. /- |
| கணிப்பொறி அச்சு | : | ஈசுவர் லேசர், சென்னை - 18 |
| அச்சிட்டோர் | : | மிர்ரா பிரிண்டர்ஸ், சென்னை - 18 |

நூல் கிடைக்குமிடம் :

**ஸ்ரீ வராகி பிரிண்டர்ஸ்**
**144, ஆழ்வார்பேட்டை தெரு,**
**ஆழ்வார்பேட்டை, சென்னை - 600 018.**

# இயற்பா

திவ்வியப் பிரபந்தப் பாசுரங்கள் நாதமுனிகளால் இசைப்பா, இயற்பா என்னும் இரு பகுப்புகளில் அடைவு செய்யப் பெற்றன. அவற்றுள் இயற்பா என்னும் இந்த மூன்றாவது பகுதி பத்துப் பிரபந்தங்கள் கொண்டது. முதலாழ்வார்கள் மூவரின் அந்தாதிகளும் திருமழிசை ஆழ்வாரின் நான்முகன் திருவந்தாதியும் திருவெழு கூற்றிருக்கையும் நம்மாழ்வாரின் திருவிருத்தம், திருஆசிரியம், பெரிய திருவந்தாதி ஆகியனவும் திருமங்கை ஆழ்வாரின் இரு மடல்களும் இப்பகுதியில் உள்ளன. நாலாயிரத் தொகுப்பில் பெரிய திருமொழி தொடங்கிப் பெரிய திருமடல் முடிவாக வைக்கப்பட்டுள்ள பிரபந்தங்கள் நாராயண மந்திரத்தின் விவரணம் என நாதமுனிகள் கருதினார்.

முதலாழ்வார்கள் மூவரும் அருளிய அந்தாதிப் பாசுரங்கள் முன்னூறு. பொய்கை ஆழ்வாரின் முதல் திருவந்தாதி, பூதத்தாரின் இரண்டாம் திருவந்தாதி, பேயாழ்வாரின் மூன்றாம் திருவந்தாதி ஆகிய மூன்று நூல்களும் காலத்தாலும், இறைஉணர்வாலும் பழமையும் முதன்மையும் பெற்றவை. இவர்கள் தங்களுக்குள் வெவ்வேறானவர் என்றாலும், கூறும் பொருள் ஒன்றே என்பர் பெரியவாச்சான் பிள்ளை. இம்மூவரும் எம்பெருமானின் பரத்துவத்திலே மண்டினார்கள் என்பது நம் பூர்வாச்சாரியர்கள் கருத்தாகும்.

'வையம் தகளியா' என்று தொடங்கிய பொய்கை ஆழ்வார் திருமாலின் உபய விபூதி ஆளுமையைக் காட்டி ஞானம் பிறந்த நிலையைப் பேசினார். பூதத்தாழ்வார் அன்பே தகளியா' என்று தொடங்கி உபய விபூதிகளை உடையவன் நாராயணனே என்று பக்தி நிலையில் பாசுரங்கள் அருளினார். பேயாழ்வார் 'திருக்கண்டேன்' என்று தொடங்கித் திருமகளுடன் கூடிய நாராயணனைத் துதித்துத் தம் பரமபக்தியை வெளிப்படுத்தினார். ஆகவே மூன்று திருவந்தாதிகளும், ஞான பக்தி, பரமபக்தி நிலைகளைக் குறிப்பன ஆகும்.

திருமழிசை ஆழ்வாரின் நான்முகன் திருவந்தாதியும் திருஎழுகூற்றிருக்கையும், இயற்பாவில் இடம் பெறுகின்றன. 'உறையில் இடாதவர்' எனப் பெயர் பெற்ற திருமழிசை ஆழ்வார் ஸ்ரீமந் நாராயண பரத்வத்தை நிறுவுவதில் வெற்றி கண்டார். சிவனுக்கும் நான்முகனுக்கும் தெய்வமான ஸ்ரீமந் நாராயணனே உலக காரணனும் காப்பவனும் ஆன முழுமுதல் கடவுள் என்பதே இவ்வாழ்வாரின் முடிவாகும்.

"இனி அறிந்தேன் ஈசற்கும் நான்முகற்கும் தெய்வம்
இனி அறிந்தேன் எம்பெருமான் உன்னை-இனி அறிந்தேன்
காரணன் நீ கற்றவை நீ கற்பவை நீ நற்கிரிசை
நாரணன் நீ நன்கறிந்தேன் நான்."

இந்நூலின் கடைசிப் பாசுரமான இதுவே, மற்றைய பாசுரங்களின் பொழிவான முடிவாகும்.

திருஎழுகூற்றிருக்கை இரத பந்தமான சித்திரக்கவி ஆகும். தேரின் உருவம் தோன்றும்படி, மேற்பாகத்தில் ஏழு கூறுகளும் கீழ்ப்பாகத்தில் ஏழு கூறுகளும் அமையும்படி கொடிகளால் கோத்து, ஒன்று முதல் ஏழு வரையான எண்கள் தேரைச்சுற்றி ஒன்றன்பின் ஒன்றாய் மாலை போலப் பொருந்தும்படி இருக்கும். இப்பிரபந்தம் நாற்பத்தாறு அடிகளில் அமைந்த ஆசிரியப்பா ஆகும். 'ஒரு பேருந்தி'

என்று தொடங்கி 'ஒன்றாய்ப் பிரிந்து நின்றன' என்னும் அடிவரை ஒன்று முதல் ஏழுவரை ஏற்றியும் இறக்கியும் மாலையாக அமையப்பெற்றுள்ளது.எம்பெருமான் அடியார்களைக் காப்பதற்குச் செய்த செயல்களையும் அவன் கல்யாண குணங்களையும் விரிவாகப் பேசும் ஆழ்வார் திருக்குடந்தையில் அவன் பள்ளி கொண்ட வடிவழகில் ஈடுபட்டுச் சரணாகதி செய்து நூலைத் தலைக் கட்டுகிறார்.

நம்மாழ்வாரின் திருவிருத்தம் கட்டளைக்கலித்துறையில் அமைந்த அகத்திணை நூலாகும். இருக்கு வேதசாரமாகக் கருதப்படும் இப்பிரபந்தத்தின் முதற்பாசுரம் ஆழ்வார் தம் உடல் தொடர்பைப் போக்க வேண்டும் என்று திருமாலை வேண்டுவதாக அமைவது. அந்தாதித் தொடையாக உள்ள நூறு பாசுரங்களில் முதற்பாசுரமும் கடைசிப் பாசுரமும் நீங்கலாக மற்றவை அகப்பொருள் துறையில் உள்ளவை. ஆழ்வாரின் பக்திச்சுவையே இந்நூலில் காதல் சுவையாக மாறுகிறது. தாய், தோழி, தலைவி ஆகியோர் பேச்சுக்கள் இடம்பெறுகின்றன. ஒவ்வொரு பாசுரத்திலும் ஒரு வெளிப் பொருளும் அதற்கேற்ற உள்ளுறை பொருளும் அமைந்துள்ளதைப் பெரியவாச்சான் பிள்ளையும் நம்பிள்ளையும் தத்தம் உரைகளில் அருமையாகக் காட்டி உள்ளனர். பிறவித்துயர் இல்லாத வீடுபேறே இந்நூல் பயன் என்று நம்மாழ்வார் குறிப்பிடுகிறார்.

நம்மாழ்வாரின் திருவாசிரியம் ஏழு ஆசிரியப் பாக்கள் கொண்டது. யஜுர் வேத சாரம் எனப்படும் இதனுள் எம்பெருமான் வடிவழகு, குணங்கள் இயல்புகள் ஆகியவை, ஆழ்வாரால் அனுபவிக்கப்படுகின்றன. ஸ்ரீமந்நாராயணனின் மேன்மையும் நீர்மையும் இப்பாசுரங்களில் விதந்து பேசப்படுகின்றன. நாராயணபரத்துவமும் தலைமையும் இந்நூற்பொருள் ஆவன.

பெரிய திருவந்தாதி என்னும் நம்மாழ்வாரின் இன்னொரு பிரபந்தம் அதர்வண வேதசாரமாக உள்ளது என்பர். எண்பத்தேழு வெண்பாக்கள் உள்ள இந்நூலில் ஆழ்வார் எம்பெருமானை அனுபவித்த விவரம் பேசப்படுகிறது.எம்பெருமானே! நீ பெரியவன் அல்லன் என் செவி வழிப் புகுந்து எனக்குள் அடங்கி இருப்பதால் நானே உன்னை விடப்பெரியவன் என்று கூறும் ஆழ்வார் தம் அனுபவத்தைப் பெரிதாக விவரிக்கிறார். அதனால் இது 'பெரிய திருவந்தாதி' எனப் பெயர் பெற்றது.

இயற்பாவில் உள்ள கடைசி இருபகுதிகள் திருமங்கை ஆழ்வாரின் சிறிய திருமடலும் பெரிய திருமடலும் ஆகும். திருமங்கை ஆழ்வார் பரகால நாயகியாய் மாறி, மடல் ஊரத் துணிந்ததை வெளியிடுவதே இந்நூல்களின் மையப் பொருளாகும். சிறிய திருமடல் கண்ணனைப் பற்றியும், பெரிய திருமடல் திருநறையூர்ப் பெருமானைப் பற்றியும் அமைந்தவை.

இரு திருமடல்களிலும் பரகாலநாயகி தன் காதல் ஆற்றாமையை விவரிப்பதும், எம்பெருமான் குணங்களைப் பேசுவதும், நூற்பொருள்கள் ஆகின்றன. சிறிய திருமடலில் பரகாலநாயகி, திருவேங்கடம் முதல் வடமதுரை வரை பல திவ்விய தேசங்களுக்குச் சென்று கண்ணன் தீம்புகளை வெளியிடுவதாகக் கூறுகிறாள். இதே போல், பெரிய திருமடலில், திருவிண்ணகர் தொடங்கித் திருநறையூர் மணி மாடக் கோவில் வரை பற்பல திவ்விய தேசங்கள் பேசப்படுகின்றன. கலிவெண்பாவில் அமைந்த இவ்விரு நூல்களும் இசைச் செறிவும் ஓசைநயமும் நெஞ்சை அள்ளும் கவிச்சிறப்பும் பொருந்தியன.

வைணவத்திருக்கோயில்களில் திருவத்யயன உற்சவத்தில் கடைசி நாளில், இயற்பா சேவிக்கப்படுவது வழக்கமாக உள்ளது.

**டாக்டர் மதி. சீனிவாசன்**

# இயற்பா

## உள்ளுரை


| | | | | பக்கம் |
|---|---|---|---|---|
| 1. | பொய்கை ஆழ்வார் | – | முதல் திருவந்தாதி | 1 |
| 2. | பூதத்து ஆழ்வார் | – | இரண்டாம் திருவந்தாதி | 35 |
| 3. | பேயாழ்வார் | – | மூன்றாம் திருவந்தாதி | 69 |
| 4. | திருமழிசை ஆழ்வார் | – | நான்முகன் திருவந்தாதி | 103 |
| 5. | நம்மாழ்வார் | – | திருவிருத்தம் | 135 |
| 6. | நம்மாழ்வார் | – | திருவாசிரியம் | 179 |
| 7. | நம்மாழ்வார் | – | பெரிய திருவந்தாதி | 187 |
| 8. | திருமங்கை ஆழ்வார் | – | திருஎழுகூற்றிருக்கை | 217 |
| 9. | திருமங்கை ஆழ்வார் | – | சிறிய திருமடல் | 225 |
| 10. | திருமங்கை ஆழ்வார் | – | பெரிய திருமடல் | 241 |
| 11. | திருவரங்கத்து அமுதனார் | – | இராமானுஜ நூற்று அந்தாதி | 269 |
| 12. | பாட்டு முதற் குறிப்பு | – | | 304 |

ஸ்ரீ :

# இயற்பா

## நாலாயிர திவ்யப் பிரபந்தம்

பொய்கை ஆழ்வார் அருளிய முதல் திருவந்தாதி

ஸ்ரீ:

## நாலாயிர திவ்யப் பிரபந்தம்

### இயற்பா

பொய்கையாழ்வார் அருளிய

முதல் திருவந்தாதித் தனியன்

கைதை சேர் பூம்பொழில் சூழ் கச்சி நகர் வந்துதித்த
பொய்கைப் பிரான் கவிஞர் போரேறு- வையத்து
அடியவர்கள் வாழ அருந்தமிழ் நூற்றந்தாதி
படிவிளங்கச் செய்தான் பரிந்து.

**- முதலியாண்டான் அருளியது**



ஸ்ரீ:

## நாலாயிர திவ்யப் பிரபந்தம்

### இயற்பா

பொய்கையாழ்வார் அருளிய

முதல் திருவந்தாதித் தனியன் உரை

*தாழம் பூக்கள் மலர்ந்த சோலைகளால் சூழப்பட்ட காஞ்சி நகரில் அவதரித்த பொய்கை ஆழ்வார் கவிஞர்களில் ஏறு போன்றவர். இவ்வுலகில் அடியார்களான வைணவர்கள் வாழ, அரிய தமிழில் ஆன, நூறு அந்தாதிப் பாசுரங்களைப் பாடி, அன்புடன் பூமியில் விளங்கச் செய்தார்.*

**- முதலியாண்டான் அருளியது**

ஸ்ரீ:

## பொய்கை ஆழ்வார் அருளிச்செய்த

### முதல் திருவந்தாதி

வையம் தகளியா, வார் கடலே நெய் ஆக,
வெய்ய கதிரோன் விளக்கு ஆக, -செய்ய
சுடர் ஆழியான் அடிக்கே சூட்டினேன் சொல் மாலை
இடர் ஆழி நீங்குகவே என்று. 2082

என்று கடல் கடைந்தது? எவ் உலகம் நீர் ஏற்றது?
ஒன்றும் அதனை உணரேன் நான்: - அன்று அது,
அடைத்து உடைத்துக் கண்படுத்த ஆழி; இதுநீ
படைத்து இடந்து, உண்டு, உமிழ்ந்த பார். 2083

பார் அளவும் ஓர் அடி வைத்து ஓர் அடியும் பார் உடுத்த
நீர் அளவும் செல்ல நிமிர்ந்ததே;- சூர் உருவின்
பேய் அளவு கண்ட பெருமான்; அறிகிலேன்-
நீ அளவு கண்ட நெறி. 2084

நெறி வாசல் தானேயாய் நின்றானை, ஐந்து
பொறி வாசல் போர்க் கதவம் சார்த்தி, -அறிவானாம்
ஆல மர நீழல் அறம் நால்வர்க்கு அன்று உரைத்த
ஆலம் அமர் கண்டத்து அரன்; 2085

அரன், நாராணன்-நாமம்; ஆன்விடைபுள்-ஊர்தி;
உரை-நூல், மறை; உறையும் கோயில் - வரை நீர்;
கருமம்-அழிப்பு, அளிப்பு; கையது-வேல், நேமி;
உருவம்-எரி கார்;மேனி ஒன்று. 2086

ஒன்றும் மறந்தறியேன் ஓத நீர் வண்ணனை நான்;
இன்று மறப்பனோ, ஏழைகாள்? -அன்று,
கரு அரங்கத்துள் கிடந்து கைதொழுதேன், கண்டேன்
திருவரங்கம் மேயான் திசை. 2087



ஸ்ரீ:

## பொய்கை ஆழ்வார் அருளிச்செய்த

### முதல் திருவந்தாதி

பூமியே அகலாகவும், கடலே நெய்யாகவும், வெப்பக் கதிர்களுடைய சூரியனே விளக்காகவும் சிவந்த ஒளியுடைய சக்கரத்தை ஏந்திய திருமால் திருவடிகளிலே துன்பக் கடல் நீங்குவதற்காக இச்சொல் மாலையைச் சாத்தினேன். 2082

எம்பெருமானே! நீ பாற்கடலைக் கடைந்த நாளையும், உலகத்தை நீர் ஏற்றுப் பெற்றதையும் நான் சிறிதும் அறியேன். இராமனான நீ அக்கடல் மீது அணை கட்டிப் பின் உடைத்தாய். பிறகு எப்படிக் கடல் மீது பள்ளி கொண்டாயோ? பூமியைப் படைத்த நீயே வராகமாய் அதை, உண்டு உமிழ்ந்தாய். இது என்ன ஆச்சரியம்! 2083

பெருமானே! நீ உன் ஒரு திருவடியைப் பூமியில் வைத்ததும், மற்றொன்று அண்டபித்தியைச் சூழ்ந்த நீர் மண்டலம் வரை வளர்ந்தது. பேய் வடிவில் வந்த பூதனையின் உயிருக்கு முடிவு சூழ்ந்தவனே! உன் அரிய செயல்களை நான் அளவிட்டு அறிய இயலாதவன். 2084

ஆலமர நிழலில், அகத்தியர், தட்சர், புலத்தியர், மார்க்கண்டேயர் ஆகிய நால்வருக்கு உபதேசித்த நீலகண்டனான சிவன், தன் ஐம்புலன்களை அடக்கிப் பார்த்தும் திருமாலை அறிய முடியாதவன் ஆனான். உபாயமும், அடையப்படும் முடிவுப் பொருளாகவும் நிற்கும் திருமாலை அவன் அருளில்லாமல் காண முடியாது. 2085

ஒருவன் பெயர் அரன்; இன்னொருவன் பெயர் நாராயணன். அரனுக்கு வாகனம் எருது; நாரணனுக்கு வேதபுருஷனான கருடனே வாகனம். ஆகமம் அரனைக் கூறும்; வேதம் நாராயணனை விவரிக்கும். அரன் அழிக்கிறான்; நாராயணன் காக்கிறான். அரன் கையில் வேலும் நாராயணன் கையில் சக்கரமும் உள்ளன. அரன் தீயை ஒத்தவன்; நாராயணன் மேக நிறத்தான். இவர்களை ஒன்றாகக் கண்டால், அரன் உடம்பாவான்; நாராயணன் அந்த அரனுக்குள்ளே ஆத்மாவாய் உள்ளான். 2086

நான், கருக்குழியில் இருந்த காலத்தே, அரங்கனின் இயல்பையும் குணங்களையும் அவன் அருளால் உணர்ந்து கை தொழுதேன். இறை அனுபவத்தை இழந்த ஏழைகளே! அவன் அருளால் ஞானம் பெற்ற பிறகு இன்று எப்படி அவனை நான் மறப்பேன்.? 2087

திசையும், திசை உறு தெய்வமும், தெய்வத்து
இசையும் கருமங்கள் எல்லாம்-அசைவு இல் சீர்க்
கண்ணன், நெடு மால், கடல் கடைந்த கார் ஓத
வண்ணன் படைத்த மயக்கு. 2088

மயங்க, வலம்புரி வாய் வைத்து, வானத்து
இயங்கும் எறி கதிரோன் தன்னை, -முயங்கு அமருள்,
தேர் ஆழியால் மறைத்தது என் நீ, திருமாலே
போர் ஆழிக் கையால் பொருது ? 2089

பொருகோட்டு ஓர் ஏனமாய்ப் புக்கு இடந்தாய்க்கு அன்று உன்
ஒரு கோட்டின் மேல் கிடந்தது அன்றே-விரி தோட்ட
சேவடியை நீட்டித் திசை நடுங்க விண் துளங்க,
மா வடிவின் நீ அளந்த மண்; 2090

மண்ணும் மலையும் மறி கடலும், மாருதமும்,
விண்ணும் விழுங்கியது மெய் என்பர்;- எண்ணில்,
அலகு அளவு கண்ட சீர் ஆழியாய்க்கு அன்று இவ்
உலகு அளவும் உண்டோ உன் வாய்? 2091

வாய் அவனை அல்லது வாழ்த்தாது; கை உலகம்
தாயவனை அல்லது தாம் தொழா;- பேய் முலை நஞ்சு
ஊண் ஆக உண்டான் உருவொடு பேர் அல்லால்
காணா கண், கேளா செவி. 2092

செவி வாய், கண், மூக்கு, உடல் என்று ஐம் புலனும்; செந்தீ,
புவி, கால், நீர் விண் பூதம் ஐந்தும்;- அவியாத
ஞானமும், வேள்வியும், நல்லறமும் என்பரே
ஏனமாய் நின்றாற்கு இயல்வு! 2093

இயல்வு ஆக, ஈன் துழாயான் அடிக்கே செல்ல
முயல்வார் இயல் அமரர், முன்னம்;- இயல்வு ஆக
நீதியால் ஓதி, நியமங்களால் பரவ
ஆதியாய் நின்றார் அவர். 2094





அளவற்ற அன்புடைய திருமால், பூமி, திசைகள், அங்குள்ள தெய்வங்கள் அவர்கள் செயல்கள் யாவற்றையும் படைத்தான். அவனே கண்ணன்; பாற்கடலைக் கடைந்தவன். மேகநிறமுடைய இத் திருமாலை விட்டு அகன்று, அவன் படைத்த தெய்வங்களை வணங்கு பவரின் அறியாமை மயக்கத்திற்கும் அவனே காரணமாவான். 2088

திருமாலே! நீ பாரதப் போரில் சக்கரத்தை ஏந்திய கையுடன் பீஷ்மரை எதிர்த்தாய். உன்னிடம் அன்புடையார் உகப்பாலும், எதிரிகள் பயத்தாலும் மயங்கினர். திருச் சங்கை வாயில் வைத்து ஊதிய நீ, வானில் உலவும் சூரியனை, உன் சக்கரத்தால் மறைத்தாயே! முறை கெட்ட இச் செயல் அடியாரைக் காக்க அன்றோ? 2089

பெருமானே! உன் இதழ் விரியும் தாமரைத் திருவடிகளைத் திசைகளும், மேல் உலகங்களும் நடுங்கும்படி, வளரச்செய்து பெரிய வடிவில் திரிவிக்கிரமனாகப் பூமியை அளந்தாய். பின், போர் செய்யும் கொம்புடன் வராகமாகிப் பிரளய நீரிலிருந்து பூமியை எடுத்த பொழுது அது உன் கொம்பின் நுனியில் கிடந்ததே! என்ன ஆச்சரியம்! 2090

பூமி, மலைகள், கடல்கள், காற்று, வானம் ஆகியவற்றை நீ உண்டது உண்மை என்று முனிவர் கூறுவர். இதை ஆராய்ந்தால் எல்லையற்ற குணங்களையும் திருச்சக்கரத்தையும் கொண்ட உனக்கு அன்று, உன் வாய் இவ்வுலக அளவு இருந்ததோ? 2091

என் வாய் திருமாலைத் தவிர வேறு எவரையும் வாழ்த்தாது, கைகளோ உலகளந்தவனைத் தவிர வேறு எவரையும் வணங்கா. பூதனைப் பேயின் நஞ்சுமுலை உண்ட கண்ணனின் வடிவத்தை அன்றி வேறு எதையும் கண்கள் காணா; அவன் திருநாமம் அன்றி வேறு எதையும் என் காதுகள் கேட்கமாட்டா. 2092

காது, வாய்,கண், மூக்கு, உடல் என்னும் ஐம்புலன்களும் தீ, பூமி, காற்று, நீர் ,வானம் ஆகிய ஐம்பூதங்களும், குறைவற்ற பக்தி வடிவான ஞானமும், வேள்வியும், ஆத்ம குணங்களும் வராகப் பெருமானை அடைய வழிகள் என்று கூறுகிறார்களே! அப் பெருமானே அவனை அடைய வழியாக இருக்கும்பொழுது இப்படி எண்ணுவது அறிவு கேடு அன்றோ! 2093

எம்பெருமானை அடையத் தகுதி வாய்ந்த நித்திய சூரிகள் தொன்று தொட்டு திருத்துழாய் அணிந்த அவன் திருவடிகளைச் சேர முயல்வார்கள். அல்லாத நம் போல்வாரும் முறைப்படி நாமங்களைக் கூறி சாத்திர விதிப்படி அவனைப் பாடிப் புகழ்ந்தால் அவன் நம்மையும் ஏற்றுக் கொள்ள முற்படுகிறான். 2094

அவர் அவர் தாம் தாம் அறிந்தவாறு ஏத்தி,
இவர் இவர் எம் பெருமான் என்று -சுவர்மிசைச்
சார்த்தியும் வைத்தும் தொழுவர்; உலகு அளந்த
மூர்த்தி உருவே முதல். 2095

முதல் ஆவார் மூவரே; அம் மூவருள்ளும்
முதல் ஆவான் மூரி நீர் வண்ணன்;- முதல் ஆய
நல்லான் அருள் அல்லால், நாம நீர் வையகத்துப்
பல்லார் அருளும் பழுது. 2096

பழுதே பல பகலும் போயின என்று அஞ்சி,
அழுதேன்; அரவு அணைமேல் கண்டு - தொழுதேன்
கடல் ஓதம் கால் அலைப்பக் கண்வளரும் செங்கண்
அடல் ஓத வண்ணர் அடி. 2097

அடியும் படி கடப்ப, தோள் திசைமேல் செல்ல,
முடியும் விசும்பு அளந்தது என்பர்-வடி உகிரால்
ஈர்ந்தான் இரணியனது ஆகம், இருஞ் சிறைப் புள்
ஊர்ந்தான், உலகு அளந்த நான்று. 2098

நான்ற முலைத்தலை நஞ்சு உண்டு, உறி வெண்ணெய்
தோன்ற உண்டான், வென்றி சூழ் களிற்றை - ஊன்றிப்
பொருது உடைவு கண்டானும்,புள்ளின்வாய் கீண்டானும்
மருது இடை போய் மண் அளந்த மால். 2099

மாலும் கருங் கடலே! என் நோற்றாய் வையகம் உண்டு
ஆலின் இலைத் துயின்ற ஆழியான்,- கோலக்
கரு மேனிச் செங்கண் மால் கண்படையுள் என்றும்
திருமேனி நீ தீண்டப்பெற்று? 2100

பெற்றார் தளை கழலப் பேர்ந்து ஓர் குறள் உருவாய்,
செற்றார் படி கடந்த செங்கண் மால்-நல் தா-
மரைமலர்ச் சேவடியை வானவர் கை கூப்பி
நிரை மலர் கொண்டு ஏத்துவரால் நின்று. 2101





ரஜோகுணத்தையும் தமோ குணத்தையும் உடைய சிலர், தத்தம் குணங்களுக்கும் அறிவுக்கும் ஏற்றபடி தங்கள் தெய்வங்களைப் புகழ்ந்து, சுவரில் ஓவியமாகவும் சிலையாகவும் கொண்டு வணங்குவார்கள். ஆயினும், தொழுவோர்கள், தொழப் படுவோர்கள் தலையில் திருவடியை வைத்து உலகளந்த திருமாலே முதன்மை ஆனவன். 2095

பிரமன், விஷ்ணு, சிவன் என்னும் மூவரே முதல் தெய்வங்கள் என்றாலும் அந்த மூவர்களிலும் கடல்நிறத் திருமாலே, அவர்கள் உள் உறையும் முதன்மையன் ஆவான். அவனே அவர்களுக்குக் காரணம் ஆனவன். நன்மைகளைத் கொடுக்கும் அந்த எம்பெருமானுடைய அருளைத் தவிர, கடல் சூழ்ந்த உலகில், மற்ற தெய்வங்களின் அருள், வீணானதே ஆகும். 2096

பாற்கடல் அலைகள், திருவடி, வருடும்படி கண்வளர்ந்த திருமால், கடல் நிறத்தோன். அப்பெருமானின் திருவடிகளை ஆதிசேஷனாகிய படுக்கையின் மேல் கண்டு, இன்று வணங்கினேன். முன் சென்ற நாள்கள் வீணாயிற்றே என்று அஞ்சி அழுதேன். 2097

தன் கூரிய நகத்தால் இரணியன் மார்பைப் பிளந்த, கருடவாகனப் பெருமான், உலகத்தை அளந்தபொழுது, அவன் திருவடிகள் பூமியை அளந்தன. தோள்களோ திசைகளுக்கு மேலே சென்றன. அவன் திருவடி வானை அளந்தது என்று பெரியோர் கூறுவர். நான் இதனைக் கேட்டார் வாய் கேட்டேன், என் தலையிலே அவன் திருவடி வைக்கப் பெறவில்லையே! 2098

பூமியை அளந்த திருமால், கண்ணனாகப் பூதனைப் பேயின் தொங்கிய முலையின் நஞ்சை உண்டான். உறி வெண்ணெய்யைத் திருடி உண்டான். சூழ்ச்சி செய்த குவலயாபீட யானையுடன் போரிட்டு அதனைக் கொன்றான். கொக்கின் வாயைப் பிளந்தான். மருத மரங்கள் நடுவே தவழ்ந்தான் இத்திருவிளையாடல்களை நான் காணப் பெற்றிலேன். 2099

கருங்கடலே! நீ என்ன தவம் செய்தாய்! உலகத்தை உண்டு ஆலந்தளிரில் கண்வளர்ந்த, கறுத்த உடலும் சிவந்த கண்களும் உடைய திருமால் பள்ளி கொள்ளும் பொழுது, உன் உடல் அவனைத் தொடுகிறதே! அதனால் மகிழ்ந்து மயங்குகிறாயோ? 2100

பெற்றோர்களின் விலங்கு கழலுமாறு, திருப்பாற் கடலினின்று இறங்கிய திருமால் கண்ணனாக அவதரித்தான். வாமனனாகப் பூமியை அளந்தான். இந்தச் செங்கண் மாலின் தாமரைத் திருவடிகளை வணங்கித் தேவர்கள் மாலைகள் சூட்டித் துதிப்பார்கள். 2101

நின்று, நிலம் அங்கை நீர் ஏற்று மூவடியால்,
சென்று, திசை அளந்த செங்கண் மாற்கு-என்றும்
படை ஆழி; புள் ஊர்தி; பாம்பு அணையான் பாதம்
அடை ஆழி நெஞ்சே! அறி. 2102

அறியும் உலகு எல்லாம், யானேயும் அல்லேன்
பொறி கொள் சிறை உவணம் ஊர்ந்தாய்!-வெறி கமழும்
காம்பு ஏய் மென்தோளி கடை வெண்ணெய் உண்டாயைத்
தாம்பே கொண்டு ஆர்த்த தழும்பு. 2103

தழும்பு இருந்த-சார்ங்க நாண் தோய்ந்தவாம் அங்கை;
தழும்பு இருந்த-தாள், சகடம் சாடி;-தழும்பு இருந்த
பூங்கோதையாள் வெருவ, பொன் பெயரோன் மார்பு இடந்த
வீங்கு ஓத வண்ணர் விரல். 2104

விரலோடு வாய் தோய்ந்த வெண்ணெய் கண்டு ஆய்ச்சி
உரலோடு உறப் பிணித்த நான்று-குரல் ஓவாது
ஏங்கி நினைந்து, அயலார் காண இருந்திலையே?
ஓங்கு ஓத வண்ணா! உரை. 2105

உரை மேற்கொண்டு என் உள்ளம் ஓவாது எப்போதும்,
வரைமேல் மரதகமே போலத் திரைமேல்
கிடந்தானை, கீண்டானை, கேழலாய்ப் பூமி
இடந்தானை ஏத்தி எழும். 2106

எழுவார், விடைகொள்வார், ஈன் துழாயானை
வழுவாவகை நினைந்து வைகல்-தொழுவார்
வினைச் சுடரை நந்துவிக்கும் வேங்கடமே வானோர்
மனச் சுடரைத் தூண்டும் மலை. 2107

மலையால் குடை கவித்து மா வாய் பிளந்து,
சிலையால் மராமரம் ஏழ் செற்று,- கொலை யானைப்
போர்க் கோடு ஒசித்தனவும் பூங் குருந்தம் சாய்த்தனவும்
கார்க் கோடு பற்றியான் கை. 2108





*வாமனப் பெருமான் மாவலியின் முன் நின்று அழகிய கைகளில் நீர் ஏற்றுப் பூமி தானம் வாங்கி, மூன்று அடிகளாலே திசைகளை அளந்தான். சிவந்த கண்களுடைய இத் திருமாலின் படை, சக்கரம் ஆகும்; கருடனே வாகனம். மனமே! இதை அறிக. திருவனந்தாழ்வானைப் படுக்கையாக உடையவன் பாதங்களை அடைவோம்.* **2102**

*பலவண்ணச் சிறகுகளை உடைய கருடனை வாகனமாகக் கொண்டவனே! மூங்கிலை ஒத்த தோளுடைய யசோதை கடைந்த வெண்ணெய்யை நீ உண்டதால், அவள் கட்டிய கயிற்றால் தழும்பு உண்டாயிற்று. நான் மட்டும் அன்றி உலகம் முழுவதும் இத் தழும்பு பற்றி அறியும்.* **2103**

*பெருமான் கையில் சார்ங்க வில்லின் நாண் தோய்ந்த தழும்பு உள்ளது. அவன் திருவடிகளில் சகடாசுரனை உதைத்த தழும்பு உள்ளது. பூச்சூடிய திருமகள் அஞ்சும்படி இரணியன் மார்பைப் பிளந்த தழும்பு விரலில் உள்ளது. பரப்பாலும் குளிர்ச்சியாலும் நிறத்தாலும் கடலை ஒத்தவனே! உன் திருமேனி அடையாளங்களை மறைக்கப் போமோ?* **2104**

*உன் விரல்களிலும் வாயிலும் படிந்த வெண்ணெய்யைக் கண்ட யசோதை, உரலுடன் உன்னைக் கட்டிய பொழுது, அருகில் இருந்தவர் வேடிக்கை பார்க்கும்படி நீ ஏங்கி அழுதபடி வெண்ணெய் திருடுவதையே நினைத்தாய் அன்றோ? அலைகடல் நிறம் உடையவனே! இதன் உண்மையை நீயே கூறு.* **2105**

*மலைமேல் மரகதம் பதிந்திருப்பது போலப் பாற்கடலில் பள்ளி கொண்டவன், வராகப் பெருமானாய் உலகை அண்ட பித்தியினின்றும் எடுத்துக் காத்தான். இப்பெருமானை என் உள்ளம் எப்பொழுதும் இடைவிடாமல் எண்ணி, அவன் கல்யாண குணங்களை உரைப்பதில் ஈடுபட்டு உய்வு பெறும்.* **2106**

*செல்வம் ஒன்றையே வேண்டுபவரும், ஆத்ம இன்பமான கைவல்யத்தை மட்டுமே விரும்புவரும், தத்தம் விருப்பங்கள் நிறைவேறிய பின் இறைவனை விட்டு அகல்வார்கள். ஆனால், இனிய துழாய் மாலை அணிந்தவனைப் பிரியாமல் இருக்க விரும்புவர், தினமும் அவனை வணங்குவர். திருவேங்கட மலை இம்மூவருடைய வினைகளையும் அழிக்கும். மேலும் அம்மலை, நித்திய சூரிகளின் உள்ளமாகிய விளக்கைத் தூண்டும்.* **2107**

*மேகம் போல் முழங்கும் சங்கைப் பிடித்தவன் திருக்கைகளே, மலையைக் குடையாகப் பிடித்தன. குதிரையாய் வந்த கேசியின் வாயைப் பிளந்ததும் அவையே. வில்லால் மராமரங்களைத் துளைத்த கரங்களும் அவையே. கொல்ல வந்த குவலயாபீட யானையின் கொம்புகளை முறித்த கைகளும் அவையே. அக்கைகளே குருந்த மரத்தைத் தள்ளின.* **2108**

கைய வலம்புரியும் நேமியும்; கார் வண்ணத்து
ஐய! மலர்மகள் நின் ஆகத்தாள்; -செய்ய
மறையான் நின் உந்தியான்; மா மதிள் மூன்று எய்த
இறையான் நின் ஆகத்து இறை. 2109

இறையும் நிலனும் இரு விசும்பும், காற்றும்,
அறை புனலும் செந்தீயும் ஆவான்;-பிறை மருப்பின்
பைங்கண் மால் யானை படு துயரம் காத்து அளித்த
செங்கண் மால் கண்டாய் தெளி. 2110

தெளிது ஆக உள்ளத்தைச் செந்நிறீஇ, ஞானத்து
எளிது ஆக நன்கு உணர்வார் சிந்தை-எளிது ஆகத்
தாய் நாடு கன்றே போல், தண் துழாயான் அடிக்கே
போய் நாடிக்கொள்ளும் புரிந்து. 2111

புரி ஒரு கை பற்றி, ஓர் பொன் ஆழி ஏந்தி,
அரி உருவும் ஆள் உருவும் ஆகி,-எரி உருவ
வண்ணத்தான் மார்பு இடந்த மால் அடியை அல்லால், மற்று
எண்ணத்தான் ஆமோ, இமை? 2112

இமையாத கண்ணால் இருள் அகல நோக்கி,
அமையாப் பொறி புலன்கள் ஐந்தும்-நமையாமல்,
ஆகத்து அணைப்பார் அணைவரே ஆயிர வாய்
நாகத்து அணையான் நகர். 2113

நகரம் அருள்புரிந்து நான்முகற்குப் பூமேல்
பகர மறை பயந்த பண்பன்-பெயரினையே
புந்தியால் சிந்தியாது, ஓதி உரு எண்ணும்
அந்தியால் ஆம் பயன் அங்கு என்? 2114

என், ஒருவர் மெய் என்பர்-ஏழ் உலகு உண்டு, ஆல் இலையில்
முன் ஒருவன் ஆய முகில் வண்ணா!-நின் உருகிப்
பேய்த் தாய் முலை தந்தாள் பேர்ந்திலளால்; பேர் அமர்க் கண்
ஆய்த் தாய் முலை தந்த ஆறு? 2115





திருவேங்கடத்தில் உள்ள மேக நிறப் பெருமானே! வலம்புரிச் சங்கையும் சக்கரத்தையும் கைகளில் ஏந்தினாய். பூமகளான பிராட்டியோ உன் மார்பில் உள்ளாள். செம்மையான வேதத்தை ஓதும் பிரமன் உன் கொப்பூழில் பிறந்தான். முப்புரங்களை அழித்த சிவன் உன் உடம்பின் ஒரு மூலையில் உள்ளான். இவை உன் செல்வமா? நீர்மையைக் காட்டுபவையா! 2109

நெஞ்சமே! பூமி, வானம், காற்று, ஒலிக்கும் நீர், செந்தீ ஆகிய யாவும் ஆனவன் பரமபதநாதன் ஆவான். பிறைக் கொம்பையும் பசுங்கண்களையும் கொண்ட கஜேந்திரனின் துன்பம் நீக்கிக் காத்தவனும் செந்தாமரைக் கண்ணனான திருமாலே என்று தெளிவாக அறிந்து கொள்வாய். 2110

உலகப் பற்றை நீக்கித் தெளிவுடன், உள்ளத்தை நன்கு நிறுத்தி, ஞானத்தால், எளிதாக உணர்பவருடைய மனம், தாயை நாடும் கன்றே போல், திருத்துழாய் மாலை அணிந்த திருமாலின் திருவடிகளையே விரும்பி அடையும். 2111

சங்கு, சக்கரம் இரண்டையும் கைகளில் ஏந்தியவன். நரம் கலந்த சிங்க வடிவில் தோன்றி, தீயின் உருவுடைய இரணியன் மார்பைக் கிழித்தான். அடியார்களிடம் மோகம் உடைய இத்திருமால் திருவடிகளைத் தவிர, வேறொன்றைக் கணப்பொழுதாவது எண்ணத்தான் முடியுமோ! அடியார்க்கு ஆட்பட்ட அவன் எளிமைதான் என்னே! 2112

ஞானம் நிறைந்த உட்கண்ணாகிய மனத்தால், அறியாமை இருள் அகல, ஆத்ம இறைத் தொடர்பை உணர்வது அரியதாகும். ஐம் புலன்களையும் பொறிகளையும் அடக்க முடியாதவர் ஆயினும் இறைவன் அருளால் ஆண்டான்-அடிமை உறவை நினைந்து வழிபடுபவர் ஆயிரவாய் நாகத்தில் பள்ளி கொண்டவனின் வைகுந்தம் அடைவர். 2113

நீர்மைப் பண்புடைய எம் பெருமான் தன் கொப்பூழத் தாமரையைப் பிரமனுக்கு வாழிடமாகக் கொடுத்து பிறரை ஓதுவிக்க, வேதத்தை உபதேசித்தான். இப் பெருமானின் திருநாமங்களை மனத்தால் எண்ணாமல், மந்திரத்தை உருச் செய்து கணக்கு எண்ணும், சந்தியாவந்தனத்தால் என்ன பயன் உண்டாகும்?

முன்பு ஏழுலகங்களையும் வயிற்றில் வைத்து ஆலந்தளிரில் பள்ளி கொண்ட ஒப்பற்ற மேக வண்ணா! தாய் போல் முலை கொடுக்க வந்த பூதனைப் பேய் உன் மடியில் அசையாமல் இறந்து கிடந்தாள். ஒன்றையொன்று போட்டி இடும் கண்களுடைய இடைச்சியாகிய யசோதைத் தாய், உருகிய அன்புடன் உனக்கு முலை கொடுத்தது உண்மை என்று ஞானிகள் கூறுவர். யசோதையின் பரிவு என்னே! 2115

ஆறிய அன்பு இல் அடியார், தம் ஆர்வத்தால்
கூறிய குற்றமாக் கொள்ளல் நீ;-தேறி,
நெடியோய்! அடி அடைதற்கு அன்றேஈர் ஐந்து
முடியான் படைத்த முரண்? 2116

முரணை வலி தொலைதற்கு ஆம் என்றே முன்னம்
தரணி தனது ஆகத்தானே- இரணியனைப்
புண் நிரந்த வள் உகிர் ஆல் பொன் ஆழிக் கையால், நீ
மண் இரந்து கொண்ட வகை? 2117

வகை அறு நுண் கேள்வி வாய்வார்கள், நாளும்,
புகை விளக்கும் பூம் புனலும் ஏந்தி-திசைதிசையின்
வேதியர்கள் சென்று இறைஞ்சும் வேங்கடமே வெண் சங்கம்
ஊதிய வாய் மால் உகந்த ஊர். 2118

ஊரும் வரி அரவம், ஒண் குறவர் மால் யானை
பேர எறிந்த பெரு மணியைக் கார் உடைய
மின் என்று, புற்று அடையும் வேங்கடமே மேல சுரர்
எம் என்னும் மாலது இடம். 2119

இடந்தது பூமி; எடுத்தது குன்றம்;
கடந்தது கஞ்சனை, முன் அஞ்ச;-கிடந்ததுவும்
நீர் ஓத மா கடலே; நின்றதுவும் வேங்கடமே
பேர் ஓத வண்ணர் பெரிது. 2120

பெரு வில் பகழிக் குறவர் கைச் செந்தீ
வெருவிப் புனம் துறந்த வேழம்-இரு விசும்பில்
மீன் வீழக் கண்டு அஞ்சும் வேங்கடமே மேல் அசுரர்
கோன் வீழக் கண்டு, உகந்தான் குன்று. 2121

குன்று அனைய குற்றம் செயினும், குணம் கொள்ளும்,
இன்று முதலாக என் நெஞ்சே!-என்றும்,
புறன் உரையே ஆயினும் பொன் ஆழிக் கையான்
திறன் உரையே சிந்தித்திரு. 2122





பிரிவாலே பொங்கும் பக்தி இல்லாத அடியவர்கள் தம் அன்பால் பலன் கருதிச் சொல்பவற்றை நீ தவறாகக் கொள்ளக் கூடாது. பத்துத் தலைகளைப் பெற்ற இராவணன் உன்னிடம் வைத்த பகை, அடுத்த பிறவியில் அவன் சிசுபாலன் ஆன பிறகு தெளிவு பெற்று உன் திருவடி அடையக் காரணம் ஆயிற்று அன்றோ? 2116

பூமியைத் தன்னுடையது என்று இறுமாந்த இரணியன் புண்படும் படி நீ உன் கூர்மையான நகங்களால் அவனைப் பிளந்தாய்.சக்கரம் ஏந்திய அழகிய அந்தக் கையாலேயே உலகைத் தனதாக்க முனைந்த மாவலியிடம் சென்று பூமியை யாசித்துப் பெற்றாய். இவ்விருசெயல்களும் எங்கள் அகங்கார மமகாரங் களைப் போக்க ஏற்பட்டனவோ? 2117

பயன்கருதிப் பிற தெய்வங்களை வணங்குவதைத் தள்ளும் படியான நுண்ணிய கேள்வி ஞானம் உடைய வேதியர்கள் பல்வேறு திசைகளில் தினமும் தூபம், தீபம், மலர், நீர் ஆகியவற்றை ஏந்தியபடி திருமலைக்குச் சென்று வணங்குவர். வெண்சங்கு ஊதிய வாயுடைய, திருமால் விரும்பி எழுந்தருளியது இத் திருவேங்கட மலையே ஆகும். 2118

திருவேங்கடத்தில் வாழும் குறவர்கள், புனத்தில் மேயும் யானைகளை விரட்ட மாணிக்கத்தை வீசி எறிவார்கள். ஊர்ந்து செல்லும் பாம்புகள் மாணிக்கங்களை மின்னல் என எண்ணித் தம் புற்றுகளில் புகும். மேலான நித்திய சூரிகள் தம்முடைய திவ்விய தேசம் என்று உகக்கும் திருத்தலம் திருவேங்கடம் ஆகும். 2119

கடல் நிறத்திருமால், வராகப் பெருமானாய்ப் பூமியைக் குத்தி எடுத்தார்.கோவர்த்தனமலையைக் குடையாகப் பிடித்தார். கம்சன் அஞ்சும்படி அவனைக் கொன்றார். அலை கடலில் பள்ளி கொண்டார். திருமலையில் தானே உகந்து நின்றார். 2120

அசுரவேந்தன் இரணியனை வதம் செய்து மகிழ்ந்த திருமால், திருவேங்கட மலையில் எழுந்தருளினான். இம் மலையில் வில்லும் அம்பும் உடைய குறவர்கள் தங்கள் கைகளில் பிடித்த சிவந்த நெருப்புப் பந்தங்களுக்குப் பயப்படும் யானைகள் வயலை விட்டு நீங்கும் பொழுது, வானிலிருந்து விழும் விண்மீனைக் கண்டு, கொள்ளிக் கட்டை என்று எண்ணி ஓடும். 2121

என் நல்ல நெஞ்சமே! நீ கூறுவது வெளிப்பேச்சான பொய்யே ஆனாலும் இன்று முதல் சக்கரக் கையனான திருவேங்கட முடையானைப் பற்றி எண்ணத்தையே பேசு. மலை போன்ற பாவங்களை நீ செய்தாலும், எம்பெருமான் அவற்றைக் காணாமல், குணங்களாகவே திருவுள்ளம் பற்றுவான். 2122

திருமகளும் மண்மகளும் ஆய்மகளும் சேர்ந்தால்,
திருமகட்கே தீர்ந்தவாறு என்கொல்-திருமகள் மேல்
பால் ஓதம் சிந்தப் பட் நாகணைக் கிடந்த
மால் ஓத வண்ணர் மனம்? 2123

மன மாசு தீரும்; அரு வினையும் சாரா;
தனம் ஆய தானே கைகூடும்;- புன மேய
பூந் துழாயான் அடிக்கே போதொடு நீர் ஏந்தி,
தாம் தொழாநிற்பார் தமர். 2124

தமர் உகந்தது எவ் உருவம், அவ் உருவம் தானே;
தமர் உகந்தது எப் பேர், மற்று அப் பேர்;-தமர் உகந்து
எவ் வண்ணம் சிந்தித்து இமையாது இருப்பரே.
அவ் வண்ணம் ஆழியான் ஆம். 2125

ஆமே அமரர்க்கு அறிய? அது நிற்க,
நாமே அறிகிற்போம் நல் நெஞ்சே!-பூ மேய
மா தவத்தோன் தாள் பணிந்த வாள் அரக்கன் நீள் முடியை
பாதம் அத்தால் எண்ணினான் பண்பு. 2126

பண் புரிந்த நான்மறையோன் சென்னிப் பலி ஏற்ற
வெண் புரி நூல் மார்பன் வினை தீர,-புண் புரிந்த
ஆகத்தான் தாள் பணிவார் கண்டீர் அமரர் தம்
போகத்தால் பூமி ஆள்வார். 2127

வாரி சுருக்கி மதக் களிறு ஐந்தினையும்
சேரி திரியாமல் செந்நிறீஇ,-கூரிய
மெய்ஞ்ஞானத்தால் உணர்வார் காண்பரே மேல் ஒருநாள்
கைந் நாகம் காத்தான் கழல். 2128

கழல் ஒன்று எடுத்து, ஒரு கை சுற்றி, ஓர் கைமேல்
சுழலும் சுராசுரர்கள் அஞ்ச,- அழலும்
செரு ஆழி ஏந்தினான் சேவடிக்கே செல்ல
மருவு ஆழி நெஞ்சே! மகிழ். 2129





பாற்கடல் சிறுதுளிகள் சிதறவும் படநாகத்தின் மேல் பள்ளி கொண்ட, கடல்நிறத் திருமால், திருமகள், பூமாதேவி நப்பின்னை என்னும் நீளாதேவி ஆகிய மூவருடன் சேர்ந்துள்ளான். எனினும் அவன் திருமகளிடம் வைத்த அன்பு, மற்றைய, இருவருடன் கலக்கும் பொழுது திருமகளுக்கு மட்டுமே அற்றுத் தீர்ந்தது என்ன வியப்பு? 2123

பூத்தவாறே பொலியும் துழாய் சூடிய திருமாலின் திருவடிகளில் அடியார்கள் நீருடன் மலர் தூவித் தொழுவார்கள். ஆதலால், அவர்கள் மனத்து அறியாமை முதலிய அழுக்குகள் தொலையும்; அகலாத வினைகளும் கூட அணுகா. பக்திச் செல்வம் தானே வரும். 2124

சக்ரதாரியான பகவான், அடியார்கள் விரும்புகிற உருவத்தைத் தானே அடைகிறான். மேலும் அந்த பக்தர்கள் விரும்பிய பெயரையே அடைகிறான். அவர்கள் எவ்வாறு விரும்பி இடை விடாமல் தியானம் செய்வாரோ, அவ்வித மாகவே ஆகி விடுகிறான். 2125

நல்ல நெஞ்சே! தீய அரக்கன் இராவணன், திருமால் கொப்பூழில் வாழும் பிரமன்' திருவடிகளை வணங்கினான். அப்பொழுது குழந்தையாய்த் தோன்றிப் பிரமன் மடியில் அமர்ந்த திருமால், தன் பாதத்தால், அரக்கனின் பத்துத் தலைகளையும் எண்ணிக் காட்டி அவற்றின் அழிவை உணர்த்தினான். இத்திருமாலின் குணங்களைத் தேவர்கள் அறிவாரோ? நாமோ அவன் அருளால் அவன் குணங்களை அறிவோம். 2126

வெளுத்த பூணூலை மார்பில் அணிந்த சிவன் இசை பொருந்திய நான்கு வேதங்களை ஓதும் பிரமனுடைய கபால ஓட்டில் பிச்சை வாங்கினான். அச்சிவனின் சாபம் அகலச் செய்த திருமாலின் உள்ளம் அவனுக்காகப் புண்பட்டது. இத்திருமாலின் திருவடிகளைப் பணிவார், நித்தியசூரிகளின் இன்பத்தை இவ்வுலகிலேயே அடைவார்கள். 2127

இன்பம் தரும் ஐம்புலன்கள் மதநீருடைய ஐந்து யானைகள் போன்றவை. இன்பமாகிய மதநீரைக் குறைத்து, ஐம்புல யானைகளை, ஒலி, ஓசை முதலிய ஐந்து சுவைகளில் செல்லாதபடி நிறுத்தி, நுட்பமான பக்தி வடிவ ஞானத்தால் பகவானை அறிய வல்லவர், முன்பு கஜேந்திரனைக் காத்த திருமால் திருவடிகளைக் காண்பார். 2128

தேவர்களும் அசுரர்களும் கலங்கிய படி நோக்க, எம்பெருமான் தன் ஒரு காலை வானுலகு வரை வளரும் படி நீட்டியவாறே, கையால் நமுசியைச் சுழற்றினான்.இன்னொரு கையில் தீ உமிழும் போர்ச் சக்கரத்தை ஏந்தி நின்றான். கடல் போன்ற ஆழமான நெஞ்சே! இப் பெருமானின் சிவந்த திருவடிகளை அடைய நீ மகிழ்ந்து விரும்பு. 2129

மகிழ் அலகு ஒன்றே போல், மாறும் பல் யாக்கை
நெகிழ முயல்கிற்பார்க்கு அல்லால்-முகில் விரிந்த
சோதிபோல் தோன்றும் சுடர் பொன் நெடி முடி எம்
ஆதி காண்பார்க்கும் அரிது. 2130

அரிய புலன் ஐந்து அடக்கி, ஆய் மலர் கொண்டு, ஆர்வம்
புரிய பரிசினால் புல்கில்,-பெரியனாய்
மாற்றாது வீற்றிருந்த மாவலிபால் வண் கை நீர்
ஏற்றானைக் காண்பது எளிது. 2131

எளிதில் இரண்டு அடியும் காண்பதற்கு, என் உள்ளம்
தெளிய, தெளிந்தொழியும் செவ்வே;-களியில்
பொருந்தாதவனைப் பொரல் உற்று, அரியாய்
இருந்தான் திருநாமம் எண். 2132

எண்மர், பதினொருவர், ஈர் அறுவர், ஓர் இருவர்
வண்ண மலர் ஏந்தி, வைகலும்-நண்ணி,
ஒரு மாலையால் பரவி, ஓவாது, எப்போதும்,
திருமாலைக் கைதொழுவர் சென்று. 2133

சென்றால் குடை ஆம்; இருந்தால் சிங்காசனம் ஆம்;
நின்றால் மரவடி ஆம்; நீள் கடலுள்-என்றும்
புணை ஆம்; மணி விளக்கு ஆம்; பூம் பட்டு ஆம்; புல்கும்
அணை ஆம் திருமாற்கு அரவு. 2134

அரவம் அடல் வேழம் ஆன், குருந்தம், புள் வாய்,
குரவை, குடம், முலை, மல், குன்றம்-கரவு இன்றி,
விட்டு, இறுத்து, மேய்த்து ஓசித்து கீண்டு, கோத்து ஆடி உண்டு.
அட்டு, எடுத்த செங்கண் அவன். 2135

அவன் தமர் எவ் வினையர் ஆகிலும் எம்கோன்
அவன் தமரே என்று ஒழிவது அல்லால், -நமன் தமரால்
ஆராயப்பட்டு அறியார் கண்டீர்-அரவு அணைமேல்
பேர் ஆயற்கு ஆட்பட்டார் பேர். 2136





மகிழ மரத்தின் விதை காணி என்னும் மிகச்சிறியதையும் கோடி என்னும் மிகப் பெரியதையும் கணக்கில் வைப்பது போல, மாறி மாறி வரும் பல உடல்களைப் பெறும் பிறவி வராதவாறு முயல்பவர்களே பகவானை அடைய முடியும். மலர்ந்த ஒளியாய், அழகிய திருமுடியுடன் விளங்கும், ஆதி காரணனான இறைவனை மற்றவர்களால் காண இயலாது. 2130

அடக்க முடியாத ஐம்புலன்களையும் அடக்கி, மலர்களை இட்டுப் பக்தி வழியில் நின்று தொழுதால், கொடுப்பதில் மாறாதிருந்த மாவலியிடம், நீர் ஏற்ற திருமாலைக் கண்டு வணங்குவது எளிதாகும். 2131

என்நெஞ்சே! இறைவனின் இரு திருவடிகளையும் எளிதில் வணங்கத் தக்கபடி நீ தெளிவு அடைந்தால், அவனும் நன்றாக மகிழ்ந்து ஏற்பான். செருக்குடன் எதிர்த்த இரணியனுடன் போரிட்டு, அவனை வதைத்த நரசிம்மப் பிரானின் திருநாமத்தை நீ எப்பொழுதும் எண்ணிப் பார். 2132

எட்டு வசுக்கள், பதினொரு உருத்திரர், பன்னிரண்டு சூரியர், இரட்டையரான அசுவினி தேவர்கள் ஆகியோர் பலநிறப் பூக்களுடன் தினமும் வழிபட்டு புருஷஸூக்தம் என்னும் மாலையாலே எப்பொழுதும் திருமாலைத் துதிப்பார்கள். 2133

திருவனந்தாழ்வான் பிராட்டியுடன் கூடிய பெருமாளுக்கு அவர் செல்லும் பொழுது குடை ஆவான். அவர் இருந்தால் சிம்மாசனம் ஆவான். நின்றால் அவருடைய பாதுகை ஆவான். பரந்த கடலில் படுத்துறங்கத் தெப்பம் ஆவான். மங்கள விளக்காவான். அவருக்குப் பூம்பட்டாவான். அவர் தழுவிக் கொள்ளத் தலைஅணையும் ஆவான். 2134

செந்தாமரைக் கண்ணன் காளிய நாகத்தைப் பொய்கையி விருந்து விரட்டினான். வலிமை பெற்ற குவலயாபீட யானையின் கொம்பை ஒடித்தான்; பசுக்களை மேய்த்தான். குருந்த மரத்தை ஒடித்தான்; கொக்காக வந்த அசுரன் வாயைப் பிளந்தான். குரவைக் கூத்தும் குடக்கூத்தும் ஆடினான். பூதனையின் முலைப் பாலை உண்டான். மல்லர்களைக் கொன்றான். மலையைக் குடையாகத் தூக்கினான். என்னென்ன செயல்கள் இவை! 2135

பாற்கடலில் பள்ளி கொண்டபின், கண்ணனாக அவதரித்த திருமாலின் அடியார் பெயர்களையோ வினைகளையோ யமதூதர் விசாரணை செய்யார். பாகவதன் அல்லாதவனும் பாகவதன் பெயர் கொண்டால் அவனையும் ஆராய மாட்டார்கள். திருமால் அடியார்கள் எம் தலைவனுக்குப் பக்தர்களே! என்று புகழ்ந்து ஒதுங்குவார்கள் . 2136

பேரே வரப் பிதற்றல் அல்லால், எம் பெம்மானை
ஆரே அறிவார்? அது நிற்க, -நேரே
கடிக் கமலத்துள் இருந்தும் காண்கிலான் கண்ணன்
அடிக்கமலம் தன்னை அயன். 2137

அயல் நின்ற வல் வினையை அஞ்சினேன்; அஞ்சி
உய, நின் திருவடியே சேர்வான்,-நயம் நின்ற
நல் மாலை கொண்டு நமோ நாரணா என்னும்
சொல்-மாலை கற்றேன் தொழுது. 2138

தொழுது மலர் கொண்டு, தூபம் கை ஏந்தி,
எழுதும்; எழு வாழி, நெஞ்சே!- பழுது இன்றி
மந்திரங்கள் கற்பனவும் மால் அடியே கைதொழுவான்;
அந்தரம் ஒன்று இல்லை, அடை 2139

அடைந்த அரு வினையோடு அல்லல், நோய், பாவம்
மிடைந்தவை மீண்டு ஒழிய வேண்டில்,-நுடங்கு இடையை
முன் இலங்கை வைத்தான் முரண் அழிய, முன் ஒரு நாள்,
தன் வில் அங்கை வைத்தான் சரண். 2140

சரணா மறை பயந்த தாமரையானோடு,
மரண் ஆய மன் உயிர்கட்கு எல்லாம் அரண் ஆய
பேர் ஆழி கொண்ட பிரான் அன்றி, மற்று அறியாது
ஓர் ஆழி சூழ்ந்த உலகு. 2141

உலகும், உலகு இறந்த ஊழியும் ஒண் கேழ்
விலகு கருங் கடலும், வெற்பும்- உலகினில்
செந்தீயும், மாருதமும், வானும் திருமால் தன்
புந்தியில் ஆய புணர்ப்பு. 2142

புணர் மருதின் ஊடு போய், பூங் குருந்தம் சாய்த்து,
மணமருவ மால் விடை ஏழ் செற்று- கணம் வெருவ
ஏழ் உலகும் தாயினவும் எண் திசையும் போயினவும்
சூழ் அரவப் பொங்கு அணையான் தோள். 2143





*திருநாமத்தைக் கூறி அழைத்துப் பிதற்றுவது தவிர எம் பெருமானை யாரால் அறியமுடியும்? அது நிற்க; திருமால் அருகிலேயே மணம் வீசும் தாமரையில் இருந்தும், பிரமன், கண்ணனான திருமாலின் திருவடிகளைக் காண மாட்டான்.* 2137

*அருகிலிருந்து போகாத என் பெரிய பாவங்களுக்குப் பயப் பட்டேன்; உய்வு பெறுவதற்கு, உன் திருவடி அடைய வேண்டும் என்று சொல் தொடரிலே சாத்திரவடிவான இப்பிரபந்த மாலை கொண்டு தொழுது, திருஎட்டெழுத்தான ஓம் நமோ நாராயணாய மந்திரத்தைக் கற்றுப் பயின்றேன்.* 2138

*மனமே! நீ வாழ்க! பூவையும் புகையையும் கையில் எடுத்துத் தொழுது நாம் உய்வு பெறலாம். எழுந்திரு. பகவான் மந்திரங் களைக் கற்பதற்கும் இடைவிடாமல் அவன் திருவடிகளைக் கைகளால் தொழுவதற்கும் காலதாமதம் செய்யக் காரணம் இல்லை. எனவே விரைவில் அவனை நெருங்கு.* 2139

*துவளும் இடை உடைய சீதையை இலங்கையில் சிறை வைத்த இராவணனை அழிக்கவே, ஸ்ரீராமன் தன் கையில் வில் ஏந்தினான். வந்தேறியான நம்முடைய கொடிய அறிவின்மை, மனத் துன்பம், உடல் நோய் ஆகிய பாவங்கள் ஒழிய வேண்டுமானால், இராம பிரானே உபாயமும் புகலும் ஆவான்.* 2140

*வேதத்தை உபாயமாக, உபதேசிக்கப்பெற்ற, பிரமன் அடங்கலும் மரணத்தை இயல்பாகக் கொண்ட நித்தியமான உயிர்கள் எல்லாவற்றுக்கும், திருமாலே காப்பு ஆவான். இவ் வுண்மையை சக்கரத்தை ஏந்திய பெருமானைத் தவிர, கடல் சூழ்ந்த உலகிலுள்ள தாழ்ந்தோர், உயர்ந்தோர் யாவருமே அறியார்கள்.* 2141

*அனைத்து உலகங்களும், அவை அழிந்தாலும் நிற்கும் ஊழிக் காலமும், கறுத்த அலை கடலும், மலைகளும் நெருப்பு, காற்று, வானம் ஆகியனவும் திருமாலின் எண்ண மாத்திர முடிவாலே உண்டாயின. அவனே காரணன்.* 2142

*திருவனந்தாழ்வானைப் படுக்கையாகப் பெற்ற திருமாலின் திருத்தோள்கள் மருதமரங்கள் ஊடு தவழ்ந்தன. குருந்த மரத்தைத் தள்ளின. நப்பின்னையை மணக்க ஏழு எருதுகளைக் கொன்றன. தேவர்களும் அசுரர்களும் அஞ்ச, ஏழுலகங்களையும் கடந்து எட்டுத் திசைகளிலும் பரந்தன. இந்த எம்பெருமானே நம் துன்பங்களைக் களைந்து காப்பான்.* 2143

தோள் அவனை அல்லால் தொழா; என் செவி இரண்டும்
கேள் அவனது இன் மொழியே கேட்டிருக்கும்;- நா நாளும்
கோள் நாகணையான் குரை கழலே கூறுவதே;
நாணாமை நள்ளேன் நயம். 2144

நயவேன் பிறர் பொருளை; நள்ளேன் கீழாரோடு;
உயவேன் உயர்ந்தவரோடு அல்லால்;- வியவேன்;
திருமாலை அல்லது தெய்வம் என்று ஏத்தேன்;
வரும் ஆறு என் என்மேல் வினை? 2145

வினையால் அடர்ப்படார்; வெந் நரகில் சேரார்;
தினையேனும் தீக்கதிக்கண் செல்லார்-நினைதற்கு
அரியானை, சேயானை ஆயிரம் பேர்ச் செங்கண்
கரியானைக் கைதொழுதக்கால். 2146

காலை எழுந்து உலகம் கற்பனவும், கற்று உணர்ந்த
மேலைத் தலை மறையோர் வேட்பனவும், வேலைக்கண்
ஓர் ஆழியான் அடியே; ஓதுவதும் ஓர்ப்பனவும்
பேர் ஆழி கொண்டான் பெயர். 2147

பெயரும் கருங் கடலே நோக்கும் ஆறு; ஒண் பூ
உயரும் கதிரவனே நோக்கும்;- உயிரும்
தருமனையே நோக்கும்; ஒண் தாமரையாள் கேள்வன்
ஒருவனையே நோக்கும் உணர்வு. 2148

உணர்வார் ஆர் உன் பெருமை ஊழிதோறு ஊழி
உணர்வார் ஆர் உன் உருவம்-தன்னை? உணர்வார் ஆர்-
விண்ணகத்தாய்! மண்ணகத்தாய்! வேங்கடத்தாய்! நால்வேதப்
பண்ணகத்தாய்! நீ கிடந்த பால்? 2149

பாலன் தனது உருவாய், ஏழ் உலகு உண்டு ஆல் இலையின்
மேல் அன்று நீ வளர்ந்த மெய் என்பர்; -ஆல் அன்று
வேலை நீர் உள்ளதோ? விண்ணதோ? மண்ணதோ?
சோலை சூழ் குன்று எடுத்தாய்! சொல்லு. 2150





*தோள்களுடன் இணைந்த என் கைகள். திருமாலை அன்றி வேறு எவரையும் தொழ மாட்டா. என் இரு காதுகளும் அவன் இனிய சொற்களையே கேட்கும். தினமும் என் நா, திருவனந்தாழ்வான் மேல் கண் வளர்பவனின் திருவடிகளையே துதிக்கும். உலகத்தார் விரும்பும் புலன் இன்பங்களை அணுக வெட்கப்படுவேன்.* **2144**

*திருமாலுக்கே உரிமையான ஆத்மாவை என் பொருளாக ஆசைப்படேன். உலக வாழ்விலே உழல்பவருடன் சேராமல் ஸ்ரீவைஷ்ணவ அடியார்களுடனேயே உறவு கொள்வேன். திருமகள் கேள்வனை அன்றி, வேறு தெய்வங்களை வியந்து துதியேன். இப்படி ஆன பின்பு பாவங்கள் என்மேல் எவ்வழியில் வரமுடியும்? வாரா.* **2145**

*சிவந்த கண்களும், கரிய மேனியும், ஆயிரம் பெயர்களும் உடைய திருமாலை, எவரும் அவனருள் இன்றித் தன் முயற்சியால் அறிய முடியாது. அவனோ வெகு தொலைவில் உள்ளவன். இத்தகைய எம் பெருமானைக் கைகளால் வணங்குபவர் வினையால் துன்புறார். கொடிய நரகை அடையார். சிறிதளவு கூடத் தீய வழிகளில் செல்லார்.* **2146**

*மோட்சத்தை விரும்புபவர் சாத்துவீக குணத்துக்கேற்ற காலையில் விழித்து எழுந்து பயில்வதும், படித்தறிந்த வேதியரான மேலோர் காண ஆசைப்படுவதும், திருப்பாற்கடலில் கண் வளரும் திருமாலின் திருவடிகளே ஆகும். இச் சான்றோர்கள் கேட்பவையும் நினைப்பவையும் அந்தச் சக்ரதாரியின் திருநாமங்களே ஆகும்.* **2147**

*ஆறு, கறுத்த அலை கடலையே நோக்கிச் செல்லும். ஒளி உள்ள தாமரைப்பூ உயரத்தில் உள்ள சூரியனைப் பார்த்தே மலரும். திருமாலுக்கு ஆட்படாத ஆத்மாக்களோ மரணத்தில் யமனையே அடையும் . இவற்றைப் போலவே ஞானம் ஒளித் தாமரையில் உள்ள திருமகளின் கணவனான நாராயணனை மட்டும் அறியும்.* **2148**

*ஸ்ரீவைகுண்டத்தில் இருப்பவனே! நீர்மைக்குணத்தால் பூமியில் அவதரிப்பவனே! உலகினர்க்காகத் திருவேங்கடத்தில் வந்து நிற்பவனே! இசையுடன் கூடிய நான்கு வேதங்களில் விளங்குபவனே! உன் மேன்மையை யாரால் அறிய முடியும்? ஊழிக் காலந்தோறும் ஆராய்ந்தாலும் உன் இயல்பையும் வடிவத்தையும் யார் அறிவார்! நீ பள்ளி கொண்ட பாற்கடலை உணர்ந்து அளவிட்டு அறிய முடியுமோ!* **2149**

*சிறுகுழந்தையாய் ஏழுலகங்களையும் உண்டு ஆலந்தளிரில் பிரளய காலத்தில் நீ கண் வளர்ந்தது உண்மை என்று கூறப்படுகிறதே! அப்போது எல்லாம் உன் வயிற்றுள் அடங்கிய பின் அந்த ஆலந்தளிர் மட்டும் எப்படிக் கடல் மீது கிடந்தது? அல்லது வானில் தனியாக இருந்ததா? அல்லது கரைந்து போன பூமியில் தனிப்பட்டதோ! இதெப்படி அதிசயமாக உள்ளதே! சோலை சூழ்ந்த கோவர்த்தன மலையைத் தூக்கியவனே! சொல்.* **2150**

சொல்லும் தனையும் தொழுமின், விழும் உடம்பு
செல்லும் தனையும் திருமாலை- நல் இதழ்த்
தாமத்தால் வேள்வியால், தந்திரத்தால், மந்திரத்தால்
நாமத்தால் ஏத்துதிரேல், நன்று. 2151

நன்று பிணி மூப்புக் கையகற்றி, நான்கு ஊழி
நின்று நிலம் முழுதும் ஆண்டாலும்- என்றும்
விடல், ஆழி நெஞ்சமே! வேண்டினேன் கண்டாய்-
அடல் ஆழி கொண்டான்மாட்டு அன்பு. 2152

அன்பு ஆழியானை அணுகு என்னும்; நா அவன் தன்
பண்பு ஆழித் தோள் பரவி ஏத்து என்னும்-முன்பு ஊழி
காணானைக் காண் என்னும் கண்: செவி கேள் என்னும்
பூண் ஆரம் பூண்டான் புகழ். 2153

புகழ்வாய், பழிப்பாய், நீ பூந் துழாயானை;
இகழ்வாய், கருதுவாய், நெஞ்சே-திகழ் நீர்க்
கடலும் மலையும் இரு விசும்பும், காற்றும்,
உடலும், உயிரும் ஏற்றான். 2154

ஏற்றான், புள் ஊர்ந்தான்; எயில் எரித்தான், மார்வு இடந்தான்;
நீற்றான், நிழல் மணி வண்ணத்தான்;-கூற்று ஒருபால்
மங்கையான், பூ மகளான்; வார் சடையான், நீள் முடியான்;
கங்கையான், நீள் கழலான் காப்பு. 2155

காப்பு உன்னை உன்னக் கழியும்; அரு வினைகள்-
ஆப்பு உன்னை உன்ன அவிழ்ந்தொழியும்;- மூப்பு உன்னைச்
சிந்திப்பார்க்கு இல்லை; திருமாலே! நின் அடியை
வந்திப்பார் காண்பர் வழி. 2156

வழி நின்று நின்னைத் தொழுவார் வழுவா
மொழி நின்ற மூர்த்தியரே ஆவர்;- பழுது ஒன்றும்
வாராதவண்ணமே விண் கொடுக்கும் மண் அளந்த
சீரான் திருவேங்கடம். 2157





நாக்குச் சொல்லப் பாங்கான பொழுதெல்லாம் திருமால் நாமத்தைச் சொல்லி வணங்குங்கள். அழியும் உடம்பு இருக்கும் வரை, இதழுடன் கூடிய பூமாலை கொண்டோ, வேள்வி செய்தோ, மந்திரமற்ற கிரியைகளாலோ, ஒன்றும் முடியாவிட்டால், திருநாமத்தைக் கூறியோ, துதிப்பீர்களாகில் நன்மை உண்டாகும். 2151

ஆழமான மனமே! நோயையும் கிழத் தன்மையையும் போக்கி, நான்கு யுகங்களிலும் உலகம் முழுவதையும் ஆளும் செல்வத்தையும், அதற்கும் மேலாகக் கைவல்யத்தையும் பெற்றாலும், போரில் வல்ல சக்கரத்தை ஏந்திய திருமாலிடம் பக்தி கொள்வதை விட்டு விடாதே. இதுதான் நான் உன்னிடம் வேண்டுவது. 2152

அன்பு நிறைந்த நெஞ்சமோ ‘சக்கரம் ஏந்திய திருமாலை அடைவாய்’ என்று சொல்லும். நாக்கோ, ‘அவன் அழகுத் தோள்களை ஏத்தித் துதிப்பாய்’ என்கிறது. ஊழிக் காலம் கடந்த பெருமானைக் கண், ‘காண்பாய்’ என்று கூறும். காதோ, ‘முத்துமாலை அணிந்த அவன் புகழைக் கேட்பாய்’ என்று சொல்லும். 2153

என் மனமே! நீ, திருத்துழாய் மாலை அணிந்த திருமாலைப் புகழ்ந்தாலும் சரி; அன்றிப் பழித்து இகழ்ந்தாலும் சரி. இல்லையாயின் எண்ணினாலும் சரி. நீ எதைச் செய்தாலும் அவன் எல்லாவற்றுள்ளும் உள்ளவன். நீருடைய கடல், மலை, வானம், காற்று ஆகிய காரணப் பொருள்களையும், உடலையும் ஆத்மாவையும் ஏற்றுக் கொண்ட ஆதி முதல்வன் அவனே. 2154

காளை வாகனம் கொண்ட சிவன் முப்புரங்களை எரித்தவன், சாம்பல் பூசியவன்; உடல் பாதியில் பெண்ணைக் கொண்டவன்; சடையையும் அதில் கங்கையையும் உடையவன். ஆயின் இச்சிவனைக் காக்கும் திருமாலோ வேத புருஷனான கருடனை வாகனமாகப் பெற்றவன்; இரணியன் மார்பைக் கிழித்தவன்; நீலமணி நிறத்தன்; திருமகளை மார்பில் கொண்டவன்; திருமுடியுடன் கங்கையின் பிறப்பிடமாகிய திருவடி கொண்டவன். ஆகவே திருமாலே சிவனின் ஆத்மாவாய் அவன் உள்ளிருந்து காக்கும் பேரிறைவன் ஆவான். 2155

திருமாலே! உன்னைத் தியானித்தால், காவல் தெய்வங்கள் நீங்குவர்; வினைகள் வேருடன் அழியும். உன்னைச் சிந்திப்பவர்க்கு மூப்பு இல்லை. உன் திருவடியை வணங்குபவர்கள் பரமபதம் செல்லும் அர்ச்சிராதி வழியைக் காண்பார்கள். 2156

பக்தி நெறியில் நின்று உன்னைத் தொழுபவர், பொய்யற்ற வேதத்தில் சொல்லப்பட்ட வடிவத்தைப் பெறுவர். உலகளந்த நீர்மை உடையவனின் திருவேங்கட மலை, குறை ஒன்றும் வராதபடி, பரமபதத்தையே அளிக்கும் அன்றோ! 2157

வேங்கடமும், விண்ணகரும் வெஃகாவும் அஃகாத
பூங் கிடங்கின் நீள் கோவல் பொன் நகரும்- நான்கு இடத்தும்
நின்றான், இருந்தான், கிடந்தான், நடந்தானே
என்றால், கெடுமாம் இடர். 2158

இடர் ஆர் படுவார்? எழு நெஞ்சே! வேழம்
தொடர் வான் கொடு முதலை சூழ்ந்த- படம் உடைய
பைந் நாகப் பள்ளியான் பாதமே கைதொழுதும்
கொய்ந் நாகப் பூம் போது கொண்டு. 2159

கொண்டானை அல்லால் கொடுத்தாரை யார் பழிப்பார்?
மண் தா என இரந்து மாவலியை-ஒண் தாரை
நீர் அங்கைதோய, நிமிர்ந்திலையே நீள் விசும்பில்
ஆரம் கை தோய அடுத்து? 2160

அடுத்த கடும் பகைஞற்கு ஆற்றேன் என்று ஓடி
படுத்த பெரும் பாழி சூழ்ந்த-விடத்து அரவை
வல்லாளன் கைக் கொடுத்த மா மேனி மாயவனுக்கு
அல்லாதும் ஆவாரே-ஆள். 2161

ஆள் அமர் வென்றி அடு களத்துள் அஞ்ஞான்று
வாள் அமர் வேண்டி வரை நட்டு, நீள் அரவைச்
சுற்றிக் கடைந்தான் பெயர் அன்றே தொல் நரகைப்
பற்றிக் கடந்தும் படை? 2162

படை ஆரும் வாட் கண்ணார் பாரசி நாள் பைம் பூந்
தொடையலோடு ஏந்திய தூபம்- இடை இடையில்
மீன் மாய, மாசூணும் வேங்கடமே மேலொருநாள்
மான் மாய எய்தான் வரை. 2163

வரை குடை தோள் காம்பு ஆகஆ-நிரை காத்து, ஆயர்
நிரை விடை ஏழ் செற்ற ஆறு என்னே?- உரவு உடைய
நீர் ஆழியுள் கிடந்து நேர் ஆம் நிசாசரர்மேல்
பேர் ஆழி கொண்ட பிரான்? 2164





எம்பெருமான் திருவேங்கடத்தில் நின்றான்; ஸ்ரீவைகுண்டத்தில் இருந்தான். திருவெஃகாவில் பள்ளி கொண்டான்; எப்பொழுதும் பூக்கள் உள்ள அகழிகள் சூழ்ந்த திருக்கோவலூரில் நடந்தான். இச் செயல்களைக் கூறித் துதித்தால், நாம் நிற்கும் பொழுதும் இருக்கும் பொழுதும் கிடக்கும் பொழுதும், நடக்கும் பொழுதும் செய்யும் பாவங்கள் கெடும். 2158

படமுடைய ஆதிசேடன் மீது பள்ளி கொண்ட திருமால், கஜேந்திரனைத் தொடர்ந்து பற்றிய முதலையைக் கொன்றான். நெஞ்சமே! நீ எழு. இப்பெருமானின் பாதத்தில் புன்னைப் பூக்களை இட்டு வணங்குவோம். இப்படித் தொழுதால் துன்பம் இல்லை. 2159

பெருமானே! ‘பூமியைக் கொடு’ என்று மாவலியிடம் கேட்டு, நீர்த் தாரைகள் உன் கையில் விழுந்ததும், வானத்துத் தேவர்கள் உன் தோள்களை அணையும்படி, நீ பெரிய வடிவில் வளர்ந்தாயே! உனக்குச் சொந்தமான உலகையே பெற்ற உன்னை உலகோர் பழிக்கிறார்கள். தன்னுடைமை இல்லாத உலகை உனக்கு வழங்கிய மாவலியைப் பழிப்பவர் யார் உள்ளார்? 2160

சுமுகன் என்னும் விஷப் பாம்பு, இயல்பாகவே தனக்குப் பகைவனான கருடனிடமிருந்து பிழைப்பதற்காகத் திருமாலின் படுக்கையைச் சுற்றிக் கொண்டது. பெருமான், அதைக் கருடனிடமே அடைக்கலமாகக் கொடுத்துக் காத்தானே! இத்தகைய ஆச்சரியமான செயல்களைச் செய்யும், சிறந்த திருமேனி உடைய திருமாலுக்கு அன்றி, மற்றவர்க்கு ஆட்படலாமோ! 2161

வீரர் நிறைந்த தேவாசுரப் போர்களத்தில், மதிப்புடைய பூசலை வேண்டி, தேவர்கள் வெற்றிக்காகத் திருமால், மந்தர மலையை மத்தாகவும், வாசுகிப் பாம்பைக் கயிறாகவும் கொண்டு பாற்கடலைக் கடைந்தான். இப்பெருமானின் திருநாமங்களே நம்மை அள்ளி எடுத்துத் தொன்மையான நரகங்களைத் தாண்டுவிக்கும் படையான உபாயம் ஆகும். 2162

திருவேங்கடத்தில் துவாதசி அன்று, வாள் போன்ற ஒளிக் கண்களுடைய பெண்கள், பூமாலையுடன் தூபத்தை ஏந்திச் செல்வர். இத்தூபப் புகை வானை மறைத்து விண்மீன்களை ஒளி மங்கச் செய்யும். இச்சிறப்புடைய திருவேங்கடம், மாயமான் மீது அம்பெய்த ஸ்ரீராமபிரானின் திருமலை ஆகும். 2163

வலிமையான திருப்பாற்கடலில் பள்ளி கொண்டு பகைவராய் வந்த மது, கைடபர் மீது சக்கரத்தை ஏவி அழித்த பிரானே! கோவர்த்தன மலையைக் குடையாகவும் உன் திருத்தோள்களே குடைக் காம்பாகவும் கொண்டு பசுக்களைக் காத்த ஆச்சரியம் தான் என்னே! ஆயர்களின் ஏழு எருதுகளையும் அழித்த விதம் தான் என்னே? 2164

பிரான்; உன் பெருமை பிறர் ஆர் அறிவார்?
உராஅய் உலகு அளந்த ஞான்று,- வராகத்து
எயிற்று-அளவு போதா ஆறு என்கொலோ எந்தை
அடிக்கு அளவு போந்த படி? 2165

படி கண்டு அறிதியே? பாம்பு அணையினான் புள்-
கொடி கண்டு அறிதியே? கூறாய்-வடிவில்
பொறி ஐந்தும் உள் அடக்கி, போதொடு நீர் ஏந்தி,
நெறி நின்ற நெஞ்சமே. நீ. 2166

நீயும் திருமகளும் நின்றாயால் குன்று எடுத்துப்
பாயும் பனி மறைத்த பண்பாளா - வாசல்
கடை கழியா, உள் புகா, காமர் பூங் கோவல்
இடைகழியே பற்றி, இனி. 2167

இனி யார் புகுவார் எழு நரக வாசல்?
முனியாது மூரித் தாள் கோமின்;- கனி சாயக்
கன்று எறிந்த தோளான் கனை கழலே காண்பதற்கு
நன்கு அறிந்த- நாவலம் சூழ் நாடு. 2168

நாடிலும் நின் அடியே நாடுவன்; நாள்தோறும்
பாடிலும் நின் புகழே பாடுவன்;- சூடிலும்
பொன் ஆழி ஏந்தினான் பொன் அடியே சூடுவேற்கு,
என் ஆகில் என்னே எனக்கு? 2169

எனக்கு ஆவார் ஆர் ஒருவரே எம் பெருமான்
தனக்கு ஆவான் தானே மற்று அல்லால் புனக் காயாம்-
பூ மேனி காணப் பொதி அவிழும் பூவைப் பூ
மா மேனி காட்டும் வரம். 2170

வரத்தால் வலி நினைந்து மாதவ! நின் பாதம்
சிரத்தால் வணங்கானாம் என்றே-உரத்தினால்
ஈர் அரியாய் நேர் வலியோன் ஆய இரணியனை,
ஓர் அரியாய் நீ இடந்தது ஊன்? 2171





*எம்பெருமானே! தளர்ச்சி சிறிதும் இன்றி நீ உலகளந்த பொழுது எந்தையான உன் திருவடிகளுக்கு அளப்பதற்கு ஏற்றபடி பூமி இருந்தது. ஆனால் நீயே வராக வடிவெடுத்து பூமியைத் தூக்கி எடுத்த பொழுது அது உன் கொம்பின் ஒரு பாகத்தளவு கூட இல்லாமல் சிறிதாய் இருந்தது. எவ்வாறு? உன் பெருமையை நீயே அல்லாமல் வேறு யாரும் அறியார்.* **2165**

*நெஞ்சமே! வடிவம் அற்ற ஐம்புலன்களை அடக்கி, நீரும் மலரும் கொண்டு வழிபட்டுப் பகவானை அடையும் நெறியில் நின்று அறிந்தேன் என்கிறாயே! நீ ஆதிசேஷனைப் படுக்கை ஆகக் கொண்டவனின் திருமேனியைப் பார்த்திருக்கிறாயா? அவன் கருடக்கொடியைக் கண்டதுண்டா? நீயே பதில் கூறு.* **2166**

*மலையைக் குடையாய்ப் பிடித்து மழை தடுத்த பண்பாளனே! அழகிய திருக்கோவலூரில் நீயும் நின் பிராட்டியுமாய், வாசலுக்கு வெளியே போகாமலும் உள்ளே புகாமலும் இப்பொழுது நின்று அருளிய தன்மைதான் என்னே!* **2167**

*விளாம்பழ அசுரன் அழியும்படி கன்றாய் வந்த அசுரனை வீசிய திருத்தோள்களை உடைய எம்பெருமானின் திருவடிகளைக் காண்பதற்கு, இந்த நாவல் தீவிலுள்ள நாட்டோர் நன்றாக அறிந்தனர். இனி, ஏழு விதமான நரக வாயில்களில் யார் புகுவார்? என்னைக் கோபிக்காமல், நரகவாசலைத் தாழ் இட்டு அடையுங்கள்.* **2168**

*நெஞ்சால் நினைக்கையில் உன் திருவடிகளையே எண்ணுவேன். தினமும் உன் புகழே பாடுவேன். தலையில் எதையாவது அணிய விரும்பினால் சக்கரக் கையன் ஆன உன் அழகிய பாதங்களையே சூடுவேன். இனி எனக்கு என்ன தான் ஆகும்!* **2169**

*நிலத்தில் மலரும் காயாம்பூவின் நிறத்தைப் பார்த்தாலும் பூவைப் பூவின் நிறத்தைக் கண்டாலும் எனக்கு எம்பிரானின் திருமேனி அன்றோ தெரிகிறது! இத்தகைய பேறு உடைய அடியேனுக்கு ஒப்பாவார் யார்? எம்பெருமான் தனக்குத் தானே ஒப்பாக உள்ளவன் அன்றி மற்று எனக்கா சமம் ஆவான்? நான் அவன் அடிமை அன்றோ!* **2170**

*மாதவனே! இரணியன் தன் வரங்களால் ஏற்பட்ட பலத்தை பெரிதாய் எண்ணித் தன் தலையால் உன் திருவடிகளில் வணங்காமலிருந்தானே! அக்காரணத்தால் நீ நரசிம்மமாய் அவனைக் கிழித்துக் கொன்றாயோ! பிளக்கத்தக்க எதிரியாய் வந்த அவன் உடலைக் கிழித்தது, அவன் பிரகலாதனைத் துன்புறுத்தியது பொறுக்காததாலோ?* **2171**

ஊனக் குரம்பையின் உள் புக்கு, இருள் நீக்கி,
ஞானச் சுடர் கொளீஇ, நாள்தோறும்,-ஏனத்து
உருவாய் உலகு இடந்த ஊழியான் பாதம்
மருவாதார்க்கு உண்டாமோ-வான்? 2172

வான் ஆகி, தீ ஆய், மறி கடல் ஆய் மாருதம் ஆய்,
தேன் ஆகி, பால் ஆம் திருமாலே!-ஆன்ஆய்ச்சி
வெண்ணெய் விழுங்க நிறையுமே-முன் ஒரு நாள்
மண்ணை உமிழ்ந்த வயிறு ? 2173

வயிறு அழல,வாள் உருவி வந்தானை அஞ்ச,
எயிறு இலக வாய் மடுத்தது என்நீ-பொறி உகிரால்,
பூ வடிவை ஈடு அழித்த பொன் ஆழிக் கையா! நின்
சேவடிமேல் ஈடு அழியச் செற்று? 2174

செற்று எழுந்து தீவிழித்துச் சென்ற இந்த ஏழுலகும்,
மற்று இவை ஆ என்று வாய் அங்காந்து-முற்றும்
மறையவற்குக் காட்டிய மாயவனை அல்லால்,
இறையேனும் ஏத்தாது என் நா. 2175

நா, வாயில் உண்டே; நமோ நாரணா என்று
ஓவாது உரைக்கும் உரை உண்டே;- மூவாத
மாக் கதிக்கண் செல்லும் வகை உண்டே: என் ஒருவர்
தீக் கதிக்கண் செல்லும் திறம்? 2176

திறம்பாது என் நெஞ்சமே! செங்கண் மால் கண்டாய்
அறம் பாவம் என்று இரண்டும் ஆவான்:- புறம் தான்,இம்
மண் தான் மறிகடல் தான்,மாருதம் தான், வான் தானே
கண்டாய் கடைக்கட் பிடி. 2177

பிடி சேர் களிறு அளித்த பேராளா! உன் தன்
அடி சேர்ந்து அருள் பெற்றாள் அன்றே பொடி சேர்
அனற்கு அங்கை ஏற்றான் அவிர் சடைமேல் பாய்ந்த
புனல் கங்கை என்னும் பேர்ப் பொன்? 2178





*தசை உடம்பாகிய குடிசைக்குள் புகுந்து ஆராய்ந்து அறியாமையைப் போக்கி உண்மை ஞானமாகிய விளக்கை ஏற்றிப் பகவானைச் சரண் அடைய வேண்டும். பிரளய காலத்தில் உலகை எடுத்துக் காத்த வராகப் பெருமான் திருவடிகளைத் தினமும் வணங்காதவர்க்கும் பரமபதம் கிடைக்குமோ?* 2172

*வானம், தீ, அலைகடல், காற்று ஆகியவற்றை உண்டாக்கி நியமிக்கும் திருமாலே! தேனைப் போலவும் பாலைப் போலவும் இனியவனே! பசுக்களை வளர்த்த இடைச்சியின் வெண்ணெய்யை விழுங்கிய பொழுது வயிறு நிறைந்ததோ? ஏனெனில் பிரளயத்தில் உலகத்தை உண்டு பின் உமிழ்ந்த வயிறல்லவா அது?* 2173

*பூவின் அழகைத் தோற்கடிக்கும் கையில் சக்கரம் ஏந்தியவனே! வாளை உருவியவாறு வயிறு எரிய வந்த இரணியனை உன் சிவந்த திருவடிகளின் மேல் கிடத்தி, நிறம் விளங்கும் உன் நகங்களால் கிழித்து, அவன் கட்டுக் குலைந்து அழிந்த பின்னும், உன் பற்கள் ஒளிவிடும்படி வாயை மடித்துக் கொண்டாயே!* 2174

*கண்ணபிரான் பாண்டவர் தூதனாகச் சென்றபொழுது, துரியோதனன் முதலியோரைச் சினந்து, நெருப்புப் பார்வையுடன் விசுவருபம் எடுத்தான். 'இதோ! என் வாய்க்குள்ளே ஏழுலகங்களையும் பாருங்கள்' என்று அகலமாக வாய் திறந்து வீடுமர் முதலியோர்க்குக் காட்டினான். மாயா சக்தி உடைய இப்பெருமானைத் தவிர என் நா. மற்றவரைச் சிறிதும் துதிக்காது.* 2175

*பகவானைத் துதிப்பதற்கு ஏற்பட்ட நாக்கு, வாய்க்குள்ளேயே காணப்படுகிறதே; விடாமல் பல தடவைகள் கூறத் தக்க 'நமோ நாராயணா' என்னும் திருமந்திரம் இருக்கிறதே. திரும்பி வருதல் இல்லாத பரமபதம் செல்வதற்கு வழியும் எளிதாக உள்ளதே! இவ்வாறு இருக்க ஒரு சிலர் நரக வழிக்கே ஏன் செல்கின்றனர்?* 2176

*என்நெஞ்சே! சிவந்த தாமரைக் கண்களுடைய திருமாலே, புண்ணியம், பாவம் ஆகிய இரண்டையும் நீக்கி ஆள்பவன். இந்த உலகம், கடல், காற்று, ஆகியனவும் மற்றும் இவற்றுக்கு வேறான, உயிர், அகங்காரம் ஆகியனவும் எம் பெருமானே ஆவான் என்று அறிவாய். தவறாமல் இதைக் கடைசி வரைத் தெரிந்து கொள்.* 2177

*பெண் யானையுடன் திரிந்த கஜேந்திரனைக் காத்த அருளாளனே! சாம்பல் பூசியவனாய் நெருப்பைக் கையில் கொண்ட சிவன் சடையில் பாய்ந்த கங்கைப் பெண், உன் திருவடிகளில் பட்ட பின் அன்றோ, நாட்டாருக்குப் பாவம் தீர்ப்பவள் ஆனாள்.?* 2178

பொன் திகழு மேனிப் புரி சடை அம் புண்ணியனும்,
நின்று உலகம் தாய நெடுமாலும், -என்றும்
இருவர் அங்கத்தால் திரிவரேலும் ஒருவன்
ஒருவன் அங்கத்து என்றும் உளன். 2179

உளன் கண்டாய், நல் நெஞ்சே! உத்தமன்; என்றும்
உளன் கண்டாய்; உள்ளுவார் உள்ளத்து- உளன் கண்டாய்;
வெள்ளத்தின் உள்ளானும் வேங்கடத்து மேயானும்
உள்ளத்தின் உள்ளான் என்று ஓர். 2180

ஓர் அடியும் சாடு உதைத்த ஒண் மலர்ச் சேவடியும்
ஈர் அடியும் காணலாம் என் நெஞ்சமே-ஓர் அடியில்
தாயவனை, கேசவனை தண் துழாய் மாலை சேர்
மாயவனையே மனத்து வை. 2181

## முதல் திருவந்தாதி முற்றிற்று.





பொன் நிற உடம்பும் பின்னிய சடையும் புண்ணியமும் உடைய சிவனும், நின்று உலகங்களை அளந்த திருமாலாகிய இறைவனும், எப்பொழுதும் இரண்டு வடிவங்களில் திரிவார்கள். ஆனாலும் சிவன் திருமாலின் உடம்பாக இருக்கிறான். திருமால், சிவனுக்குள் உறைபவனாய், அவன் வாழ்வுக்குக் காரணம் ஆகிறான். **2179**

நல்ல நெஞ்சே! புருஷோத்தமன் ஆன ஸ்ரீமந் நாராயணன் என்றும் நம்மைக் காக்க இருக்கிறான். அவன், தன்னை நினைப்பவர் மனத்திலே நித்திய வாசம் செய்கிறான். திருப்பாற்கடலில் பள்ளி கொண்டவனும் திருவேங்கட மலையில் நிற்கிறவனும் ஆகிய எம்பெருமான் என் உள்ளத்தில் எப்பொழுதும் இருக்கிறான் என்பதை நீ அறிந்து கொள். **2180**

என் நெஞ்சே! ஒரு திருவடியால் உலகம் அளந்தவனும், கேசி என்னும் அசுரனை அழித்தவனும், குளிர்ந்த திருத்துழாய் மாலை அணிந்தவனும் ஆகிய மாயப்பிரான் திருமாலையே இதயத்தில் நிறுத்திக் கொள். அவனைப் பற்றினால் நீ, உலகளந்ததும் சகடத்தை முறித்ததும் ஆன, அவனுடைய மலர் போன்ற இரு திருவடிகளையும் நேரே காணலாம். **2181**

## முதல் திருவந்தாதி முற்றிற்று.



ஸ்ரீ :

# இயற்பா

பூதத்தாழ்வார் அருளிய
இரண்டாந் திருவந்தாதி

## நாலாயிர திவ்யப் பிரபந்தம்

ஸ்ரீ:

# நாலாயிர திவ்வியப் பிரபந்தம்

## இயற்பா

பூதத்தாழ்வார் அருளிய
இரண்டாந் திருவந்தாதித் தனியன்

என் பிறவி தீர இறைஞ்சினேன் இன்னமுதா
அன்பே தகளி அளித்தானை- நன் புகழ் சேர்
சீதத்தார் முத்துக்கள் சேரும் கடல் மல்லைப்
பூதத்தார் பொன்னங் கழல்

- (திருக்குருகைப் பிரான் பிள்ளான்)



ஸ்ரீ:

# நாலாயிர திவ்வியப் பிரபந்தம்

## இயற்பா

பூதத்தாழ்வார் அருளிய
இரண்டாந் திருவந்தாதித் தனியன் உரை

என் பிறவித் துன்பம் நீங்குவதற்கு அடியேன் பூதத்தாழ்வாருடைய திருவடிகளைத் தொழுதேன். 'அன்பே தகளியா' என்று தொடங்கும் திருவந்தாதியை அருளிச் செய்த இவ்வாழ்வார், குளிர்ந்த முத்துக்கள் திரண்டொதுங்கும் கடற்கரை உள்ள திருகடல் மல்லையில் அவதரித்தார்.

- (திருக்குருகைப் பிரான் பிள்ளான்)

# பூதத்தாழ்வார் அருளிச் செய்த

## இரண்டாந் திருவந்தாதி

அன்பே தகளியா, ஆர்வமே நெய் ஆக
இன்பு உருகு சிந்தை இடு திரியா, -நன்பு உருகி
ஞானச் சுடர் விளக்கு ஏற்றினேன், நாரணற்கு
ஞானத் தமிழ் புரிந்த நான். 2182

ஞானத்தால் நன்கு உணர்ந்து நாரணன் தன் நாமங்கள்,
தானத்தால் மற்று அவன் பேர் சாற்றினால்- வானத்து
அணி அமரர் ஆக்குவிக்கும் அஃது அன்றே-நங்கள்
பணி அமரர் கோமான் பரிசு. 2183

பரிசு நறு மலரால் பாற்கடலான் பாதம்
புரிவார் புகப்பெறுவர் போலாம்-புரிவார்கள்
தொல் அமரர் கேள்வித் துலங்கு ஒளி சேர் தோற்றத்து
நல் அமரர் கோமான் நகர். 2184

நகர் இழைத்து நித்திலத்து நாள் மலர் கொண்டு ஆங்கே
திகழும் மணி வயிரம் சேர்த்து- நிகர் இல்லாப்
பைங் கமலம் ஏந்திப் பணிந்தேன்-பனி மலராள்
அங்கம் வலம் கொண்டான் அடி. 2185

அடி மூன்றில் இவ் உலகம் அன்று அளந்தாய் போலும்;
அடி மூன்று இரந்து அவனி கொண்டாய்;- படிநின்ற
நீர் ஓத மேனி நெடுமாலே! நின் அடியை
யார் ஓத வல்லார் அறிந்து? 2186

அறிந்து ஐந்தும் உள் அடக்கி ஆய் மலர் கொண்டு, ஆர்வம்
செறிந்த மனத்தராய்ச் செவ்வே- அறிந்து அவன் தன்
பேர் ஓதி ஏத்தும் பெருந்தவத்தோர் காண்பரே
கார் ஓத வண்ணன் கழல். 2187





# பூதத்தாழ்வார் அருளிச் செய்த

## இரண்டாந் திருவந்தாதி

அன்பாகிய பக்தியே அகலாகவும் ஆர்வமாகிய பரபக்தியே நெய்யாகவும் உருகும் இனிய என் மனமே திரியாகவும் கொண்டு ஞான வடிவமான ஆத்மா கரையப்பெற்று, பரஜ்ஞானம் ஆகிற சுடர் விடும் விளக்கை நாராயணனுக்கு அடியேன் ஏற்றினேன். ஞானம் அளிக்கும் இத் தமிழ் நூலையும் இயற்றினேன். 2182

பக்தி வடிவான ஞானத்தால் நன்றாக உணர்ந்து, ஸ்ரீமந் நாராயணனின் இயல்பு குணம் பற்றிய திரு பெயர்களையும் பல்வேறு வடிவங்களால் ஏற்படும் மற்றப் பெயர்களையும் பக்தி நிலையிலே நின்று சொன்னால், பரமபதத்துக்கு அணியாக உள்ள நித்திய சூரிகள் போலே, நம்மைப் பகவான் ஆக்குவான். இதுவே அவன் நமக்குச் செய்யும் நலம் ஆகும். 2183

சாத்திர விதிமுறைகளைப் பின்பற்றிய தவம், தியான வழிகளை மேற்கொள்ளும் தொன்மையான பிரமன் முதலிய தேவர்கள் பகவானைப் பற்றிய கேள்வி அறிவு மட்டுமே பெறுவார்கள். ஆனால், பாற்கடல் நாதனின் திருவடிகளில் மணம் வீசும் மலர் இட்டு ஆழ்ந்த பக்தியுடன் வணங்குபவர் நித்தியசூரிகள் தலைவனுடைய பரமபதத்தையே பரிசாகப் பெறுவார்கள். 2184

என்நெஞ்சமே, எம்பெருமான் வாழும் நகரம். நட்பைக் குறிக்கும் முத்தே புற இதழாய், கூடுவதைச் சுட்டும் மாணிக்கமே, அக இதழாய் விருப்பம் என்னும் வயிரமே தாதுவாக உள்ள ஒப்பற்ற பக்தி என்கிற தாமரைப் பூவைக் கொண்டு, தாமரைச் செல்வியை மார்பில் ஏற்ற திருமால் திருவடிகளைப் பணிந்தேன். 2185

உலகில் அவதாரம் செய்த கடல் வண்ணனே! மாவலியிடம் மூவடி மண் யாசித்த நீ, அன்று இவ்வுலகை மூன்றடியால் அளந்து கொண்டாயோ? இல்லையே! இரண்டு அடியால் மட்டுமே பூமியையும் வானையும் அளந்தாய். உன் திருவடியை முழுவதும் தெரிந்து கொண்டு பேச வல்லார் யாருண்டு? ஒருவரும் இல்லை 2186

பகவான் பெருமையையும் உலகச் சிறுமையையும் அறிந்து, ஐம்புலன்களை அடக்கி, அவனிடம் ஈடுபடுத்தித் தேர்ந்த மலர்களால், பக்தி நிறைந்த மனத்துடன் இறைவனே ஆண்டவன், தான் அடிமை என்பதை உணர்ந்து, அவன் திருநாமங்களை இடைவிடாமல் துதிக்கிற தவத்தோரே, கடல்வண்ணன் திருமாலின் திருவடிகளைக் காண்பார். 2187

கழல் எடுத்து வாய் மடித்து, கண் சுழன்று மாற்றார்
அழல் எடுத்த சிந்தையராய் அஞ்ச,- தழல் எடுத்த
போர் ஆழி ஏந்தினான் பொன் மலர்ச் சேவடியை
ஓர் ஆழி நெஞ்சே-உகந்து. 2188

உகந்து உன்னை வாங்கி, ஒளி நிறம் கொள் கொங்கை
அகம் குளிர, உண் என்றாள் ஆவி- உகந்து,
முலை உண்பாய் போலே, முனிந்து உண்டாய் நீயும்
அலை பண்பால், ஆனமையால் அன்று. 2189

அன்று, அதுகண்டு அஞ்சாத ஆய்ச்சி உனக்கு இரங்கி,
நின்று முலை தந்த இந் நீர்மைக்கு- அன்று
வரன்முறையால் நீ அளந்த மா கடல் சூழ்ஞாலம்
பெரு முறையால் எய்துமோ பேர்த்து? 2190

பேர்த்தனை மா சகடம் பிள்ளையாய்; மண் இரந்து
காத்தனை பல் உயிரும், காவலனே!- ஏத்திய
நா உடையேன்; பூ உடையேன்; நின் உள்ளி நின்றமையால்,
கா அடியேன் பட்ட கடை 2191

கடை நின்று அமரர், கழல் தொழுது நாளும்
இடைநின்ற இன்பத்தர் ஆவர்-புடை நின்ற
நீர் ஓத மேனி நெடுமாலே! நின் அடியை
ஆர் ஓத வல்லார் அவர்? 2192

அவர் இவர் என்று இல்லை; அரவு அணையான் பாதம்
எவர் வணங்கி ஏத்தாதார்? எண்ணில்- பலரும்
செழும் கதிரோன், ஒண்மலரோன் கண்ணுதலோன், அன்றே
தொழும் தகையார் நாளும் தொடர்ந்து? 2193

தொடர் எடுத்த மால் யானை சூழ் கயம் புக்கு அஞ்சி,
படர் எடுத்த பைங் கமலம் கொண்டு- அன்று இடர் அடுக்க
ஆழியான் பாதம் பணிந்து அன்றே-வானவர் கோன்
பாழி-தான் எய்திற்றுப் பண்டு? 2194





*உலகளந்த திரிவிக்கிரமன், தன் திருவடிகளை உயரத் தூக்கியதும், நமுசி முதலிய எதிரிகள், தீப்பற்றிய நெஞ்சுடன் அஞ்சினர். உதட்டை மடித்தபடி, கண்கள் வட்டமிட நெருப்புமிழும் சக்கரத்தை ஏந்தியபடி நின்றான். ஆழமான நெஞ்சமே! அப்பெருமானின் பூப் போன்ற திருவடிகளை விரும்பி வணங்கு.* **2188**

*எம்பெருமானே! பூதனைப் பேய் யசோதை போலவே பாசம் உடையவளாய் நடித்து, உன்னைத் தூக்கி தன் ஒளி முலையைக் கொடுத்து 'மனம் குளிரப்பருகு' என்று கூறினாள். ஆகையால் அப்பொழுது நீயும் உண்மையாகப் பருகுவது போலப் பொய் மகிழ்ச்சியைக் காட்டியபடி உள்ளத்திலே கோபம் கொண்டு அவள் உயிரைக் குடித்தாய். அடியார்களிடம் நீ கொண்ட அலை வீசும் அன்பு அன்றோ இது!* **2189**

*பூதனை செத்ததைக் கண்டும் அஞ்சாத யசோதை, அந்த நஞ்சுக்கு மாற்றாக உன்னிடம் பரிவு கொண்டு முலை கொடுத்த நீர்மையான பெரிய குணத்துக்கு ஒப்பு உண்டோ? உயிர்களிடத்துக் கொண்ட உறவு காரணமாக, அன்று நீ மாவலி முன் உலகளந்த பெருஞ்செயலும் கடல் சூழ்ந்த உலகுக்கு ஒப்பு ஆகாது. இரு செயல்களும் பெரிதானாலும், யசோதையின் பரிவு அன்றோ உன் செயலை விடப் பெரியது!* **2190**

*எல்லோரையும் காப்பவனே! சிறு குழந்தையாய், நீ பெரிய சகடத்தை முறித்தாய். பூமியை மாவலியிடம் யாசித்து ஆத்மாக்களைக் காத்தாய். நீயே காப்பவன் என்பதை எண்ணி உன்னைத் துதிக்கும் நாவைப் பெற்றேன். இடுவதற்கு உரிய பூக்களையும் பெற்றேன். பிற தெய்வங்களை வணங்கிய என் பொல்லாங்கைப் போக்கிக் காத்தருள வேண்டும்.* **2191**

*பிற தெய்வங்களின் வாசலில் நின்று காலில் விழும் சிலர் இடைப்பட்டதான சுவர்க்க இன்பம் மட்டுமே அடைவர். ஆனால் கடல் நிற மேனி உடைய உன் திருவடிகளை எண்ணி வழிபட வல்லவர் யாரேனும் உண்டோ?* **2192**

*பாம்பணையான் பாதம் வணங்கித் துதியாதவர் உண்டோ! அவர்களில் உயர்ந்தோர், தாழ்ந்தோர் வேறுபாடு இல்லை. ஆயிரம் கிரணங்களுடைய சூரியனும் தாமரையில் உள்ள பிரமனும் நெற்றிக் கண் பெற்ற சிவனும் திருமாலிடம் சென்று வணங்குவர்.* **2193**

*கால் சங்கிலியை முறித்துத் திரிந்த கஜேந்திரன் பொய்கையில் இறங்கித் தாமரையைப் பறித்ததும் முதலை வாய்ப்பட்டது. பூவைப் பகவானுக்கு இடமுடியாத துயரத்தால் பதறிய யானை சக்ர தாரியின் திருவடிகளில் சரணம் அடைந்ததால் அன்றோ நித்திய சூரிகளின் இடமான பரமபதத்தை அடைந்தது!* **2194**

பண்டிப் பெரும் பதியை ஆக்கி, பழி பாவம்
கொண்டு இங்கு வாழ்வாரைக் கூறாதே,- எண் திசையும்
பேர்த்த கரம் நான்கு உடையான் பேர் ஓதிப் பேதைகாள்;
தீர்த்தகரர் ஆமின் திரிந்து. 2195

திரிந்தது வெம் சமத்துத் தேர் கடவி; அன்று
பிரிந்தது சீதையை மான் பின் போய்; புரிந்ததுவும்
கண்.பள்ளி கொள்ள-அழகியதே நாகத்தின்
தண்பள்ளி கொள்வான் தனக்கு? 2196

தனக்கு அடிமை பட்டது தான் அறியானேலும்
மனத்து அடைய வைப்பது ஆம் மாலை;- வனத் திடரை
ஏரி ஆம் வண்ணம் இயற்றும் இது அல்லால்,
மாரி யார் பெய்கிற்பார் மற்று ? 2197

மற்று ஆர் இயல் ஆவார்-வானவர் கோன் மாமலரோன்
சுற்றும் வணங்கும் தொழிலானை, -ஒற்றைப்
பிறை இருந்த செஞ்சடையான் பின் சென்று, மாலைக்
குறை இரந்து தான் முடித்தான் கொண்டு. 2198

கொண்டது உலகம் குறள் உருவாய்; கோளரியாய்
ஒண் திறலோன் மார்வத்து உகிர் வைத்தது;- உண்டதுவும்
தான் கடந்த ஏழ் உலகே; தாமரைக்கண் மால், ஒரு நாள்,
வான் கடந்தான், செய்த வழக்கு. 2199

வழக்கு அன்று கண்டாய் வலி சகடம் செற்றாய்;
வழக்கு என்று நீ மதிக்க வேண்டா-குழக் கன்று
தீ விளவின் காய்க்கு எறிந்த தீமை திருமாலே
பார் விளங்கச் செய்தாய் பழி. 2200

பழி பாவம் கையகற்றி பல் காலும், நின்னை
வழிவாழ்வார் வாழ்வராம் மாதோ-வழு இன்றி
நாரணன் தன் நாமங்கள்நன்கு உணர்ந்து நன்கு ஏத்தும்
காரணங்கள் தாம் உடையார் தாம். 2201





*அறிவில்லாதவர்களே! உங்கள் வயிற்றைப் பெரிய ஊர் போல வளர்த்துப் பழி, பாவங்களைச் செய்து உலகில் வாழ்வோரைப் புகழ்ந்து பேசுவதை விடுங்கள். எட்டுத் திசைகளும் பேர்ந்து போகும்படி வளர்ந்து நின்ற திரிவிக்கிரமனின் திருநாமங்களை ஓதி, உலகெல்லாம் சென்று, புனிதமடையச் செய்யுங்கள்.* **2195**

*கண்ணபிரான் பாரதப்போரிலே தேரோட்டியாகித் திரிந்தானே! இராமபிரான் மாயமானின் பின் சென்று சீதையைப் பிரிந்து வருந்திக் காட்டிலே வெறும் தரையிலே படுத்துத் துன்புற்றானே! திருவனந்தாழ்வான் மீது பள்ளி கொள்ளும் திருமாலுக்கு இவ்வாறு துன்பமடைந்தது தகுதியோ?* **2196**

*தன் ஆத்மா இறைவனுக்கே அடிமைப்பட்டது என்பதை ஒருவன் அறியாவிடினும் அன்பால் திருமால் அவன் மனத்தில் வந்ததும் அவனைப் பொருந்தும் படி ஏற்றுக் கொள்ள வேண்டும். அப்பொழுது அவனே அருள் செய்து விடுகிறான். காட்டில் உள்ள மேட்டை நம்மால் ஏரியாக மாற்ற முடியுமே அன்றி மழை பெய்விக்க முடியுமா?* **2197**

*தேவர்கள் அரசன் இந்திரனும், தாமரையில் உள்ள பிரமனும் திருமாலின் பக்கத்தில் சூழ்ந்து நின்று வணங்கி உய்வு பெற்றனர். பிறை சூடிய சிவன், திருமால் பின் சென்று பிச்சை ஏற்றுத் தன் சாபத்தைப் போக்கிக் கொண்டான். ஆதலால், திருமாலைத் தவிர நம்மைக் காப்பவர் வேறு யாரும் இல்லை.* **2198**

*வாமனப்பிரான் உலகங்களை அளந்து தனதாக்கிக் கொண்டான். நரசிம்மப் பெருமான் இரணியன் மார்பில் நகத்தால் கீறி அடித்தான். பண்டு, திருமால், உலகங்களை உண்டு காத்தான். செந்தாமரைக் கண்களுடைய திருமால் செயல்கள் வானை விடவும் பெரிதானவை; மிகவும் நியாயம் ஆனவை.* **2199**

*கண்ணன் ஆன திருமாலே! பலத்த சகடத்தை முறித்தது உனக்குத் தகுதியா? தகுதியே என்று எண்ணாதே! மேலும், கன்றான அசுரனை வீசி விளங்காயாய் இருந்த அசுரனை அழித்தாய். நாங்கள் கவலைப்பட, தீம்புகளைச் செய்தது தவறு அன்றோ?* **2200**

*காரணத்துடனும், காரணம் இன்றியும் உண்டாகும் பழி பாவங்களைப் போக்கிச் சாத்திர நெறி நின்று உனக்கு ஆட்பட்டவர் உய்வு பெறுகிறார்கள். நாராயணனான உன் திரு நாமங்களை நன்றாக உணர்ந்து பிழையில்லாமல் துதிப்பவர்களும் வாழ்வு பெறுகிறார்கள். என்னே ஆச்சரியம்!* **2201**

தாம் உளரே; தம் உள்ளம் உள் உளதே; தாமரையின்
பூ உளதே; ஏத்தும் பொழுது உண்டே; -வாமன்
திரு மருவு தாள் மருவு சென்னியரே செவ்வே
அரு நரகம் சேர்வது அரிது. 2202

அரியது எளிது ஆகும் ஆற்றலால் மாற்றிப்
பெருக முயல்வாரைப் பெற்றால்;- கரியது ஓர்
வெண் கோட்டு மால் யானை வென்றி முடித்தன்றே
தண் கோட்டு மா மலரால், தாழ்ந்து? 2203

தாழ்ந்து, வரம் கொண்டு, தக்க வகைகளால்
வாழ்ந்து கழிவாரை வாழ்விக்கும்- தாழ்ந்த
விளங் கனிக்குக் கன்று எறிந்து வேற்று உருவாய் ஞாலம்
அளந்து அடிக்கீழ்க் கொண்ட அவன். 2204

அவன் கண்டாய், நல் நெஞ்சே! ஆர் அருளும் கேடும்;
அவன் கண்டாய் ஐம்புலனாய் நின்றான்;- அவன் கண்டாய்
காற்று, தீ,நீர், வான், கரு வரை மண் கார் ஓதச்
சீற்றத் தீ ஆவானும்-சென்று. 2205

சென்றது இலங்கைமேல் செவ்வே; தன் சீற்றத்தால்
கொன்றது இராவணனை; கூறுங்கால்,- நின்றதுவும்
வேய் ஓங்கு தண் சாரல் வேங்கடமே -விண்ணவர் தம்
வாய் ஓங்கு தொல் புகழான் வந்து. 2206

வந்தித்து அவனை வழி நின்ற ஐம்பூதம்,
ஐந்தும் அகத்து அடக்கி-ஆர்வமாய்,- உந்திப்
படி அமரர் வேலையான் பண்டு அமரர்க்கு ஈந்த
படி அமரர் வாழும் பதி 2207

பதி அமைந்து நாடி பருத்து எழுந்த சிந்தை
மதி உரிஞ்சி வான் முகடு நோக்கி,- கதி மிகுத்து, அம்
கோல் தேடி ஓடும் கொழுந்ததே போன்றதே
மால் தேடி ஓடும் மனம். 2208





பகவானை வணங்க மனிதர்களுக்கு உடலும் புலன்களும் உள்ளன. அவனை நினைக்க மனம் உள்ளது. வழிபடத் தாமரைப் பூவும் உள்ளது. துதிப்பதற்கு ஏற்ற காலமும் நிறைய உள்ளது. வாமனனின் திருவடிகளில் பணிவதற்கோ தலையும் உள்ளது. இப்படி எல்லாம் வாய்ந்த பிறகு நரகம் சேர்வது இல்லை அன்றோ! 2202

வெண்மையான கொம்புடைய கரிய கஜேந்திரன் திருமால் அருளால் முதலையிடமிருந்து மீண்டு, பொய்கைக் கரையில் தாமரைப் பூக் கொண்டு பெருமானுக்கு அடிமை செய்யப் பெறறது. எனவே எம் பெருமானைப் பெற்றால் அவன் தன் ஆற்றலால் நம்முடைய தடைகளை விலக்க அருள் செய்வதால் மோட்சமும் எளிதாகி விடுகிறது. 2203

கண்ணபிரான் தாழ்ந்த கிளைகளையுடைய விளாமரக் கனிக்காக கன்றை வீசி எறிந்தான். வாமனனாய்ப் பூமியை அளந்து பாதத்தின் கீழ் அடக்கினான். செல்வமோ கைவல்யமாகிய ஆத்ம இன்பமோ இறைவன் திருவடியோ எதைப் பெறுவதற்கும், இந்த எம்பெருமானே அருள் செய்து வாழ்விக்கிறான். 2204

நல்ல நெஞ்சமே! அருள் செய்து மோட்சம் தருபவன் இறைவனே. பிறவியைத் தடுத்து ஆட்கொள்பவனும் அவனே. ஐம்புலன்களும், காற்று, தீ, நீர், வான், மண் ஆகிய ஐம்பூதங்களும் அவனே. கறுத்த மலைகளும் கடல்களை வற்ற வைக்கும் வடவைக் கனலும் அந்த எம்பெருமானே ஆகிறான். 2205

நித்திய சூரிகளால் நன்கு துதிக்கப்படும் பெருமான், இலங்கையையும் இராவணனையும் சினம் கொண்டு அழித்தான். ஆத்மாக்கள் உய்வடைய அப்பெருமானே மூங்கில்கள் வளர்ந்த மலைகள் உள்ள திருவேங்கடத்தில் எழுந்தருளினான். 2206

ஐம்பூதங்களையும் ஐம்புலன்களையும் அடக்கிப் பக்தியுடன் துதித்தபடி போட்டி இட்டு வரும் தேவர்களுக்காக எம் பெருமான் திருப்பாற்கடலில் பள்ளி கொண்டான். ஸ்ரீவைஷ்ணவர்கள் அடிமை செய்து வாழும் திருவேங்கடத்தை அவன் நித்திய சூரிகளுக்குப் பரிசாகக் கொடுத்தான். 2207

என் நெஞ்சமோ, திருமலையில் பொருந்தி ஆசையுடன் மேல் நோக்கி வளர்ந்து சந்திரமண்டலத்தையும் தாண்டி, வான் உச்சியைத் தொட்டுப் பரமபத நாதனைத் தேடி ஓடுகிறது. பரந்து வளரும் கொடிகளின் கொழுந்துகள், படருவதற்குக் கொம்பைத் தேடுவது போல் உள்ளது என் மனம். 2208

மனத்து உள்ளான்-வேங்கடத்தான், மா கடலான், மற்றும்
நினைப்பு அரிய நீள் அரங்கத்து உள்ளான்,- எனைப் பலரும்
தேவாதி தேவன் எனப்படுவான்,முன் ஒரு நாள்
மா வாய் பிளந்த மகன். 2209

மகனாகக் கொண்டு எடுத்தாள் மாண்பு ஆய கொங்கை
அகன் ஆர உண்பன் என்று உண்டு- மகனைத் தாய்
தேறாத வண்ணம் திருத்தினாய் தென் இலங்கை
நீறு ஆக எய்து அழித்தாய் நீ! 2210

நீ அன்று உலகு அளந்தாய். நீண்ட திருமாலே!
நீ அன்று உலகு இடந்தாய் என்பரால்;- நீ அன்று
கார் ஓதம் முன் கடைந்து பின் அடைத்தாய் மா கடலை
பேர் ஓத மேனிப் பிரான்! 2211

பிரான் என்றும், நாளும் பெரும் புலரி என்றும்,
குரா நல் செழும் போது கொண்டு- வராகத்து
அணி உருவன் பாதம் பணியும் அவர் கண்டீர்
மணி உருவம் காண்பார்-மகிழ்ந்து. 2212

மகிழ்ந்தது சிந்தை, திருமாலே! மற்றும்
மகிழ்ந்தது, உன் பாதமே போற்றி;- மகிழ்ந்தது
அழல் ஆழி சங்கம் அவை பாடி; ஆடும்
தொழில் ஆகம்-சூழ்ந்து துணிந்து. 2213

துணிந்தது சிந்தை- துழாய் அலங்கல் அங்கம்
அணிந்தவன் பேர் உள்ளத்துப் பல்கால்;- பணிந்ததுவும்
வேய் பிறங்கு சாரல் விறல் வேங்கடவனையே;
வாய்-திறங்கள் சொல்லும் வகை. 2214

வகையால் அவனி இரந்து அளந்தாய் பாதம்
புகையால் நறு மலரால் முன்னே- மிக வாய்ந்த
அன்பு ஆக்கி, ஏத்தி அடிமைப்பட்டேன் உனக்கு
என் பாக்கியத்தால் இனி. 2215





*எண்ணற்ற வேதியர்களால் நித்திய சூரிகள் தலைவன் என்று துதிக்கப்படும் திருப்பாற்கடல் நாதன், கண்ணனாய் சிறிய பிள்ளை ஆனபொழுது, குதிரை வடிவில் வந்த அசுரன் வாயைப் பிளந்தான். திருவேங்கடத்திலும் எண்ணரிய இனிமையான திருவரங்கத்திலும் எழுந்தருளிய இப்பெருமான் என் மனத்திலும் எழுந்தருளினான்.* 2209

*தென் இலங்கை சாம்பலாகி அழிய, அம்புகளை எய்தவனே! நீ, உன்னை மகனாகக் கொண்டு பால் கொடுக்க வந்த பூதனைப் பேயின் அழகிய முலையைச் சுவைத்து, வயிறாரப் பருகுவேன் என்று கூறி அவள் உயிரைக் குடித்தாயே! இதைக் கண்ட உன் தாய் யசோதை பயந்து நம்பிக்கையை இழந்தாளே!* 2210

*கடல் நிறத் திருமாலே! ஒரு காலத்தில் நீ உலகங்களை அளந்தாய்; மஹா வராஹமாய், பூமியை எடுத்துக் காத்தாய்; கடலைக் கடைந்தாய் .இன்னொரு கடலை அணை கட்டி அடைத்தாய். இவை எல்லாம் என்ன செயல்களோ?* 2211

*உபகாரம் செய்யும் பிரானே! நல் விடிவு ஏற்பட்டது என்று தினமும் துதித்து குராமலர்களை இட்டு, வராகப் பெருமான் திருவடிகளைப் பணிபவர்கள், அவன் திவ்விய மங்கள வடிவத்தைக் கண்டு மகிழ்ந்து வணங்குவர்.* 2212

*திருமாலே! என் நெஞ்சு உன்னைத் தியானித்து உறுதி பெற்று, மகிழ்ந்தது. மேலும் என் நாவோ உன்னைத் துதித்துத் திருவடியைப் போற்றி உகந்தது. நெருப்புமிழும் சக்கரத்தையும் சங்கையையும் ஏந்திய உன்னைப் பற்றிப் பாடி, ஆடும் செயலில் என் உடல் களிப்புப்பெற்றது. என்னே என் பேறு!* 2213

*திருத்துழாய் மாலை அணிந்தவனின் திருநாமங்களைப் பன் முறையில் எண்ணுவதில் என் சிந்தை உறுதி பெற்றது. உடலோ பணிந்து வணங்குகிறது. மூங்கில் மிகுந்த திருவேங்கட மலையில் உள்ள பெருமானின் குணங்களையே சொல்லும் துணிவை என் வாய் பெற்றது.* 2214

*முன்னொரு கால், சூழ்ச்சி செய்து, பூமியை மாவலியிடமிருந்து யாசித்து, அளந்த பெருமானே! உன திருவடிகளைத் தூபத்தாலும் பூக்களாலும் வழிபட்டு, பக்தியுடன் துதித்து வணங்குகிறேன். உன் அருளைப் பெறும் பாக்கியத்தால் உனக்கு அடிமை செய்யப் பெற்றேன். உன் அழகுக்குத் தோற்கச் செய்த அருள்தான் என்னே!* 2215

இனிது என்பர் காமம்; அதனிலும் ஆற்ற
இனிது என்பர் தண்ணீரும்; எந்தாய்!- இனிது என்று
காமம், நீர்வேளாது நின் பெருமை வேட்பரேல்,
சேம நீர் ஆகும்-சிறிது. 2216

சிறியார் பெருமை சிறிதின்கண் எய்தும்;
அறியாரும் தாம் அறியார் ஆவர்;- அறியாமை,
மண்கொண்டு மண் உண்டு, மண் உமிழ்ந்த மாயன் என்று
எண் கொண்டு என் நெஞ்சே! இரு. 2217

இருந் தண் கமலத்து இரு மலரின் உள்ளே,
திருந்து திசைமுகனைத் தந்தாய்!- பொருந்திய நின்
பாதங்கள் ஏத்திப் பணியாவேல், பல் பிறப்பும்
ஏதங்கள்-எல்லாம், எமக்கு. 2218

எமக்கு என்று இரு நிதியம் ஏமாந்து இராதே.
தமக்கு என்றும் சார்வம் அறிந்து, -நமக்கு என்றும்
மாதவனே என்னும் மனம் படைத்து மற்று அவன் பேர்
ஓதுவதே நாவினால் ஓத்து. 2219

ஓத்தின் பொருள் முடிவும் இத்தனையே உத்தமன் பேர்
ஏத்தும் திறம்; அறிமின் ஏழைகாள்!- ஓத்து-அதனை
வல்லீரேல்: நன்று அதனை மாட்டீரேல், மாதவன் பேர்
சொல்லுவதே ஓத்தின் சுருக்கு. 2220

சுருக்காக வாங்கிச் சுலாவி நின்று, ஐயார்
நெருக்கா முன் நீர் நினைமின் கண்டீர்-திருப் பொலிந்த
ஆகத்தான் பாதம்: அறிந்தும் அறியாத
போகத்தால் இல்லை-பொருள். 2221

பொருளால் அமர் உலகம் புக்கு இயலல் ஆகாது;
அருளால் அறம் அருளும் அன்றே;- அருளாலே
மா மறையோர்க்கு ஈந்த மணிவண்ணன் பாதமே
நீ மறவேல், நெஞ்சே நினை. 2222





எந்தையே! நாட்டோர் புலன் இன்பங்களை இனிதாகக் கொள்வார்கள்; அதனிலும் தண்ணீர் மிகவும் இனியது என்பார்கள். கீழான காமத்தையும் தண்ணீரையும் இனிமை என்று விரும்பாமல் உன் பெருமையைச் சிறிதாவது விரும்புவார்கள் ஆகில், உலகம் காப்புடையதாகி விடும். **2216**

சிறுமையும் அற்ப எண்ணமும் உடைய உலகினர் தங்களையே மேலோராகக் கருதும் அகங்காரத்தில் தாழ்ச்சியையே அடைகிறார்கள். நன்மை, தீமை அறியாதவரும் அறிவிலிகளாக உள்ளார். என் மனமே! மாவலியிடம் மண் கொண்டவனும் அதே பூமியைக் காக்க உண்டு உமிழ்ந்தவனும் ஆகிய மாயப்பிரானை இடைவிடாமல் பற்று. **2217**

பெருமானே! உன் கொப்பூழ்த் தாமரையில் நான்முகனைப் படைத்தாய். அப் பிரமன் பற்றிய உன் திருவடிகளை வாயாரத் துதித்துத் தலையால் நான் வணங்கா விட்டால் என்னுடைய பிறவிகள் எல்லாம் பயன் அற்றவையாய், துன்பம் தரும். **2218**

பெருஞ்செல்வம் தம்முடையதாக எண்ணிக் கர்வம் கொள்ப வரைப் போல் இருக்கக் கூடாது. ‘மாதவனே நமக்கு எக்காலத்தும் காப்பும் சார்வும்’ என்று எண்ணி அத் திருமாலின் திருநாமங்களை ஓதுவதே நாவுக்கு வேதம் போல ஓதுவதற்கு உரியது. **2219**

புருஷோத்தமனான திருமாலின் திருநாமங்களைத் துதிக்கும் செயலே, வேதப் பொருளின் முடிவான தீர்வாகும். வேதப்பொருளை அறிய முடியுமாயின் அறிந்து ஓதுங்கள். அறிவில் குறைந்தவரே! அவ்வேத அறிவு இல்லையாயினும் திருமகள் கேள்வனின் திருநாமங் களைப் பயில்வது, வேதச் சுருக்கம் என்று அறியுங்கள். **2220**

உடம்பைச் சூழ்ந்து, சுருங்கச் செய்யும் கோழை, நெருங்கித் துன்புறுத்துவதற்கு முன்பேயே திருமகள் மார்பனின் பாதத்தை நீங்கள் நினையுங்கள். எம்பெருமானைப் பற்றியன நீங்கள் அறிந்தாலும் புலன் இன்பங்கள், உங்களை அறிவிலிகள் ஆக்கிப் பாழ்படுத்தும். அவற்றால் எப் பயனும் இல்லை. **2221**

செல்வத்தால் தேவருலகம் அடைய முடியாது. அருளும் கருணையும் வடிவமான திருமால் நாம் செய்யும் புண்ணியத்துக்கு ஏற்ப அவ்வுலகத்தை அடையச் செய்வான். நெஞ்சமே! உயர்ந்த வேதியர்க்குத் தன் அருள் காட்டி, தன்னையே அளித்த நீலமணி நிறத் திருமாலின் திருவடிகளை நீ மறவாமல் தியானம் செய்வாய். **2222**

நினைப்பன் திருமாலை நீண்ட தோள் காண;
நினைப்பார் பிறப்பு ஒன்றும் நேரார்;- மனைப்பால்
பிறந்தார் பிறந்து எய்தும் பேரின்பம் எல்லாம்
துறந்தார்-தொழுதார் அத் தோள். 2223

தோள் இரண்டு எட்டு ஏழும் மூன்றும், முடி அனைத்தும்
தாள் இரண்டும் வீழச் சரம் துரந்தான்- தாள் இரண்டும்
ஆர் தொழுவார் பாதம் அவை தொழுவது அன்றே என்
சீர் கெழு தோள் செய்யும் சிறப்பு. 2224

சிறந்தார்க்கு எழு துணையாம் செங்கண் மால் நாமம்
மறந்தாரை மானிடமா வையேன்;- அறம் தாங்கும்
மாதவனே என்னும் மனம் படைத்து, மற்று அவன் பேர்
ஓதுவதே நாவினால் உள்ளு. 2225

உளது என்று இறுமாவார்; உண்டு, இல்லை என்று
தளர்தல்-அதன் அருகும் சாரார்-அளவு அரிய
வேதத்தான், வேங்கடத்தான், விண்ணோர் முடி தோயும்
பாதத்தான் பாதம் பயின்று. 2226

பயின்றது அரங்கம், திருக்கோட்டி; பல் நாள்
பயின்றதுவும் வேங்கடமே; பல்நாள்- பயின்றது
அணிதிகழும் சோலை அணி நீர் மலையே
மணி திகழும் வண் தடக்கை மால். 2227

மாலை அரி உருவன் பாதமலர் அணிந்து
காலை தொழுது எழுமின் கைகோலி-ஞாலம்
அளந்து இடந்து உண்டு உமிழ்ந்த அண்ணலை, மற்று அல்லால்
உளம் கிடந்து ஆற்றால் உணர்ந்து. 2228

உணர்ந்தாய் மறை நான்கும்; ஓதினாய் நீதி;
மணந்தாய் மலர் மகள் தோள்; மாலே- மணந்தாய் போய்
வேய் இருஞ் சாரல் வியல் இரு ஞாலம் சூழ்.
மா இருஞ் சோலை மலை. 2229





திருமாலின் நீண்ட தோள்களைக் காண விரும்பித் தியானம் செய்கிறேன். இவ்வாறு நினைப்பவர்கள் எவ்வகைப் பிறப்பையும் அடைய மாட்டார்கள். திருமாலின் திருத்தோள்களைக் காண்பதற்குத் தொழுபவர்கள், உலகத்தில் பிறவி எடுத்து அடையும் சிற்றின்பங்களை வெறுப்பார்கள். 2223

இராவணனின் இருபது தோள்களும் முளைத்த எல்லாத் தலைகளும் இரு கால்களும் விழும்படி, அம்பு விடுத்த இராமனின் இரு திருவடிகளையும் வணங்குபவர்கள் எவரோ, அவர்கள் திருவடிகளை வணங்குவதே சீர் மிகுந்த என் தோள்கள் எனக்குச் செய்யும் சிறப்பான உதவி ஆகும். 2224

செந்தாமரைக் கண்ணனின் திருநாமமே, வைணவ அடியார்களின் உய்வுக்குத் துணை ஆவது. திருமால் திருநாமத்தை மறந்தவரை மனிதப் பிறவியாக நான் எண்ணேன். நெஞ்சமே! 'தர்மத்தை நிலைநிறுத்துபவன் திருமாலே' என்று எண்ணி நாவினால் அவன் நாமம் ஓதுவதையே உரியது என்று பயிற்சி பெறுவாய். 2225

திருவேங்கடத்தில் நிற்கும் பெருமான் அளவில் அடங்காத வேதங்களால் விவரிக்கப்படுபவன். நித்திய சூரிகள் முடிகளை வைத்து வணங்கும் இப்பெருமானின் திருவடிகளில் தொழுது பழகுபவர்கள் தமக்குச் செல்வம் உள்ளதென்று இறுமாப்புக் கொள்ளார். இருந்த செல்வம் அழிந்ததே என்று தளரும் இயல்பையும் பெறாதவர் இவர். 2226

கொடை மிகுந்த திருக்கைகளுடைய நீலமணி நிறத் திருமால் எழுந்தருளிய திருத்தலங்கள் திருவரங்கமும் திருக்கோட்டியூரும் ஆகும். திருவேங்கடத்திலும் அழகிய சோலைகள் சூழ்ந்த திருநீர் மலையிலும் நெடுங்காலம் எழுந்தருளினான். 2227

உலகங்களை அளந்து அண்டபித்தியிலிருந்து எடுத்து, பிரளயத்தில் உண்டு, பின் உமிழ்ந்து காத்த தலைவனான திருமால் இவ்வாறு காப்பது மட்டுமின்றி அடியார்களின் நெஞ்சிலும் உள்ளான். அதனால், பிரகலாதனுக்கு அருள் செய்ய நரசிம்மம் ஆனான். இப்பிரானின் திருவடிகளில் மாலை இட்டு தினமும் காலையில் கைகூப்பி வணங்கி உய்வு பெறுங்கள். 2228

திருமாலே! நான்கு வேதங்களை உணர்ந்து பிரளயந்தோறும் காக்கிறாய்.- வேதவிரிவான, நீதி நூல்களை முனிவர் மூலம் அருளினாய். மலர்மகளான இலக்குமியின் தோள்களைக் கூடினாய். மூங்கில்கள் வளர்ந்த மலைப்பக்கங்கள் உள்ள திருமாலிருஞ் சோலை மலையில் மனம் உவந்து எழுந்தருளினாய். 2229

மலை ஏழும் மா நிலங்கள் ஏழும் அதிர
குலை சூழ் குரை கடல்கள் ஏழும்;-முலை சூழ்ந்த
நஞ்சு உரத்துப் பெண்ணை நவின்று உண்ட நாவன் என்று
அஞ்சாது என் நெஞ்சே! அழை. 2230

அழைப்பன் திருமாலை ஆங்கு அவர்கள் சொன்ன
பிழைப்பு இல் பெரும் பெயரே பேசி- இழைப்பு அரிய
ஆயவனே! யாதவனே! என்றவனை யார் முகப்பும்
மாயவனே! என்று மதித்து. 2231

மதிக் கண்டாய், நெஞ்சே! மணிவண்ணன் பாதம்;
மதிக் கண்டாய் மற்று! அவன் பேர்தன்னை;- மதிக் கண்டாய்
பேர் ஆழிநின்று பெயர்ந்து கடல் கடைந்த
நீர் ஆழி வண்ணன் நிறம். 2232

நிறம் கரியன்; செய்ய நெடு மலராள் மார்வன்;
அறம் பெரியன்; ஆர் அது அறிவார்-மறம் புரிந்த
வாள் அரக்கன் போல்வானை வானவர் கோன் தானத்து
நீள் இருக்கைக்கு உய்த்தான் நெறி? 2233

நெறியார் குழல் கற்றை முன்நின்று பின் தாழ்ந்து
அறியாது இளங் கிரி என்று எண்ணி- பிரியாது
பூங்கொடிக்கள் வைகும் பொரு புனல் குன்று என்னும்
வேங்கடமே யாம் விரும்பும் வெற்பு. 2234

வெற்பு என்று இரும் சோலை, வேங்கடம் என்று இவ் இரண்டும்
நிற்பு என்று நீ மதிக்கும் நீர்மை போல் -நிற்பு என்று
உளம்-கோயில்,உள்ளம் வைத்து உள்ளினேன்-வெள்ளத்து
இளங் கோயில் கைவிடேல் என்று. 2235

என்றும் மறந்தறியேன் ஏழ் பிறப்பும் எப்பொழுதும்
நின்று நினைப்பு ஒழியா நீர்மையால் - வென்றி
அடல் ஆழி கொண்ட அறிவனே இன்பக்
கடல் ஆழி நீ அருளிக் காண். 2236





*என்நெஞ்சமே! ஏழு மலைகள், ஏழுலகங்கள், ஏழுகடல்கள் யாவும் எதிரொலிக்க 'பூதனைப் பேயின் நஞ்சு முலையை உண்டவாறே மழலை பேசிய நாவுடையவனே!' என்று கண்ணனின் பெருமை கூறி அஞ்சாமல், அவனை வாய்திறந்து அழைப்பாய்.* 2230

*பயின்றார்க்குப் பிழைக்க ஒண்ணாதபடி ஈடுபடுத்தும் கண்ணனின் திருநாமங்களை ஆய்ப்பாடிப் பெண்கள் அழைத்தது போலே எல்லோர் எதிரிலும் கூவி அழைப்பேன். 'எண்ணரிய இடைப்பிள்ளையாய் யதுகுலத்தில் தோன்றிய மாயவனே!' என்று அழைப்பேன்.* 2231

*நெஞ்சே! நீலமணி நிறப் பெருமானின் பாதத்தை நினைப்பாய். அவன் திருநாமங்களை எண்ணித் தியானிப்பாய். பாற்கடலினின்று எழுந்து தேவர்களுக்காக அதனைக் கடைந்த கடல்வண்ணன் திருமேனி நிறத்தையும் தியானிக்கக் கடவாய்.* 2232

*கரியவனான திருமால் சிவந்த நிறமுடைய திருமகளை மார்பில் கொண்டவன்; அருளிலோ மிகவும் பெரியவன். வாள் கையனான இராவணனைப் போலப் பகை பாராட்டிய மாவலியை அவன் கொடைத் தன்மை காரணமாகப் பாதாள உலகில் வாழச் செய்தான். மறுபடியும் அவன் இந்திர உலகமான சுவர்க்கத்துக்கு அரசனாகும் வாய்ப்பை அருளிய பெருமையை யார் அறியவல்லார்?* 2233

*நாம் விரும்பும் திருமலை, எம்பெருமானின் திருவேங்கடமே ஆகும். இம் மலையையே எல்லாமாக எண்ணித் தியானத்தில் மூழ்கியவரின் மயிர் முடியை, அங்குள்ள பூங்கொடிகள் சிறிய மலை என்று எண்ணிப்படரும். அலை வீசும் அருவிகளும் உடையது இத்திருவேங்கடம்.* 2234

*திருமாலிருஞ்சோலைமலை, திருவேங்கட மலை ஆகிய இரு மலைகளும் நாம் உகந்து வாழும் இடம் என்று நீ உன் நீர்மைக் குணத்தால் பற்றி உள்ளாய், பெருமானே! என் நெஞ்சம் ஆகிய கோவிலையும் நீ வாழும் இடமாக உகந்ததை அறிந்தேன். என் நெஞ்சை நீ பெறத் திருப்பாற்கடல் இளங்கோவிலாக இருப்பதால் நன்றி உடையேன் . நான் அதை உகந்ததால் நீ அதைக் கைவிடலாகாது என வேண்டுகிறேன்.* 2235

*போரில் வெற்றியே பெறும் சக்கரத்தை ஏந்திய ஞானப் பிரானே! எல்லாப் பிறவிகளிலே எல்லா நிலைகளிலும் நிலை நின்று என்னைப் பற்றின எண்ணம் தவறாதிருந்தால் ஒரு பொழுதும் உன்னை மறவேன். உன்னை அடைந்து அனுபவிக்கும் மகிழ்ச்சிக் கடலை, நீயேதான் எனக்கு அருள வேண்டும்.* 2236

காணக் கழி காதல் கைமிக்குக் காட்டினால்,
நாணப்படும் என்றால், நாணுமே? -பேணிக்
கரு மாலைப் பொன் மேனி காட்டாமுன். காட்டும்
திருமாலை நங்கள் திரு. 2237

திருமங்கை நின்றருளும் தெய்வம் நா வாழ்த்தும்
கருமம் கடைப்பிடிமின் கண்டீர்;- உரிமையால்
ஏத்தினோம் பாதம், இருந் தடக்கை எந்தைபேர்
நால் திசையும் கேட்டீரே? நாம். 2238

நாம் பெற்ற நன்மையும் நா மங்கை நல் நெஞ்சத்து
ஓம்பி இருந்து எம்மை ஓதுவித்து-வேம்பின்
பொருள் நீர்மை ஆயினும் பொன் ஆழி பாடு என்று
அருள் நீர்மை தந்த அருள். 2239

அருள் புரிந்த சிந்தை அடியார்மேல் வைத்து,
பொருள் தெரிந்து காண்குற்ற அப்போது- இருள் திரிந்து
நோக்கினேன்; நோக்கி நினைந்தேன் அது ஒண் கமலம்;
ஓக்கினேன் என்னையும் அங்கு ஓர்ந்து. 2240

ஓர் உருவன் அல்லை; ஒளி உருவம் நின் உருவம்;
ஈர் உருவன் என்பர் இரு நிலத்தோர்;-ஓர் உருவம்
ஆதியாம் வண்ணம் அறிந்தார் அவர் கண்டீர்
நீதியால் மண் காப்பார், நின்று. 2241

நின்றது ஓர் பாதம் நிலம் புதைப்ப, நீண்ட தோள்
சென்று அளந்தது என்பர் திசை எல்லாம்-அன்று
கருமாணியாய் இரந்த கள்வனே உன்னைப்
பிரமாணித்தார் பெற்ற பேறு. 2242

பேறு ஒன்றும் முன் அறியேன்; பெற்று அறியேன் பேதைமையால்;
மாறு என்று சொல்லி வணங்கினேன்-ஏறின்
பெருத்தெருத்தம் கோடு ஒசிய, பெண் நசையின் பின் போய்,
எருத்து இறுத்த நல் ஆயர் ஏறு. 2243





திருமாலைக் கண்டு வணங்க வேண்டும் என்னும் காதல் மேன்மேலும் வளர்வதால் பொறுத்திருக்க வேண்டுமெனில் ஆறி இருக்க முடியுமோ? கரிய திருமாலின் அழகிய மேனியைக் காட்டும் முன்னே, நம்முடைய சார்பாகப் பரிந்துரைக்கும் பெரிய பிராட்டியார் விரும்பிக் காட்டிக் கொடுப்பாள். 2237

நான்கு திசைகளிலும் உள்ளவர்களே! கேளுங்கள்! பெரிய பிராட்டியார் வாழும் மார்புடைய பெருமானை நாவால் துதித்து வாழ்த்துவதைக் கடைப்பிடியுங்கள். நீண்ட கரங்கள் உடைய பெருமானின் திருவடிகளைப் பற்றி அவன் திருப் பெயர்களைக் கூறித் துதிப்போம் வாருங்கள். 2238

எம்பெருமானைப் பாடுவது, வேம்பு போலக் கசந்தாலும் அழகிய சக்கரத்தை உடையவனைப் பாடுவது என்று கலை மகள் நம் நெஞ்சில் இருந்து எம்மை ஓதுவித்துப் பாடச் செய்தாள். நாம் பெற்ற கவிதை பாடும் நன்மை, அருளையே இயல்பாக உடைய திருமாலின் அருளால் வந்தது. 2239

பகவான், அருள் செய்யும் திருவுள்ளத்தை அடியார்களாகிய எங்களிடம் வைத்து, பொருளல்லாத எங்களைப் பொருளாக ஏற்றான். இந்தக் கிருபையால் அறிவின்மை நீங்கப் பெற்று உள்ள படியே ஆத்மாவின் அடிமை நிலையை உணர்ந்தேன். ஓர்ந்து புகலில்லாத நான், அத் திருவடிகளில் என்னைக் காணிக்கை ஆக்கினேன். 2240

எம்பெருமானே! நீ, ஒருபடிப்பட்ட சுதந்திரமே வடிவாக இருப்பவன் மட்டும் அல்ல. அடியார்க்கு ஆட்படும் ஒளி வடிவம் அன்றோ உன்னுடையது? நீ பெரிய பரத்துவ வடிவானவன் என்று உலகோர் கூறுவர். ஆனால் நீயோ எல்லோருக்கும் உய்வு அருளும் பெருமானாய் அடியார்க்கு ஆட்படும் எளிவந்த தன்மையே வடிவாக உடையவன். இதை அறிந்தவர் நியாயப்படி, நிலைத்து நின்று உலகைக் காக்க வல்லவர். 2241

அன்று கரிய நிறமுடைய பிரமசாரியாக மாவலியிடம் மண்ணை யாசித்த கள்வனே! உன்னுடைய நின்ற திருவடி பூமியை வியாபித்தது. நீண்ட தோள்களோ திசைகளில் வியாபித்தன. வானை மற்றொரு திருவடி அளந்தது என்பார்கள். இவ்வாறு நீ செய்தது, உன்னையே நம்பினவர்கள் பெற்ற பெரும் பேறாகும். 2242

நப்பின்னையைப் பெறும் ஆசையால் கண்ணன், ஏழு எருதுகளின் பெரிய திமில்களையும் கொம்புகளையும் முறித்துக் கொன்றான். இந்த இடையர் தலைவன், நம் பாவங்களின் பகைவன் என்று கூறி அவனை வணங்கினேன். முன்போ, இத்தகைய உறுதிப்பேற்றை அறியாது இழந்தேன். 2243

ஏறு ஏழும் வென்று அடர்த்த எந்தை எரி உருவத்து
ஏறு ஏறி பட்ட இடுசாபம்- பாறு ஏறி
உண்டதலை வாய்நிறையக் கோட்டு அம் கை ஒண் குருதி
கண்டபொருள் சொல்லின் கதை. 2244

கதையின் பெரும் பொருளும் கண்ணா! நின் பேரே.
இதயம் இருந்தவையே! ஏத்தில்:- கதையும்
திருமொழியாய் நின்ற திருமாலே! உன்னைப்
பரு மொழியால் காணப் பணி. 2245

பணிந்தேன் திருமேனி; பைங் கமலம் கையால்
அணிந்தேன் உன் சேவடிமேல், அன்பாய்;-துணிந்தேன்
புரிந்து ஏத்தி உன்னை புகலிடம் பார்த்து ஆங்கே
இருந்து ஏத்தி வாழும் இது. 2246

இது கண்டாய், நல் நெஞ்சே! இப் பிறவி ஆவது;
இது கண்டாய் எல்லாம் நாம் உற்றது;- இது கண்டாய்
நாரணன் பேர் ஓதி நரகத்து அருகு அணையாக்
காரணமும்; வல்லையேல், காண். 2247

கண்டேன் திருமேனி யான் கனவில்; ஆங்கு அவன் கைக்
கண்டேன் கனலும் சுடர் ஆழி;- கண்டேன்
உறு நோய் வினை இரண்டும் ஓட்டுவித்து, பின்னும்
மறு நோய் செறுவான் வலி. 2248

வலிமிக்க வாள் எயிற்று வாள் அவுணர் மாள,
வலிமிக்க வாள் வரை மத்து ஆக,- வலி மிக்க
வாள்நாகம் சுற்றி மறுகக் கடல் கடைந்தான்
கோள்நாகம் கொம்பு ஒசித்த கோ. 2249

கோஆகி, மா நிலம் காத்து, நம் கண் முகப்பே
மாஏகிச் செல்கின்ற மன்னவரும்-பூ மேவும்
செங்கமல நாபியான் சேவடிக்கே ஏழ் பிறப்பும்,
தண்கமலம் ஏய்ந்தார் தமர். 2250





ஏழு எருதுகளை வென்று கொன்ற எந்தை கண்ணன், தீ நிறம் உடைய காளை வாகனன் சிவன் சாபத்தை நீக்கினான். பிரம சாபத்தைப் போக்கப் பருந்துகள் உண்ண அமரும் மண்டை ஓட்டின் வாய் நிரம்பும்படி, குவிந்த தன் கையால் திருமால் இட்ட இரத்தத்தால் அவ்வோடு நிறைந்து விழுந்து சிவன் சாபம் நீங்கிற்று. இந்தக் கதையைக் கூறத் தொடங்கினால் பாரதம் போலே விரியும். 2244

கண்ணபிரானே! இதிகாச புராணங்களின் பொருளும் சாரமும் உள்ளபடியே அறிந்து துதித்தால் அவை உன் திருநாமங்களே ஆகும். சிறந்ததான அழகிய வேதங்களின் உருவமாய் நிற்கும் திருமாலே! அந்த வேத மொழியால் உன்னைக் காண அருள வேண்டும். 2245

திருமாலே! உன் திருமேனியை வணங்குகிறேன். உன் திருவடிகளில் தாமரைப் பூக்களை இட்டு அன்புடன் விரும்பித் துதிக்கிறேன். பரம பத இருப்பை நோக்கி, அங்கே வாழ்ந்து உன்னை மங்களா சாசனம் செய்யும் வாழ்வைப் பெற உறுதி கொண்டேன். 2246

நல்ல மனமே! இப்பிறவியின் கொடுமையைக் கண்டுகொள்; இதனால் உண்டாகும் துன்பங்களையும் தெரிந்து கொள். ஸ்ரீமந் நாராயணனின் திருப்பெயர்களை ஓதி. நரகமாகிற இவ்வுலக வாழ்வின் அருகே நிற்கக்கூடாது என்று கண்டுகொள். இவ்வாறு இவற்றை நீயே தெரிந்து கொண்டால் உலகவாழ்வின் இழிவை உணர்வாய். 2247

அடியேன் கண்ட கனவில் திருமாலின் திருமேனியை வணங்கினேன். அவன் கையில் சக்கரத்தைக் கண்டேன். ஆத்மாவின் நோயான வினைகளைத் தொலைத்து மறுபடி துளிர்க்காதபடி அவற்றின் வேரையும் களையும் பெருமானின் மிடுக்கைக் கண்டேன். 2248

வாள் போன்ற பற்களை உடைய வலிமையான அசுரர்கள் அழிவிற்காகத் திருமால் வலிமை உடைய மந்தர மலையை மத்தாக வைத்து சக்தியும் ஒளியும் உடைய வாசுகிப் பாம்பைச் சுற்றிப் பாற் கடலைக் கடைந்தான். இப்பெருமானே, கொல்லும் கொள்கை உடைய குவலயாபீடயானையின் கொம்புகளை ஒடித்த கோமான். 2249

குதிரை ஏறித் திரிந்து நாடுகளைக் காத்து ஆட்சி செய்யும் பேரரசர்களை இவ்வுலகில் நம் கண் முன்னே காண்கிறோம். இவர்கள் இந்தப் பேறடையக் காரணம், பல பல ஜன்மங்களிலே கொப்பூழ்த் தாமரை உடைய திருமாலின் திருவடிகளில் தாமரைப் பூக்களை இட்டு வணங்கிய பக்தர்கள் ஆனதாலே தான். 2250

தமர் உள்ளம், தஞ்சை, தலை அரங்கம் தண்கால்,
தமர் உள்ளும் தண் பொருப்பு, வேலை,- தமர் உள்ளும்
மாமல்லை, கோவல், மதிள் குடந்தை என்பரே
ஏ வல்ல எந்தைக்கு இடம். 2251

இடங்கை வலம்புரி நின்று ஆர்ப்ப எரி கான்று,
அடங்கார் ஒடுங்குவித்தது ஆழி-விடம் காலும்
தீ வாய் அரவு அணை மேல் தோன்றல், திசை அளப்பான்.
பூ ஆர் அடி நிமிர்த்த போது. 2252

போது அறிந்து வானரங்கள், பூஞ்சுனை புக்கு ஆங்கு அலர்ந்த
போது அரிந்துகொண்டு ஏத்தும்; போது உள்ளம் போதும்
மணி வேங்கடவன் மலர் அடிக்கே செல்ல,
அணி-வேங்கடவன் பேர் ஆய்ந்து. 2253

ஆய்ந்து உரைப்பன் ஆயிரம் பேர், ஆதி நடு அந்திவாய்
வாய்ந்த மலர் தூவி, வைகலும்-ஏய்ந்த
பிறைக் கோட்டுச் செங்கண் கரி விடுத்த பெம்மான்
இறைக்கு ஆட்படத் துணிந்த யான். 2254

யானே தவம்செய்தேன், ஏழ் பிறப்பும் எப்பொழுதும்;
யானே தவம் உடையேன்; எம் பெருமான்!- யானே
இருந்தமிழ் நல்மாலை இணை அடிக்கே சொன்னேன்-
பெருந்தமிழன் நல்லேன், பெரிது. 2255

பெருகு மத வேழம் மாப் பிடிக்கு முன் நின்று,
இரு கண் இள மூங்கில் வாங்கி,- அருகு இருந்த
தேன் கலந்து நீட்டும் திருவேங்கடம் கண்டீர்-
வான் கலந்த வண்ணன் வரை. 2256

வரைச் சந்தனக் குழம்பும், வான் கலனும், பட்டும்
விரைப் பொலிந்த வெண் மல்லிகையும்- நிரைத்துக் கொண்டு
ஆதிக்கண் நின்ற அறிவன் அடி-இணையே
ஓதிப் பணிவது உறும். 2257





பக்தர்களின் நெஞ்சிலும், தஞ்சை மாமணிக் கோவில், தலைசிறந்த திருவரங்கம், திருத்தண்கால் ஆகிய இடங்களிலும் அடியார்கள் உகக்கும் திருமலை, திருப்பாற்கடல், திருக்கடல் மல்லை, திருக்கோவலூர் மதிளுடைய திருக்குடந்தை ஆகிய தலங்களிலும் அம்பு எய்வதில் வல்ல எந்தையான இராமன் எழுந்தருளி உள்ளான். 2251

நஞ்சுமிழும் தீவாயுடைய ஆதிசேஷன் மீது பள்ளி கொண்ட எம்பெருமான் உலகங்களை அளப்பதற்காகத் திருவடியைத் தூக்கிய பொழுது, இடக்கைச் சங்கு முழங்கியது. திருச்சக்கரம் நெருப்பை வெளியிட்டு எதிரிகளை ஒடுக்கிற்று. 2252

திருவேங்கட மலையில், குரங்குகள் காலையில் கண்விழித்ததும் சுனைகளில் மலர்ந்த பூக்களைப் பறித்துப் பெருமானிடம் இட்டுத் துதி செய்யும். மனமே! நீயும் புறப்படு. திருவேங்கடவன திருநாமங்களைக் கூறி அவன் திருவடிகளுக்குச் சேருமாறு பூக்களை இட்டு வணங்கு. 2253

பிறை போன்ற கொம்பையும் சிவந்த கண்களையும் உடைய கஜேந்திரனை விடுவித்த இறைவனுக்கு அடிமை செய்ய அடியேன் உறுதி கொண்டேன். காலை, பகல், மாலை முதலிய காலங்களில் வாய்ப்பான பூக்களைத் தூவி, அவன் ஆயிரம் திருநாமங்களையும் மனத்தால் எண்ணி, வாயால் பயில்வேன். 2254

எம்பெருமானே! எல்லாப் பிறவிகளிலும் எப்பொழுதும் தவம் புரிந்த நான் அத் தவத்தின் பயனைப் பெற்றேன். தமிழில் தொடுத்த சொல் மாலைகளை உன் இரு திருவடிகளிலும் சூட்டும் பேறு பெற்றேன். பெரிதான தமிழ்த் துறைகளில் மிகவும் சிறப்புப் பெறும் பேறுடையவன் நானே. 2255

மேக நிறமுடைய திருமாலின் திருவேங்கட மலையில், மதநீரைப் பெருக்கும் ஆண் யானை, தன் பெண் யானைக்கு இரு கணுக்களை உடைய மூங்கில் குருத்தைப் பறித்து, அருகே காணப்படும் தேனில் அதனைத் தோய்த்துக் கொடுக்கும். 2256

மலைச் சந்தனக் குழம்பையும் ஆபரணங்களையும் பட்டாடைகளையும் மணம் கூடிய மல்லிகை மாலைகளையும் எடுத்துக் கொண்டு ஆதிகாரணன் ஆகிய ஞானப் பெருமான் திருவேங்கடவன் இருதிருவடிகளில் வழிபட்டுத் துதித்துப் பணிவது அடியார்களுக்கு ஏற்றதாகும். 2257

உறுங்கண்டாய், நல் நெஞ்சே! உத்தமன் நற் பாதம்;
உறுங்கண்டாய், ஒண் கமலம் தன்னால்;- உறுங் கண்டாய்
ஏத்திப் பணிந்து அவன் பேர் ஈர் ஐஞ்ஞூறு எப்பொழுதும்,
சாற்றி உரைத்தல் தவம். 2258

தவம்செய்து, நான் முகனே பெற்றான் தரணி
நிவந்து அளப்ப நீட்டிய பொற் பாதம்;-சிவந்த தன்
கை அனைத்தும் ஆரக் கழுவினான் கங்கை நீர்
பெய்து அனைத்துப் பேர் மொழிந்து, பின். 2259

பின் நின்று தாய் இரப்ப, கேளான்; பெரும் பணைத் தோள்
முன் நின்று தான் இரப்பாள், மொய்ம் மலராள்;-சொல் நின்ற
தோள் நலத்தான் நேர் இல்லாத் தோன்றல், அவன் அளந்த
நீள் நிலம் தான் அத்தனைக்கும் நேர். 2260

நேர்ந்தேன் அடிமை; நினைந்தேன் அது ஒண் கமலம்;
ஆர்ந்தேன் உன் சேவடிமேல், அன்பாய்;- ஆர்ந்த
அடிக் கோலம் கண்டவர்க்கு என்கொலோ- முன்னைப்
படிக் கோலம் கண்ட பகல்? 2261

பகல் கண்டேன்; நாரணனைக் கண்டேன்; கனவில்
மிகக் கண்டேன் மீண்டு அவனை மெய்யே; மிகக் கண்டேன்
ஊன் திகழும் நேமி ஒளி திகழும் சேவடியான்
வான் திகழும் சோதி வடிவு. 2262

வடிக் கோல வாள் நெடுங் கண் மா மலராள் செவ்விப்
படிக் கோலம் கண்டு அகலாள், பல்நாள்;- அடிக்கோலி
ஞாலத்தாள் பின்னும் நலம் புரிந்தது என்கொலோ?
கோலத்தால் இல்லை குறை. 2263

குறையாக வெம் சொற்கள் கூறினேன்; கூறி
மறை ஆங்கு என உரைத்த மாலை,- இறையேனும்
ஈயும்கொல் என்றே இருந்தேன் எனைப் பகலும்
மாயன்கண் சென்ற வரம். 2264





நல்ல மனமே! உத்தமனான திருமாலின் நற்பாதத்தில் ஒளியுள்ள தாமரைப் பூக்களை இட்டு, மாலை அணிவித்து, வழிபட்டு, வாயாரத் துதித்து, அவன் ஆயிரம் திருநாமங்களை எப்பொழுதும் கூறுவது தவம் போல் மேலாகும். 2258

பூமியைத் தாவி அளக்க வளர்ந்து நின்ற திரிவிக்கிரமனின் பொற்பாதத்தில் பிரமன், கங்கையாகப் பெருகும் படி நீரை வார்த்து, அவன் திருநாமங்களைக் கூறித் தன் சிவந்த கைகள் ஆரத்தொட்டுக் கழுவினான். அதனால் அவன் பகவான் திருநாமங்களைக் கூறிய பயனைப் பெற்றான். 2259

இராமபிரான் தன்னைப் பின் தொடர்ந்த கோசலைத் தாயின் வேண்டுதலை ஏற்கவில்லை. மூங்கில் தோளுடைய திருமகளான சீதையின் வேண்டுகோளையும் ஏற்கவில்லை. வாய்மைச் சொல்லை நிலை நிறுத்த, தோள் பலம் பொருந்திய இராமன் காடு சென்ற செயல், உலகளந்த எம்பெருமான் செயலை ஒத்ததாகும். 2260

திருமாலே! உன் திருவடிகளில் கைங்கர்யம் செய்ய வாய்ப்புப் பெற்றேன். உன் தாமரைத் திருவடிகளை நினைத்து, அன்புடன் பக்தி மேவிடப் பெற்றேன். உலகளந்த உன் திருவடிகளைக் கண்டு வணங்கப் பெற்றவர்க்கு, இயற்கை அலங்காரங்களைக் காணப்பெற்ற முற்காலம் சிறப்பாகுமோ? 2261

இரவு கலவாத பகல் போலுள்ள ஸ்ரீமந் நாராயணன் ஆகிற சூரியனைக் கண்டேன். மறுபடியும் மனத்தில் ஏற்படும் உருவெளிப் பாட்டினும் மேலான தெளிவுடன் அவனைக் காணப்பெற்றேன். சக்கரம் ஏந்தியபெருமானின் ஒளிமயமான திருவடிகளையும் பரமபதத்தில் விளங்கும் சோதி மயமான திருமேனியையும் நன்றாகக் கண்டேன். 2262

ஒளிபொருந்திய கண்களுடன் அழகே வடிவெடுத்த திருமகள் எம்பெருமானின் அழகைக் கண்டு அனுபவித்து கணப்பொழுதும் பிரியாமல் கூடி இருக்கிறாள். பூமிப்பிராட்டியார் இதனைக் கண்டும் மிகுந்த பாரிப்புடன் அவனிடம் தன் ஆசையை பெருக்கிக் கொண்டது. ஏனோ! எம்பெருமானிடத்தில் உள்ள அழகு எல்லை இல்லாதது என்பதால், பலரும் ஆசைப்படுவதால் குறை இல்லை. 2263

எம்பெருமானைப் பற்றித் தெளிவாகக் காட்ட முடியாத வேதம் ‘அது’ என்றே கூறி நின்றுவிடடது. அப்படியாயின் நானோ குறைவுடைய புன்சொற்களால் அவனைப் பேசினேன். மாயனான பெருமான் சிறிதாவது அருள் தருவானோ என்னும் பயன் எதிர்பார்க்கும் ஆசையுடன் வெகு காலமாய் இருக்கிறேனே? என்னே இது !! 2264

வரம் கருதி, தன்னை வணங்காத வன்மை
உரம் கருதி, மூர்க்கத்தவனை-நரம் கலந்த
சிங்கமாய்க் கீண்ட திருவன் அடி இணையே
அம்கண் மா ஞாலத்து அமுது. 2265

அமுது என்றும், தேன் என்றும், ஆழியான் என்றும்
அமுது அன்று கொண்டு உகந்தான் என்றும்- அமுது அன்ன
சொல் மாலை ஏத்தித் தொழுதேன்-சொலப்பட்ட
நல்மாலை ஏத்தி, நவின்று. 2266

நவின்று உரைத்த நாவலர்கள் நாள்மலர் கொண்டு, ஆங்கே
பயின்றதனால் பெற்ற பயன் என்கொல்?- பயின்றார் தம்
மெய்த் தவத்தால் காண்பு அரிய மேக மணி வண்ணனை யான்
எத்தவத்தால் காண்பன்கொல் இன்று? 2267

இன்றா அறிகின்றேன் அல்லேன் இரு நிலத்தைச்
சென்று ஆங்கு அளந்த திருவடியை;- அன்று
கருக்கோட்டியுள கிடந்து கைதொழுதேன், கண்டேன்
திருக்கோட்டி எந்தை திறம். 2268

திறம்பிற்று, இனி அறிந்தேன்-தென் அரங்கத்து எந்தை
திறம்பா வழிச் சென்றார்க்கு அல்லால்,- திறம்பாச்
செடிநரகை நீக்கித் தாம் செல்வதன் முன், வானோர்
கடிநகர வாசல் கதவு. 2269

கதவி, கதம் சிறந்த கஞ்சனை முன் காய்ந்து;
அதவிப் போர் யானை ஒசித்து; -பதவியாய்ப்
பாணியால் நீர் ஏற்று பண்டு ஒருகால் மாவலியை
மாணியாய்க் கொண்டிலையே மண்? 2270

மண்ணுலகம் ஆளேனே; வானவர்க்கும் வானவனாய்
விண்ணுலகம் தன் அகத்து மேவேனே-நண்ணித்
திருமாலை செங்கண் நெடியானை எங்கள்
பெருமானைக் கைதொழுத பின். 2271





இரணியன், தான் பெற்ற வரத்தால் தன் உடல் பலத்தைப் பெரிதாக எண்ணிப் பிடிவாதத்துடன் இறைவனை வணங்கவில்லை. ஆதலால், திருமால் நரசிம்மமாய்த் தோன்றி அவனைப் பிளந்தான். அந்த அழகிய சிங்கப் பிரானின் இரு பாதங்களே அழகான இவ்வுலகில் அமுதத்திலும் இனிமை ஆனவை. 2265

"சக்கரம் ஏந்திய பெருமான் அமுதத்தையும் தேனையும் போல் இனியவன். அன்று தேவர்க்கு அமுதம் அளித்தவன்" என்று சாத்திரங்கள் புகழ்கின்றன. இத்திருமாலை, அடியேன் அமுதம் போனற சொல்மாலையால் பலபடித் துதித்து வணங்குகிறேன். 2266

பயனே நோக்கமாய் இறைவன் திருநாமத்தைக் கூறும் நாவன்மை உடையோர் பூக்களால் வழிபடுவதால் பெற்ற பயன் என்ன? உடலை வருத்திச் செய்யும் தவத்தால் அவனைக் காண இயலாது. மேகத்தையும் மணியையும் ஒத்த அவனை இப்பொழுது எத்தவத்தால் காண்கிறேன்? அவனே அவன் அருள் காட்டினால் காணமுடியும். 2267

அடியேன் கருப்பையில் கிடந்த பொழுதே, திருக்கோட்டியூர்ப் பெருமானைக் கண்டேன். கை தொழுதேன். பரந்த உலகை அளந்த அவன் திருவடியை இன்றைக்கா நான் அறிகின்றேன்? கருப்பை நாள் முதல் மறவாமலிருக்கிறேன். 2268

எந்தையாகிய திருவரங்கனையே உபாயமாகக் கொள்ளும் தவறாத வழியில் செல்பவர்களுக்கு அவனை அடைய முடியும். மற்றவர்கள் புதர் போன்ற உலக வாழ்க்கையை அறுத்துப் போகு முன்பேயே, நித்திய சூரிகளின் வைகுந்த வாசல் மூடி விடும். இதை இப்பொழுது அறிந்து கொண்டேன். 2269

கண்ணபிரானே! சினம் மிகுந்த கம்சனை அழித்துப் போரிடவந்த குவலயாபீட யானையின் கொம்பை முறித்தாயே! பண்டு நீர்மைக் குணமுடன் பிரமசாரியாய் வந்த வாமனப் பெருமானே! மாவலியிடமிருந்து கையில் நீர் ஏற்றுப் பூமியைப் பெற்றாயே! 2270

திருமகள் கேள்வனான, சிவந்த கண்களுடைய நெடிய பெருமானைக் கிட்டிக் கைதொழுத பின் இவ்வுலகை நானிட்ட வழக்காக ஆள முடியாதோ? நித்தியசூரிகள் தலைவனாய் ஆகி, இம் மண்ணிலேயே, விண் உலகை ஆளுகை பெரிய பணி ஆகுமோ! அப் பேரானந்தம் அனுபவிக்க மாட்டேனோ? 2271

பின்னால் அரு நரகம் சேராமல், பேதுறுவீர்!
முன்னால் வணங்க முயல்மினோ-பல் நூல்
அளந்தானைக் கார்க் கடல் சூழ் ஞாலத்தை எல்லாம்
அளந்தான் அவன் சேவடி. 2272

அடியால் முன் கஞ்சனைச் செற்று, அமரர் ஏத்தும்
படியான், கொடிமேல் புள் கொண்டான், -நெடியான் தன்
நாமமே ஏத்துமின்கள்; ஏத்தினால், தாம் வேண்டும்
காமமே காட்டும் கடிது. 2273

கடிது கொடு நரகம், பிற்காலும் செய்கை
கொடிது என்று, அது கூடாமுன்னம்- வடி சங்கம்
கொண்டானைக் கூந்தல் வாய் கீண்டானை, கொங்கை நஞ்சு
உண்டானை, ஏத்துமினோ உற்று. 2274

உற்று வணங்கித் தொழுமின்; உலகு ஏழும்
முற்றும் விழுங்கும் முகில் வண்ணன்,- பற்றிப்
பொருந்தாதான் மார்பு இடந்து, பூம் பாடகத்துள்
இருந்தானை ஏத்தும் என் நெஞ்சு. 2275

என் நெஞ்சம் மேயான்; என் சென்னியான் தானவனை
வல் நெஞ்சம் கீண்ட மணி வண்ணன், -முன்னம் சேய்
ஊழியான் ஊழி பெயர்த்தான், உலகு ஏத்தும்
ஆழியான் அத்தியூரான். 2276

அத்தியூரான், புள்ளை ஊர்வான், அணி மணியின்
துத்தி சேர் நாகத்தின்மேல் துயில்வான் -முத்தீ
மறை ஆவான், மா கடல் நஞ்சு உண்டான் தனக்கும்
இறை ஆவான் எங்கள் பிரான். 2277

எங்கள் பெருமான், இமையோர் தலைமகன், நீ!
செங்கண் நெடு மால்! திருமார்பா!- பொங்கு
பட மூக்கின் ஆயிர வாய்ப் பாம்பு அணை மேல் சேர்ந்தாய்
குடமூக்குக் கோயிலாக் கொண்டு. 2278





*உடல் அழிந்தபின் கொடிய நரகத்தைச் சேராமலிருப்பது எப்படி என்று மனம் கலங்குபவரே! எல்லாப் பிரமாண நூல்களால் நிச்சயிக்கப்பட்டவனும் கருங்கடல் சூழ்ந்த உலகை அளந்து கொண்டவனும் ஆன திருமால் திருவடிகளை இப்பொழுதே வணங்க முயற்சி செய்யுங்கள்.* **2272**

*தன் திருவடிகளால் கம்சனை உதைத்துக் கொன்றவனும், தேவர்கள் துதிக்கக் கருட வாகனத்தில் ஏறியவனும், நெடியவனும், ஆன திருமாலின் திருப்பெயர்களைக் கூறித் துதியுங்கள். அவ்வாறு துதித்தால் உங்கள் விருப்பங்களைத் திருநாமம் அடையச் செய்யும்.* **2273**

*கொடிய நரகம் கோரமானது. அங்குள்ள வேதனைகள் பொறுக்க முடியாதவை. இவற்றை அறிந்த பின் நரக வேதனை வராதபடி பாஞ்சசன்னியம் ஏந்தியவனைத் துதியுங்கள். கேசியின் வாயைக் கிழித்தவனும், பூதனைப் பேயின் நஞ்சை உண்டவனும் ஆன கண்ணபிரானுக்கு ஆட்பட்டுத் துதி செய்யுங்கள்.* **2274**

*மேகநிறத் திருமால் உலகங்களை விழுங்கிக் காத்தான். எதிர்த்த இரணியன் மார்பைக் கிழித்தான்; திருப்பாடகம் என்னும் தலத்தில் எழுந்தருளினான். என் நெஞ்சம் இப்பெருமானை நினைந்து துதிக்கும். நீங்களும் இப்படியே அவனை வணங்கி ஆட்படுங்கள்.* **2275**

*இரணியனின் மார்பைக் கிழித்த நீலமணி நிறத் திருமால் படைப்புக் காலத்தில் எல்லாமாய் ஆனான். பிரளயத்தில் லயம் செய்தான். உலகோர் துதிக்கும்படி பாற்கடலில் பள்ளி கொண்டான். திருவத்தியூரில் எழுந்தருளிய இவனே என் நெஞ்சிலும் தலையிலும் எழுந்தருளி உள்ளான்.* **2276**

*கருடனை வாகனமாக உடைய திருமால், மாணிக்கங்களும் பொறிகளும் உள்ள ஆதிசேஷன் மேல் பள்ளி கொண்டான். மூன்று வேள்வித் தீயினைக் கூறும் வேதத்தால் விவரிக்கப்படுபவன். பாற்கடல் நஞ்சை உண்ட சிவனுக்கும் இறைவன். எங்கள் பெருமானாகத் திருவத்தியூரில் எழுந்தருளினான்.* **2277**

*திருமகளை மார்பில் கொண்டவனே! சிவந்த திருக்கண்களுடன் நித்திய சூரிகள் தலைவனாயும் எங்கள் பெருமானாயும் உள்ள நீ, குடமூக்கு என்னும் கும்பகோணத் தலத்தில் எழுந்தருளினாய். உயர்ந்த படங்களையும் மூக்கையும் ஆயிரம் வாய்களையும் உடைய ஆதிசேஷன் மீது பள்ளிகொண்டாயே!* **2278**

கொண்டு வளர்க்க, குழவியாத் தான் வளர்ந்தது;
உண்டது உலகு ஏழும், உள் ஒடுங்க;- கொண்டு
குடம் ஆடி கோவலனாய் மேவி என் நெஞ்சம்
இடமாகக் கொண்ட இறை. 2279

இறை எம் பெருமான்; அருள் என்று, இமையோர்
முறை நின்று, மொய்ம் மலர்கள் தூவ,- அறை கழல
சேவடியான், செங்கண் நெடியான், குறள் உருவாய்
மாவடிவில் மண் கொண்டான் மால். 2280

மாலே! நெடியோனே! கண்ணனே! விண்ணவர்க்கு
மேலா! வியன் துழாய்க் கண்ணியனே!- மேலால்
விளவின் காய் கன்றினால் வீழ்த்தவனே என் தன்
அளவு அன்றால், யானுடைய அன்பு. 2281

## இரண்டாந் திருவந்தாதி முற்றிற்று





*இடையனாய்ப் பிறந்து குடக்கூத்தாடிய கண்ண பெருமான் என் நெஞ்சையே கோவிலாகக் கொண்டு நிலை நின்ற இறைவன் அன்றோ! இப் பெருமான், இயற்கையில் எடுத்து வளர்க்க வேண்டும் படியான பச்சைக் குழந்தையாய் வளர்ந்தருளிய மாயம் என்னே! ஆயினும் தன் வயிற்றின் மூலையில் ஒடுங்கும்படி ஏழு உலகங்களையும் உண்ட மாயம் தான் என்னே!* **2279**

*பிரமன், சிவன் முதலிய தெய்வங்கள் "எம்பெருமானே எங்களுக்கு அருள்க" என்று அடிமைக்கு ஏற்ப நின்று பூக்களைக் திருவடிகளில் தூவி வழிபடுவர். இத்தகைய வீரக் கழலுடைய திருவடிகளைப் பெற்ற செங்கண் மால் அடியார்கள் மேல் கொண்ட அன்பால் வாமனனாய் வந்து மாவலியிடம் பூமியை அளந்து கொண்டானே!* **2280**

*அடியார்களிடம் மோகம் கொண்டவனே! அளவிட முடியாத இறைவனே! நித்திய சூரிகளின் தலைவனே! திருத்துழாய் மாலை அணிந்தவனே! கண்ண பெருமானே! முன்பொருகால் விளங்காயைக் கன்றால் வீழ்த்தியவனே! உன்னிடம் அடியேன் வைத்துள்ள பக்திப் பெருக்கான அன்பு என்னளவில் அடங்காதது.* **2281**

## இரண்டாந் திருவந்தாதி முற்றிற்று



ஸ்ரீ :

# இயற்பா

பேயாழ்வார் அருளிய
மூன்றாந் திருவந்தாதி

## நாலாயிர திவ்யப் பிரபந்தம்

ஸ்ரீ :

# நாலாயிர திவ்வியப் பிரபந்தம்

## இயற்பா

பேயாழ்வார் அருளிய

மூன்றாந் திருவந்தாதித் தனியன்

சீராரும் மாடத் திருக்கோவல் ஊரதனுள்
காரார் கருமுகிலைக் காணப்புக்கு- ஓராத்
திருக் கண்டேன் என்றுரைத்த சீரான் கழலே
உரைக் கண்டாய் நெஞ்சே உகந்து.

- குருகைக் காவல் அப்பன் அருளியது.



ஸ்ரீ :

# நாலாயிர திவ்வியப் பிரபந்தம்

## இயற்பா

பேயாழ்வார் அருளிய

மூன்றாந் திருவந்தாதித் தனியன் உரை

நெஞ்சே! அழகிய மாடங்கள் உள்ள திருக்கோவலூரில் இடை கழியில் கார்கால மேகம் நிறம் உடைய திருமாலை, வணங்கப் புகுந்து இதயமாகிய ஞானக் கண்ணாலே பயின்று, திருக்கண்டேன், என்னும் நூறு பாசுரங்களை அருளிய சீர்மை கொண்ட பேயாழ்வார் திருவடிகளையே நீ மகிழ்ந்து பேசு.

- குருகைக் காவல் அப்பன் அருளியது.

ஸ்ரீ:

# பேயாழ்வார் அருளிச்செய்த

## மூன்றாந் திருவந்தாதி

திருக் கண்டேன்; பொன் மேனி கண்டேன்; திகழும்
அருக்கன் அணி நிறமும் கண்டேன்;- செருக் கிளரும்
பொன் ஆழி கண்டேன்; புரி சங்கம் கைக் கண்டேன்
என் ஆழி வண்ணன்பால், இன்று. 2282

இன்றே கழல் கண்டேன்; ஏழ் பிறப்பும் யான் அறுத்தேன்
பொன் தோய் வரை மார்பில் பூந் துழாய்- அன்று
திருக் கண்டு கொண்ட திருமாலே! உன்னை
மருக்கண்டு கொண்டு என் மனம். 2283

மனத்து உள்ளான்-மா கடல் நீர் உள்ளான், மலராள்
தனத்து உள்ளான், தண் துழாய் மார்பன்- சினத்துச்
செருநர் உகச் செற்று, உகந்த தேங்கு ஓத வண்ணன்,
வரு நரகம் தீர்க்கும் மருந்து. 2284

மருந்தும் பொருளும் அமுதமும் தானே
திருந்திய செங் கண் மால் ஆங்கே- பொருந்தியும்
நின்று உலகம் உண்டு, உமிழ்ந்து, நீர் ஏற்று மூவடியால்
அன்று உலகம் தாயோன் அடி 2285

அடி வண்ணம் தாமரை; அன்று உலகம் தாயோன்
படி வண்ணம் பார்க் கடல் நீர் வண்ணம்;- முடி வண்ணம்
ஓர் ஆழி வெய்யோன்; ஒளியும் அஃது அன்றே
ஆர் ஆழி கொண்டாற்கு அழகு. 2286

அழகு அன்றே ஆழியாற்கு ஆழி நீர் வண்ணம்?
அழகு அன்றே அண்டம் கடத்தல்?- அழகு அன்றே
அங்கை நீர் ஏற்றாற்கு அலர் மேலோன் கால் கழுவ,
கங்கை நீர் கான்ற கழல்? 2287



ஸ்ரீ:

பேயாழ்வார் அருளிச்செய்த

மூன்றாந் திருவந்தாதி

*இப்பொழுது கடல் நிறப் பெருமானுடன் திருவாகிய பெரிய பிராட்டியைக் கண்டு வணங்கப் பெற்றேன். பொன்னின் ஒளி வீசும் அழகிய திருமேனியைக் கண்டேன். இருவரின் சேர்த்தியில் இளவெயில் கலந்தாற்போலே, சூரியனின் அழகையும் ஒளியையும் கண்டேன். போரில் சீறி எழும் சக்கரத்தை வலக்கையிலும், வலம்புரிச் சங்கை இடக்கையிலும் கண்டு சேவிக்கப் பெற்றேன்.* **2282**

*பொன் ஆபரணங்கள் பூண்ட மலை போன்ற மார்பில் திருத்துழாய் உடையவனே! கடல் கடைந்த அன்று திருமகள் கண்டு உகந்த திருமாலே! அடியேன் மனம் உன் இடத்தே பொருந்தி விட்டது. இன்றே உன் திருவடிகளைக் கண்டு அனுபவிக்கப் பெற்றேன். அதனால் எல்லாப் பிறவிகளையும் இனித் தொடரதபடி அறுத்து விட்டேன்.* **2283**

*திருப்பாற்கடலில் கண் வளர்ந்த திருத்துழாய் மார்புடைய திருமால், மலரில் வாழும் திருமகள் மார்பகங்களில் அடங்கிக் கிடப்பவன். அடியார்களின் பகைவர்களைச் சீறி அழித்து உகந்தவன். கடல் நிறவடிவமுடைய எம்பெருமான் பிறவியாகிய நரகத்தைப் போக்க வல்ல மருந்தாவான். இவன் என் நெஞ்சில் வாழ்கிறான்.* **2284**

*பரம்பொருள் என்று தெளிவாகக் காணத் தக்க திருமால், செந்தாமரைக கண்கள் உடையவன். காப்பாற்றுவதில் நின்று பொருந்திய பெருமான், உலகங்களை உண்டு உமிழ்ந்து பாலிக்கிறான். அன்று மாவலி இடம நீர் ஏற்று, மூவடியாலே உலகுகளைத் தாவி அளந்தான். அவன் திருவடிகளே பிறவிப் பிணிக்கு மருந்தாயும் அரும்பொருளாயும் அமுதமாயும் உள்ளவை.* **2285**

*அன்று உலகங்களைத் தாவி அளந்தவனின் திருவடிகளின் நிறம் தாமரை போன்ற சிவப்பு ஆகும். திருமேனி, பூமியைச் சூழ்ந்த கடலின் கறுத்த நிறம். திருமுடி ஒற்றைச் சக்கரமுடைய சூரியனின் ஒளி நிறம் உடையது. திருமேனி ஒளியும் சூரியனைப் போன்றதே! கையில் சக்கரம் ஏந்திய இப்பெருமானின் அழகுதான் என்னே! என்னே!!* **2286**

*சக்கரம் ஏந்திய திருமாலுக்குக் கடல் நீர் நிறம் அழகே வடிவெடுத்தது அன்றோ? உலகங்களை அளந்த செயலோ மேலான அழகிய செயல் அன்றோ! மாவலியிடம் நீர் ஏற்றதும் தாமரையில் வாழும் பிரமன் திருமாலின் திருவடிகளை விளக்கிக் கங்கை நீரைப் பெருகச் செய்த பொழுது அத் திருவடிகளின் அழகே வடிவெடுத்தன அன்றோ!* **2287**

கழல் தொழுதும் வா, நெஞ்சே கார்க் கடல் நீர் வேலைப்
பொழில் அளந்த புள் ஊர்திச் செல்வன்- எழில் அளந்து அங்கு
எண்ணற்கு அரியானை, எப் பொருட்கும் சேயானை,
நண்ணற்கு அரியானை, நாம். 2288

நாமம் பல சொல்லி நாராயணா என்று
நாம் அங்கையால் தொழுதும் நல் நெஞ்சே!- வா, மருவி;
மண்ணுலகம் உண்டு உமிழ்ந்த வண்டு அறையும் தண் துழாய்
கண்ணனையே காண்க, நம் கண். 2289

கண்ணும் கமலம்; கமலமே கைத்தலமும்;
மண் அளந்த பாதமும் மற்று அவையே;- எண்ணில்
கருமாமுகில் வண்ணன் கார்க் கடல் நீர் வண்ணன்,
திருமாமணி வண்ணன் தேசு. 2290

தேசும், திறலும் திருவும் உருவமும்,
மாசு இல் குடிப்பிறப்பும், மற்றவையும்-பேசில்
வலம் புரிந்த வான் சங்கம் கொண்டான் பேர் ஓத-
நலம் புரிந்து சென்று அடையும் நன்கு. 2291

நன்கு ஓதும் நால் வேதத்து உள்ளான்; நறவு இரியும்
பொங்கு ஓதருவிப் புனல் வண்ணன்;- சங்கு ஓதப்
பாற்கடலான்; பாம்பு அணையின் மேலான்; பயின்று உரைப்பார்
நூல்-கடலான்; நுண் அறிவினான். 2292

அறிவு என்னும் தாள் கொளுவி, ஐம்புலனும் தம்மில்
செறிவு என்னும் திண் கதவம் செம்மி -மறை என்றும்
நன்கு ஓதி நன்கு உணர்வார் காண்பரே-நாள்தோறும்
பைங்கோத வண்ணன் படி. 2293

படி வட்டத் தாமரை, பண்டு உலகம் நீர் ஏற்று,
அடி-வட்டத்தால் அளப்ப, நீண்ட -முடி வட்டம்
ஆகாயம் ஊடறுத்து அண்டம் போய் நீண்டதே
மா காயமாய் நின்ற மாற்கு. 2294





கருடவாகனன் ஆன திருமகள் கேள்வன் கடலைக் கரையாகக் கொண்ட பூமியை அளந்தான். எண்ணமுடியாத அழகுடைய அவன் எல்லாவற்றிற்கும் அப்பாலானவனாய் அணுக முடியாதவனாய் உள்ளான். ஓ! மனமே! அப்பெருமானின் திருவடிகளை நாம் வணங்குவோம் வா. 2288

நல்ல மனமே! பகவானின் பல நாமங்களைக் கூறுவோம்; அவற்றில் முக்கியமான 'நாராயணா' நாமத்தைக் கூறிக் கைகளால் வணங்குவோம். உலகங்களை அளந்தவனும் பிரளயத்தில் அவற்றை உண்டு, உமிழ்ந்தவனும் ஆகிய, திருத்துழாய் மாலை அணிந்த கண்ணனையே நம் கண்கள் காண்க. 2289

மேகம், கடல், மணி ஆகியவற்றின் கருநீல நிறமுடைய எம்பெருமானின் அழகை எண்ணினால் திருக்கண்களும் திருக் கைகளும் தாமரைப் பூப்போன்றவை என்பதாகும். மற்றும் உலகளந்த அவன் திருவடிகளும் தாமரைப் பூக்களே ஆகும். 2290

வெண்மையான வலம் புரிச் சங்கைக் கையில் ஏந்திய பெருமானின் திருநாமங்களைப் பற்றிப் பேசினால் நமக்கு மதிப்பும் திறமையும் செல்வமும் அழகிய வடிவமும் குற்றமற்ற குடிப்பிறப்பும் மற்றும் நன்மைகளும் தாமே விரும்பி வந்து சேரும். 2291

திருமால், நன்றாக ஓதப்படும் நான்கு வேதப்பொருள் ஆனவன். தேன் இனிமையும் சிறிது என்னும்படியான இனிமையும், அருவிநீர் போன்ற வண்ணமும் உடையவன். சங்குகளுடன் கூடிய அலைகள் வீசும் திருப்பாற்கடலில் ஆதிசேஷன் மேல் கண் வளர்பவன். வேதியர்களின் கடல் போன்ற சாத்திரங்களால் விவரிக்கப்படுபவன். தன் முயற்சியால் அறிவார்க்கு அறியப் படாதவன். 2292

வேதத்தை என்றும் பயின்று, ஞானம் என்னும் தாழ்ப்பாளைப் போட்டு ஐம்புலன்களும், தம் வழியே செல்லாதபடி அடக்குவதற்கான திண்ணிய கதவை அடைத்து, நன்றாகத் தியானம் செய்பவர் கடல் வண்ணப் பெருமானின் தன்மைகளைத் தினந்தோறும் காணப் பெறுவர். 2293

பண்டு வாமனப் பிரான் நீர் ஏற்று உலகைத் தானமாகப் பெற்று, தாமரை போல் வட்டமாய் உள்ள பூமியை அளப்பதற்காக வானைத் தொடும்படியான பெரிய வடிவில் வளர்ந்தான். அவன் திருமுடி வளையம் வானை ஊடேறுத்து அண்டபித்திவரை நீண்டதே! இது என்ன ஆச்சரியம்! 2294

மாற்பால் மனம் சுழிப்ப, மங்கையர் தோள் கைவிட்டு
நூற்பால் மனம் வைக்க நொய்விது ஆம்-நாற் பால்
வேதத்தான், வேங்கடத்தான், விண்ணோர் முடி தோயும்
பாதத்தான் பாதம் பணிந்து. 2295

பணிந்து உயர்ந்த பௌவப் படு திரைகள் மோத,
பணிந்த பண மணிகளாலே- அணிந்து அங்கு
அனந்தன் அணைக் கிடக்கும் அம்மான் அடியேன்
மனம் தன் அணைக் கிடக்கும், வந்து. 2296

வந்து உதைத்த வெண் திரைகள் செம் பவள வெண் முத்தம்
அந்தி விளக்கும் அணி விளக்காம்-எந்தை
ஒரு அல்லித் தாமரையாள் ஒன்றிய சீர் மார்வன்,
திருவல்லிக்கேணியான், சென்று. 2297

சென்ற நாள், செல்லாத, செங்கண் மால் எங்கள் மால்
என்ற நாள், எந் நாளும் நாள் ஆகும்;- என்றும்
இறவாத எந்தை இணை அடிக்கே ஆளாய்,
மறவாது வாழ்த்துக என் வாய். 2298

வாய் மொழிந்து வாமனனாய் மாவலிபால், மூவடி மண்
நீ அளந்து கொண்ட நெடுமாலே!- தாவிய நின்
எஞ்சா இணை அடிக்கே ஏழ் பிறப்பும் ஆளாகி,
அஞ்சாது இருக்க அருள். 2299

அருளாது ஒழியுமே-ஆல் இலைமேல் அன்று
தெருளாத பிள்ளையாய்ச் சேர்ந்தான்-இருளாத
சிந்தையராய், சேவடிக்கே செம் மலர் தூய், கைதொழுது
முந்தையராய் நிற்பார்க்கு முன்? 2300

முன் உலகம் உண்டு உமிழ்ந்தாய்க்கு, அவ் உலகம் ஈர் அடியால்
பின் அளந்து கோடல் பெரிதொன்றே?- என்னே
திருமாலே! செங்கண் நெடியானே! எங்கள்
பெருமானே நீ இதனைப் பேசு! 2301





*நான்கு வேதங்களால் கூறப்படும் திருமால், திருவேங்கட மலையில் எளிமையுடன் எழுந்தருளினான். நித்திய சூரிகளின் முடிகள் பணியும் அவன் திருவடிகளைத் தொழுதால், நம் நெஞ்சம் அவன் அழகில் ஈடுபடும். அதனால் பெண்களின் தோள்களைத் தழுவும் ஆசை அகன்று, வேத நூல்களில் மனம் செலுத்த எளிதாகி விடும்.* **2295**

*திருப்பாற்கடல் அலைகள் தாழ்ந்து, உயர்ந்து மோத, மாணிக்கங்கள் உள்ள படங்களை உடைய ஆதி சேஷனைப் படுக்கையாகக் கொண்டு திருமால்,கண் வளர்ந்தான். ஆயினும் அதை விட்டு இங்கு வந்து, அடியேன் மனமாகிய படுக்கையில் அவன் பள்ளி கொண்டானே! என்னே என்பேறு!* **2296**

*அழகிய இதழ்களுடைய தாமரையில் வாழும் திருமகள் வந்து பொருந்தும் மார்புடைய எம்பெருமான் என் சுவாமியாய்த் திருவல்லிக்கேணியில் எழுந்தருளி உள்ளான். இங்கு வெண்மையான அலைகள் மோதித் தள்ளிய செம்பவளங்களும் வெண் முத்துக்களும் மாலைக் கால மங்கள விளக்குகளாக ஒளி வீசும்.* **2297**

*'செந்தாமரைக் கண்ணன் நம்மிடம் அன்புடையவன்' என்று கூறப்பெறும் நாள் ஏற்பட்டதால், இறந்தகாலம், எதிர்காலம் ஆகிய எல்லாக் காலங்களும் நல்ல காலம்தான். என் வாய், என்றும் நித்தியமாய் உள்ள எம்பெருமான் திருவடிகளுக்கே ஆட்பட்டு மறவாமல், அவனை வாழ்த்தித் துதிக்க வேண்டும்.* **2298**

*வாமனனாய் மாவலியிடம் வாய் பேசி மூவடி மண் அளந்த திருமாலே! தாவி அளந்த அழகில் குறையாத உன் திருவடி களுக்கே அடியேன் எல்லாப் பிறவிகளிலும் அடிமைப்பட்டு அஞ்சாதிருக்க நீயே அருள வேண்டும்.* **2299**

*அஞ்ஞான இருள் இல்லா மனத்துடன் பகவானின் திருவடிகளில், செவ்விய மலர்களை இட்டுத் தொழுது, முன் நிற்கும் பக்தர்களுக்கு எம்பெருமான் அருள் செய்வான். அன்று அறியாத சிறு குழந்தை போல, ஆலந்தளிரில் கண் வளர்ந்தவன், தானே முன் வந்து அருள் செய்யாமல் போவானோ?* **2300**

*திருமகள் கேள்வனே! முன்பு உலகங்களை உண்டு, உமிழ்ந்த உனக்கு, பின்பு அவற்றை இரண்டு அடிகளால் அளந்து கொள்வது பெரிய காரியமோ? சிவந்த கண்களுடைய நெடியவனே! சுவாமியே! இது பற்றி அடியேன் அறியக் கூற வேண்டும்.* **2301**

பேசுவார் எவ்வளவு பேசுவர், அவ்வளவே
வாச மலர்த் துழாய் மாலையான்,- தேசு உடைய
சக்கரத்தான் சங்கினான் சார்ங்கத்தான் பொங்கு அரவ
வக்கரனைக் கொன்றான் வடிவு. 2302

வடிவு ஆர் முடி கோட்டி வானவர்கள் நாளும்
கடி ஆர் மலர் தூவி, காணும்படியானை,
செம்மையால் உள் உருகி, செவ்வனே, நெஞ்சமே!
மெய்ம்மையே காண விரும்பு. 2303

விரும்பி விண்மண் அளந்த அஞ் சிறைய வண்டு ஆர்
சுரும்பு தொளையில் சென்று ஊத- அரும்பும்
புனந் துழாய் மாலையான் பொன் அம் கழற்கே
மனம் துழாய், மாலாய் வரும். 2304

வருங்கால், இரு நிலனும், மால் விசும்பும் காற்றும்
நெருங்கு தீ, நீர் உருவும் ஆனான் -பொருந்தும்
சுடர் ஆழி ஒன்று உடையான் சூழ் கழலே, நாளும்
தொடர், ஆழி நெஞ்சே! தொழுது. 2305

தொழுதால் பழுது உண்டே? தூ நீர் உலகம்
முழுது உண்டு, மொய் குழலாள் ஆய்ச்சி- விழுது உண்ட
வாயானை, மால் விடை ஏழ் செற்றானை, வானவர்க்கும்
சேயானை, நெஞ்சே! சிறந்து. 2306

சிறந்த என் சிந்தையும், செங்கண் அரவும்
நிறைந்த சீர் நீள் கச்சியுள்ளும்- உறைந்ததுவும்
வேங்கடமும் வெஃகாவும் வேளுக்கைப்பாடியுமே
தாம் கடவார் தண் துழாயார். 2307

ஆரே துயர் உழந்தார், துன்பு உற்றார் ஆண்டையார்
காரே மலிந்த கருங் கடலை- நேரே
கடைந்தானைக் காரணனை, நீர் அணைமேல் பள்ளி
அடைந்தானை, நாளும் அடைந்து? 2308





மணம் மிகுந்த திருத்துழாய் மாலை அணிந்த திருமால், ஒளியுடைய சக்கரத்தையும் சங்கையும் சார்ங்க வில்லையும் ஏந்தியவன். பொங்கி எழுந்து வந்த தந்தவக்ரனைக் கொன்ற எம் பெருமானின் இயல்புகளைப் பேசுகிறவர்கள் அவரவர் அறிந்தபடியே பேசுவர். பெருமைகள் அனைத்தும் பேச முடியாததாகும். 2302

நித்தியசூரிகள் தங்கள் அழகான முடிகளால் வணங்கி, மணமலர்களைத் தூவி விடாமற் கண்டு அனுபவிக்கும் வடிவழகுடையவன் எம்பெருமான். நெஞ்சமே! இப்பெருமானுக்கு அடியவன் நீ என்பதை உணர்ந்து, அவன் காட்டும் வழிநின்று மனம் உருகிப் பயன் கருதாமல் வணங்கி, வழிபடுவதற்கு உள்ளபடியே ஆசைப்படு. 2303

எம்பெருமான் அணிந்துள்ள திருத்துழாய் மாலையின் பூக்கள் புனத்தில் உள்ளன போலவே செவ்வி மாறாதவை. அழகிய சிறகுகளை உடைய பெண் வண்டுகளும் ஆண் வண்டுகளும் நரம்புகளில் படிந்து ஊதவும் மலர்ந்தவை அப்பூக்கள். விண்ணையும் மண்ணையும் விரும்பி அளந்த இப்பெருமானிடம் என் மனம் ஆழ்ந்து மயங்குகிறது. 2304

நெஞ்சமே! பரந்தபூமி, உயர்ந்த வானம், நெருங்கிய தீ, காற்று, நீர் ஆகியவற்றுள் நின்று இயக்கும் சக்கரத்தை ஏந்திய எம்பெருமானின் திருவடிகளையே நீ நாளும் தொழுது பின்பற்றி இரு. 2305

தூநீர்க் கடல் சூழ்ந்த உலகங்களை முற்றிலும் உண்ட திருமால், கண்ணனாக வந்த பொழுது, நெருங்கிய கூந்தலுடைய யசோதையின் வெண்ணெயை உண்டான். ஏழு எருதுகளைக் கொன்றான். பிரமன் முதலிய தேவர்களுக்கும் எட்டாதவன் இவன். நெஞ்சமே! நீ அவனைச் சிறப்பாகத் தொழுதால் குறை உண்டோ? இல்லையே! 2306

சிறந்த என் நெஞ்சம், சிவந்த கண்களுடைய ஆதிசேஷன், நிறைந்த செல்வம் உள்ள காஞ்சிபுரம், திருவேங்கடம், திருவெஃகா, திருவேளுக்கை ஆகிய இடங்களில் திருத்துழாய் மாலை அணிந்த திருமால் பிரியாமல் என்றும் எழுந்தருளி உள்ளான். 2307

பாற்கடலில் ஆதிசேஷன் மேல் பள்ளி கொண்ட உலக காரணனான திருமால், மேகங்கள் நிறைந்த கடலைத் தானே முன் நின்று கடைந்தான். இப்பெருமானுக்கு ஆட்பட்டவர். ஒரு நாளாவது துன்பமடைவரா? துன்பமடைந்தார் எங்காவது உண்டா? 2308

அடைந்தது அரவு அணைமேல்; ஐவர்க்கு ஆய்அன்று
மிடைந்தது பாரத வெம் போர்;- உடைந்ததுவும்
ஆய்ச்சிபால் மத்துக்கே - அம்மனே! வாள் எயிற்றுப்
பேய்ச்சி பால் உண்ட பிரான். 2309

பேய்ச்சி பால் உண்ட பெருமானைப் பேர்ந்து எடுத்து,
ஆய்ச்சி முலைகொடுத்தாள், அஞ்சாதே - வாய்த்த
இருள் ஆர் திருமேனி இன் பவளச் செவ்வாய்த்
தெருளா மொழியானைச் சேர்ந்து. 2310

சேர்ந்த திருமால் -கடல் குடந்தை வேங்கடம்,
நேர்ந்த என் சிந்தை நிறை விசும்பு- வாய்ந்த
மறை, பாடகம் அனந்தன் வண் துழாய்க் கண்ணி
இறைபாடி ஆய இவை. 2311

இவை அவன் கோயில் -இரணியனது ஆகம்
அவை செய்து அரி உருவம் ஆனான்,- செவி தெரியா
நாகத்தான், நால் வேதத்து உள்ளான், நறவு ஏற்றான்
பாகத்தான், பாற்கடல் உளான். 2312

பாற்கடலும், வேங்கடமும், பாம்பும், பனி விசும்பும்
நூல் கடலும் நுண் நூல தாமரைமேல் பாற்பட்டு
இருந்தார் மனமும் இடமாகக் கொண்டான்
குருந்து ஒசித்த கோபாலகன். 2313

பாலகனாய் ஆல் இலைமேல், பைய உலகு எல்லாம்
மேல் ஒருநாள் உண்டவனே! மெய்ம்மையே:- மாலவனே!
மந்தரத்தால் மா நீர்க் கடல் கடைந்து வான் அமுதம்
அந்தரத்தார்க்கு ஈந்தாய், நீ அன்று. 2314

அன்று இவ் உலகம் அளந்த அசைவேகொல்?
நின்று இருந்து வேளுக்கை நீள் நகர்வாய்- அன்று
கிடந்தானைக் கேடு இல் சீரானை முன் கஞ்சைக்
கடந்தானை, நெஞ்சமே காண். 2315





*வாள் போன்ற பற்களை உடைய பூதனைப் பேயின் பாலைப் பருகி அவளைக் கொன்ற கண்ணன் பள்ளி கொண்டது ஆதிசேடன் மேலே ஆகும். பண்டு, பஞ்ச பாண்டவர்க்காக நடத்தியதோ பாரதப் போர் ஆகும். ஆனால் அவன் அஞ்சி நடுங்கியதோ இடைச்சியான யசோதையின் மத்துக்கே அன்றோ! என்ன ஆச்சரியம் இது!* 2309

*பவள உதடுகளும் இருண்ட திருமேனியும் உடைய குழந்தை கண்ணன்,மழலை பேசியபடி, பூதனைப் பேயின் முலைப் பாலை அஞ்சாமல் பருகினான். அந்த நஞ்சுக்கு மருந்து கொடுப்பது போலப் பூதனை முடிவைக் கண்டும் அஞ்சாத ஆய்ச்சி யசோதை அவனை வாரி எடுத்துப் பால் ஊட்டினாளே! அவள் அன்புதான் என்னே!* 2310

*திருப்பாற்கடல், திருக்குடந்தை, திருவேங்கடம் நேர்பட்ட என் மனம், நிறைந்த பரமபதம் அவன் பெருமை பேசும் வேதம், திருப்பாடகம், ஆதிசேஷன் ஆகிய இவையே திருத் துழாய் மாலை அணிந்த திருமால் எழுந்தருளிய தலை நகரங்கள் ஆகும்.* 2311

*இரணியன் மார்பைப் பிளக்கவே எம்பெருமான் நரசிம்மம் ஆனான். கண்ணையே செவியாக உடைய ஆதிசேஷன் மீது பள்ளி கொண்டவன் நான்கு வேதப் பொருள் ஆவான். தேன் போன்ற கங்கையைத் தாங்கிய சிவனைப் பாகத்தில் கொண்டான். திருப்பாற்கடலில் பள்ளி கொண்ட அவன் கோவில்களே கீழ்ப்பாசுரத்தில் கூறப்பட்டவை.* 2312

*குருந்த மரத்தை முறித்தவனும், பசுக்களைக் காத்தவனும் ஆன கண்ணபிரானின் இருப்பிடங்கள் திருப்பாற்கடலும் திருவேங்கடமும் ஆகும். பனிக் குளிர்ச்சி உள்ள பரமபதமும் பரந்த சாத்திரங்களும் அவன் இருப்பிடங்களே. நூல்களிற் கூறப்பட்டபடி இதய கமலத்தில் யோக நிலை ஊன்றியவர் நெஞ்சங்களிலும் அவன் உள்ளான்.* 2313

*முன்னொரு காலத்தில் சிறு குழந்தையாய் உலகங்களைப் பையவே உண்டு ஆலந்தளிரில் கிடந்தவனே! திருமாலே! இப்படி அமுது செய்தது உண்மையே அன்றோ! இத்தகைய நீ, அன்று மந்தர மலையைக் கொண்டு கடல் கடைந்து, உயர்ந்த அமுதைத் தேவர்களுக்கு அளித்தாயே! கேட்டார்க்குக் கேட்பதை இப்படியா தருவாய்!* 2314

*முன்பு நின்று கொண்டே உலகங்களை அளந்த தளர்ச்சி காரணமாக எம்பெருமான் திருவேளுக்கையில் வீற்றிருந்து திருவெஃகா என்னும் பெரிய திருப்பதியில் பள்ளி கொண்டானோ? நெஞ்சமே! குறைவற்ற குணங்களுடைய பெருமானைக் காண ஆசை கொள்வாய். கம்சனை அழித்தவனைத் தியானம் செய்.* 2315

காண், காண் என விரும்பும் கண்கள் கதிர் இலகு
பூண் தார் அகலத்தான் பொன் மேனி;-பாண்கண்
தொழில் பாடி வண்டு அறையும் தொங்கலான், செம் பொன்
கழல் பாடி யாம் தொழுதும், கை. 2316

கைய கனல் ஆழி, கார்க் கடல் வாய் வெண் சங்கம்,
வெய்ய கதை சார்ங்கம் வெம் சுடர் வாள் -செய்ய
படை; பரவை பாழி -பனி நீர் உலகம்
அடி அளந்த மாயன் அவற்கு. 2317

அவற்கு அடிமைப் பட்டேன்; அகத்தான், புறத்தான்
உவர்க்கும் கருங் கடல் நீர் உள்ளான்,- துவர்க்கும்
பவள வாய்ப் பூமகளும், பல் மணிப் பூண்ஆரம்
திகழும் திருமார்பன் தான். . 2318

தானே தனக்கு உவமன் - தன் உருவே எவ் உருவும்;
தானே தவ உருவும் தாரகையும் ;- தானே
எரி சுடரும் மால் வரையும் எண் திசையும் அண்டத்து
இரு சுடரும் ஆய இறை. 2319

இறை ஆய், நிலன் ஆகி எண் திசையும் தான்ஆய்,
மறை ஆய், மறைப் பொருள் ஆய் வான் ஆய்- பிறை வாய்ந்த
வெள்ளத்து அருவி விளங்கு ஒலி நீர் வேங்கடத்தான்
உள்ளத்தின் உள்ளே உளன். 2320

உளன் கண்டாய், நல் நெஞ்சே! உத்தமன்; என்றும்
உளன் கண்டாய்; உள்ளுவார் உள்ளத்து- உளன் கண்டாய்
விண் ஒடுங்கக் கோடு உயரும் வீங்கு அருவி வேங்கடத்தான்
மண் ஒடுங்கத் தான் அளந்த மண். 2321

மன்னு மணி முடி நீண்டு, அண்டம் போய், எண் திசையும்
துன்னு பொழில் அனைத்தும் சூழ் கழலே,- மின்னை
உடையாகக் கொண்டு அன்று உலகு அளந்தான் குன்றம்
குடையாக ஆ காத்த கோ. 2322





ஒளி விடும் அணிகலன்களையும் மாலையையும் மார்பில் உடைய எம்பெருமானின் பொன்மேனியைக் காண, என் கண்கள் ஆசைப்படுகின்றன. வண்டுகள் பாடும், மாலை அணிந்த பெருமானின் திருவிளையாடல்களைப் பண்ணில் அமைத்துப் பாடி, அவன் சிவந்த திருவடிகளை நாம் கைகளால் தொட்டு வணங்குவோம். 2316

மாயம் செய்ய வல்ல திருமால் தன் திருவடிகளால் குளிர்ச்சி யான கடல் சூழ்ந்த உலகை அளந்தான். இப்பெருமான் கையில் உள்ள நெருப்புக் கக்கும் சக்கரம், கடலில் தோன்றிய வெண் சங்கு, வெம்மை யான கதை, சார்ங்கவில், ஒளிவிடும் நாந்தக வாள் ஆகியவை, அவன் திவ்விய ஆயுதங்கள் ஆகும். கடலே அவன் படுக்கை ஆகும். 2317

பவள வாயுடைய திருமகளையும், மணிகள் அழுத்திய பல்லாபரணங்களுடன் மாலையையும், மார்பிலே உடைய திருமால் உப்பு நீர்க் கடலின் மீது பள்ளி கொண்டான். இப்படிப் பட்ட எம்பிரானுக்கு நான் அடிமைப் பட்டேன். அவன் என் அகத்துள்ளும் வெளியிலும் வாசியறக் கலந்துள்ளான். 2318

எல்லாப் பொருள்களும் திருமாலுக்கு உடம்பாவன. தவத்தால் புண்ணிய உடல் பெற்ற பிரமன் முதலியோரும் விண்மீன்களும் அவன் வடிவங்களே ஆகும். சுடும் தீயும், பெரிய மலைகளும், எட்டுத் திசைகளும், அண்டத்தில் காணப்படும் சந்திரனும் சூரியனும், தன் பகுதியான உடம்பாகப் பெற்ற பகவான தனக்குத் தானே ஒப்பானவன். 2319

எல்லோர்க்கும் மேலான இறைவன் திருமால், பூமிக்குள் அதன் உயிராய் நிலவி எட்டுத் திசைகளிலும் பரந்துள்ளான். வேதமாய், வேதப்பொருளாய், பரமபத நாதனாய்,உள்ள அப் பிரான், திருவேங்கடத்தில் எழுந்தருளினான். இங்குள்ள அருவிகள் சந்திர மண்டலத்திலிருந்து கிளம்புவதாய் ஒலியுடன் விழும். இவனே என் நெஞ்சில் உள்ளான். 2320

எம்பெருமான் உள்ளான் என்று இசைந்த மனமே! நெஞ்சால் நினைப்பவருடன் எம்பெருமான் என்றும் கூடி வாழ்கிறான். விண்ணெல்லாம் ஒடுங்கும்படி சிகரங்கள் உயர்ந்த இம் மலையில் அருவிகள் கொட்டும். பூமிப் பரப்பைத் தன் திருவடியால் அளந்த அரசனான பகவான், நம்மை நம்மிடமே காட்டிக் கொடுத்து நாம் அழியாமல் காக்கிறான். அதனால் என்றும் அவன் உள்ளான் என்பதைக் காண். 2321

மலையைக் குடையாய்க் கொண்டு பசுக்களைக் காத்தவன் முன் பொருகால் உலகங்களை அளந்தான். அப்பொழுது அவன் மணிமுடி வளர்ந்து அண்டபித்தியை எட்டி, எண் திசைகளிலும் வியாபித்து உலகனைத்தையும் திருவடிகள் அடக்கின. மின்னல் அவன் பீதாம்பரம் ஆயிற்று. திரிவிக்கிரமனாய் மூவுலகையும் தன் உடம்பில் மறைத்தவன் கண்ணன் ஆனபொழுது, ஒரு மலையாலே தன் உடம்பை மறைத்துக் கொண்டான். 2322

கோவலனாய் ஆ நிரைகள் மேய்த்து, குழல் ஊதி
மா வலனாய்க் கீண்ட மணி வண்ணன்- மேவி,
அரி உருவம் ஆகி, இரணியனது ஆகம்
தெரி - உகிரால் கீண்டான் சினம். 2323

சின மா மத களிற்றின திண் மருப்பைச் சாய்த்து,
புனம் மேய பூமி அதனை-தனமாகப்
பேர் அகலத்துள் ஒடுக்கும் பேர் ஆர மார்வனார்
ஓர் அகலத்து உள்ளது உலகு. 2324

உலகமும், ஊழியும் ஆழியும் ஒண் கேழ்
அலர் கதிரும், செந்தீயும் ஆவான் - பல கதிர்கள்
பாரித்த பைம் பொன் முடியான் அடி இணைக்கே
பூரித்து, என் நெஞ்சே! புரி. 2325

புரிந்து மத வேழம் மாப் பிடியோடு, ஊடி
திரிந்து, சினத்தால் பொருது,-விரிந்த சீர்
வெண்கோட்டு முத்து உதிர்க்கும் வேங்கடமே மேல் ஒரு நாள்,
மண் கோட்டுக் கொண்டான் மலை. 2326

மலை முகடு மேல் வைத்து வாசுகியைச் சுற்றி
தலை முகடு தான் ஒரு கை பற்றி- அலை முகட்டு
அண்டம் போய் நீர் தெறிப்ப, அன்று கடல் கடைந்தான்
பிண்டமாய் நின்ற பிரான். 2327

நின்ற பெருமானே, நீர் ஏற்று உலகு எல்லாம்
சென்ற பெருமானே! செங்கண்ணா!-அன்று
துரக வாய் கீண்ட துழாய் முடியாய்! நங்கள்
நரக வாய் கீண்டாயும் நீ. 2328

நீ அன்றே - நீர் ஏற்று உலகம் அடி அளந்தாய்?
நீ அன்றே - நின்று நிரை மேய்த்தாய் ?- நீ அன்றே
மா வாய் உரம் பிளந்து மா மருதின் ஊடு போய்,
தேவாசுரம் பொருதாய், செற்று ? 2329





இடையனாய்ப் பிறந்து பசுக்களை மேய்த்துப் புல்லாங்குழல் ஊதிய கண்ணன் குதிரை வடிவில் வந்த கேசியின் வாயைக் கிழித்துக் கொன்றான். நெஞ்சமே! நீலமணி நிறத் திருமாலே, நரசிம்ம வடிவம் கொண்டு இரணியன் உடலை நகங்களால் சீற்ற முடன் கிழித்தான் என்பதைத் தெரிந்து கொள். அடியவனைக் காக்க அவன் சீறிய சினம் இது! 2323

கோபம் கொண்ட குவலயாபீட மதயானையின் கொம்பை ஒடித்தவனும், விளை நிலங்கள் உள்ள பூமியை வயிற்றில் வைத்துக் காத்தவனும் பெரிய மாலைகள் அணிந்த மார்புடையவனும் ஆன எம்பெருமானின் சங்கல்ப வடிவ ஞானத்தால் உலகம் நிலை பெறுகிறது. பூமியை வயிற்றில் வைத்த பூரிப்பே, மார்பு மாலை போல் விளங்கிற்று. 2324

என்நெஞ்சே! கதிர்கள் புறப்படும் பொன்முடி உடைய திருமால் எல்லாவற்றையும் தன் உள்ளே அடக்கியவன். உலகங்கள், பிரளய காலம், கடல்கள், கதிர்களுடைய சந்திரன், சூரியன்,செந்தீ ஆகிய யாவற்றிலும் நிறைந்து அவற்றை நியமிக்கிறான். இப்பெருமானின் திருவடிகளை அடைய, நீ முற்றிலும் ஆசை கொள்வாய். 2325

வராக வடிவமாய்ப் பூமியைக் கொம்பில் எடுத்த திருமால் எழுந்தருளிய மலை திருவேங்கடம் ஆகும். இங்கு மதம் கொண்ட ஆண் யானை, தன் பெண் யானையுடன் கலந்து ஊடியபின் அதைப் பிரிந்த சினத்தால் மணிப் பாறைகளில் மோதும். அவ்வாறு மோதும் பொழுது வீரமுடைய அந்த யானைக் கொம்புகளிலிருந்து முத்துகள் உதிரும். 2326

உலகின் கருவிப் பொருள் காரணமாக நின்ற எம்பெருமான், அன்று சிகரம் உடைய மந்தரமலையை ஆமையான தன் முதுகில் வைத்து, வாசுகியைச் சுற்றி, அதன் தலையைப் பற்றியவாறு, அலைத் திவலைகள் அண்ட முகட்டில் தெறிக்கும்படி, கடல் கடைந்தான். 2327

மாவலியிடம் தானம் பெற நீர் ஏற்று நின்ற பிரானே! உலகங்களை அளந்த பெருமானே! செந்தாமரைக் கண்ணா! முன்பு குதிரையாக வந்த கேசியின் வாயைக் கிழித்தாய். திருத்துழாய் சூடிய முடி உடையவனே! எங்களின் நரக வாயை அழித்தவனும் நீயே அன்றோ! 2328

மாவலியிடம் தான நீர் பெற்று உலகங்களைத் திருவடியால் அளந்தவன் நீ அன்றோ? பசுக் கூட்டங்களை மேய்த்தவனும் நீ அன்றோ? குதிரை வடிவில் வந்த கேசியின் வாயைப் பிளந்தவனே! மருத மரங்களிடை தவழ்ந்து அவற்றை முறித்தவனே! தேவாசுரப் போரிலே அசுரர்களை அழியச் செய்து போரிட்டவனும் நீயே அன்றோ! 2329

செற்றதுவும் சேரா இரணியனை; சென்று ஏற்றுப்
பெற்றதுவும் மா நிலம்; பின்னைக்கு ஆய்,- முற்றல்
முரி ஏற்றின் முன் நின்று மொய்ம்பு ஒழித்தாய்! மூரிச்
சுரி ஏறு சங்கினாய்! சூழ்ந்து. 2330

சூழ்ந்த துழாய் அலங்கல் சோதி மணி முடி மால்
தாழ்ந்த அருவித் தட வரைவாய்- ஆழ்ந்த
மணி நீர்ச் சுனை வளர்ந்த மா முதலை கொன்றான்
அணி நீல வண்ணத்தவன். 2331

அவனே அரு வரையால் ஆ நிரைகள் காத்தான்;
அவனே அணி மருதம் சாய்த்தான்- அவனே
கலங்காப் பெரு நகரம் காட்டுவான் கண்டீர்
இலங்காபுரம் எரித்தான், எய்து. 2332

எய்தான் மராமரம் ஏழும் இராமனாய்;
எய்தான் அம் மான் மறியை ஏந்திழைக்கு ஆய்;- எய்ததுவும்
தென் இலங்கைக் கோன் வீழ;சென்று குறள் உரு ஆய்
முன் நிலம் கைக்கொண்டான், முயன்று. 2333

முயன்று தொழு நெஞ்சே! மூரி நீர் வேலை
இயன்ற மரத்து ஆல் இலையின் மேலால்- பயின்று அங்கு ஓர்
மண் நலம் கொள் வெள்ளத்து மாயக் குழவியாய்,
தண் அலங்கல் மாலையான் தாள். 2334

தாளால் சகடம் உதைத்துப் பகடு உந்தி,
கீளா மருது இடை போய், கேழல் ஆய்- மீளாது
மண் அகலம் கீண்டு அங்கு ஓர் மாது உகந்த மார்வற்குப்
பெண் அகலம் காதல் பெரிது. 2335

பெரிய வரை மார்பில் பேர் ஆரம் பூண்டு
கரிய முகிலிடை மின் போல, -தெரியுங்கால்,
பாண் ஒடுங்க வண்டு அறையும் பங்கயமே மற்று அவன் தன்
நீள் நெடுங் கண் காட்டும் நிறம். 2336





*நப்பின்னையைப் பெற, வலிமையுடன் ஓடிய எருதுகளின் முன் நின்று, கொல்லும் வகை தெரிந்து அவற்றின் வலிமையை ஒழித்தவனே! சுழியுடன் கூடிய பெரிய சங்கைக் கையில் ஏந்தியவனே! உன்னை எதிர்த்த இரணியனுடன் போரிட்டு வதைத்தவன் நீ அன்றோ! மாவலியிடம் நிலம் யாசித்துப் பெற்றதும் நீ அன்றோ!* **2330**

*திருத்துழாய் மாலை சூடிய மணிமுடி உடைய நீலநிறத் திருமால், அருவி விழும் பெரிய மலையின் நடுவில் ஆழ்ந்த நீர்ப் பொய்கையில் பயமின்றி வளர்ந்த பெரிய முதலையை வதைத்தான். அடியவன் கஜேந்திரனை இவ்வாறு காத்தான்.* **2331**

*அசைக்க முடியாத மலையால் பசுக்களைக் காத்தவன் அவனே கண்டீர். சேர்ந்திருந்த இரட்டை மருதமரங்களை முறித்தவனும் அப்பெருமானே! இலங்கை நகர் மீது அம்பெய்து தீக்கு இரை யாக்கியவனும் அவனே. கலக்கமில்லாத பரமபதத்தை நமக்குக் காட்டித் தருபவனும் இந்த எம்பெருமானே! கண்டீர்* **2332**

*இராமபிரான் ஏழு மராமரங்களையும் எய்தான். சீதைக்காக மாரீசமாயமான் மீது அம்பெய்தான். தென் இலங்கை இராவணன் அழியும்படியாய் அம்பு செலுத்தினான். முன்னொரு கால் வாமனனாய்,மாவலியிடம் சென்று பூமியைக் கைப்பற்றினான்.* **2333**

*எம்பெருமான் பிரளய வெள்ளத்தில் அலைகடலில் ஆலந்தளிர் மீது, ஒரு மாயக் குழந்தையாய், பூமியை அடக்கிய படி, நெடுங்காலம் பள்ளி கொண்டு காப்பாற்றினான். குளிர்ந்த மாலை அணிந்த இத் திருமாலின் திருவடிகளை நெஞ்சமே! நீ முயற்சி கொண்டு வணங்கு.* **2334**

*கண்ணன், சகடாசுரனைத் தன் காலால் உதைத்து, குவலயாபீட யானையை உந்தித் தள்ளி, பிளவில்லா மருத மரங்கள் நடுவே தவழ்ந்தான். இத் திருமாலே வராக வடிவம் எடுத்து அகன்ற பூமியை எடுத்துக் காத்தான். ஒப்பற்ற திருமகள் தங்கும் மார்புடைய பெருமானுக்குப் பூமிதேவியின் திருமேனியிலும் ஆசை கரை புரண்டது போலும்!* **2335**

*எம்பெருமான் தன் மலைபோன்ற மார்பில் ஆரம் அணிந்து திரிந்தால், கார் மேகத்திலே மின்னல் பளிச்சிட்டது போல இருக்கும். அன்றியும் அவன் கண்களின் நிறம், எந்த இசையையும் வெல்லும் இனிய ரீங்காரம் செய்யும் வண்டுகள் அமருகின்ற தாமரைப் பூவையே ஒத்திருக்கும்.* **2336**

நிறம் வெளிது, செய்து, பசிது, கரிது என்று
இறை உருவம் யாம் அறியோம், எண்ணில்;- நிறைவு உடைய
நா மங்கை தானும் நலம் புகழ வல்லளே
பூ மங்கை கேள்வன் பொலிவு. 2337

பொலிந்து இருண்ட கார் வானில் மின்னேபோல் தோன்றி
மலிந்து திரு இருந்த மார்வன்-பொலிந்த
கருடன்மேல் கொண்ட கரியான் கழலே
தெருள் - தன்மேல் கண்டாய் தெளி. 2338

தெளிந்த சிலாதலத்தின்மேல் இருந்த மந்தி
அளிந்த கடுவனையே நோக்கி- விளங்கிய
வெண் மதியம் தா என்னும் வேங்கடமே மேல் ஒரு நாள்
மண் மதியில் கொண்டு உகந்தான் வாழ்வு. 2339

வாழும் வகை அறிந்தேன் - மை போல் நெடு வரைவாய்த்
தாழும் அருவி போல் தார் கிடப்ப, -சூழும்
திரு மா மணி வண்ணன், செங்கண் மால், எங்கள்
பெருமான் அடி சேரப்பெற்று. 2340

பெற்றம், பிணை மருதம், பேய் முலை மாச் சகடம்
முற்றக் காத்து ஊடு போய், உண்டு உதைத்து- கற்றுக்
குணிலை விளங் கனிக்குக் கொண்டு எறிந்தான்; வெற்றிப்
பணிலம் வாய் வைத்து உகந்தான் பண்டு. 2341

பண்டு எல்லாம் வேங்கடம் பாற்கடல் வைகுந்தம்
கொண்டு அங்கு உறைவார்க்குக் கோயில் போல் - வண்டு
வளம் கிளரும் நீள் சோலை வண் பூங் கடிகை
இளங் குமரன் தன் விண்ணகர். 2342

விண்ணகரம் வெஃகா விரி திரை நீர் வேங்கடம்
மண் நகரம் மா மாட வேளுக்கை- மண்ணகத்த
தென் குடந்தை தேன் ஆர் திருவரங்கம் தென்கோட்டி
தன் குடங்கை நீர் ஏற்றான் தாழ்வு. 2343





இறைவன் திருமாலின் நிறம் வெண்மையா, சிவப்பா, பச்சையா, கறுப்பா என்று நாம் அறியோம். ஞானத்தில் நிறைந்த கலைமகளும் திருமகள் கேள்வனின் நிறைவை நன்கு புகழ வல்லவள் அல்லள். 2337

இருண்ட கார் காலமேகத்தின் நடுவே விளங்கும் மின்னல் போலத் திருமாலின் மார்பில் திருமகள் பெருமையுடன் வாழ்கிறாள். நெஞ்சமே! கருடன் மேல் அமரும் கரிய திருமாலின் திருவடிகளே ஞானத்துக்கு மேம்பட்ட பக்திக்கு உகந்தது எனத் தெரிந்து கொள். 2338

முன்னொரு கால், மாவலியிடம் தன் அறிவுக் கூர்மையால் மண்ணைப் பெற்ற எம்பெருமான், உகந்து வாழும் இடம் திருவேங்கட மலை ஆகும். இங்கு பனிப் பாறையில் அமர்ந்த பெண் குரங்கு தன் கணவனான கடுவன் குரங்கை நோக்கி வெண்மையான சந்திரனைப் பிடித்துக் கொடு என்று கேட்கும். 2339

எம்பெருமான் திருத்தோள்களில் சாத்தின மாலை, மை போன்று இருண்ட மலையில் இரு பக்கமும் தாழ்ந்து விழும் அருவி போல உள்ளது. இவ்வழகில் ஈடுபட்ட திருமகள் கண நேரமும் விட்டுப் பிரியாமல் அவன் மார்பில் உள்ளாள். நீலமணி நிறமும் சிவந்த திருக்கண்களும் உடைய எம்பெருமான் திருவடிகளைச் சேரப்பெற்றதால் அடியேன் வாழும் வகை தெரிந்தேன். 2340

கண்ணன் பசுக்கள் எல்லாவற்றையும் காத்தான். பிணைந்த மருதமரங்களின் நடுவே போனான்; பூதனைப் பேயின் முலை சுவைத்தான். பெரிய சகடத்தை உதைத்தான். கன்றாகிய தடியால் விளாம்பழம் மீது எறிந்தான். முன்னொரு காலத்தில் வெற்றியே இயல்பாக உடைய சங்கைப் போர்க் களத்தே வாய் வைத்து ஊதினான். 2341

பரமபதத்தை இருப்பிடமாகக் கொண்ட எம்பெருமானுக்குத் திருப்பாற்கடல், திருவேங்கடம், வண்டுகள் மிகுந்த சோலைகள் உள்ள திருக்கடிகை, தன் இளமைக்குச் சேர்ந்த தகுதியான திருவிண்ணகர் ஆகிய திருப்பதிகள் கோயில்களாக இருந்தன. இப்பொழுதோ, என் நெஞ்சமே அவனுக்குக் கோயில் ஆயிற்று. 2342

மாவலியிடம் தன் உள்ளங்கையில் நீர் ஏற்ற திருமால் தன் நீர்மைக் குணத்தால் எழுந்தருளிய திருப்பதிகள், திருவிண்ணகரம், திருவெஃகா, நீர் வளமுள்ள திருவேங்கடம், மாடங்கள் உள்ள திருவேளுக்கை, பூமியின் நடுநாயகமான திருக்குடந்தை, தேன் துளிர்க்கும் சோலைகள் உள்ள திருவரங்கம், தெற்கே உள்ள திருக்கோட்டியூர் ஆகும். 2343

தாழ் சடையும் நீள் முடியும் ஒண்மழுவும் சக்கரமும்,
சூழ் அரவும் பொன் நாணும் தோன்றுமால் - சூழும்
திரண்டு அருவி பாயும் திருமலைமேல் எந்தைக்கு
இரண்டு உருவும் ஒன்றாய் இசைந்து! 2344

இசைந்த அரவமும் வெற்பும் கடலும்
பசைந்து அங்கு அமுது படுப்ப,-அசைந்து
கடைந்த வருத்தமோ- கச்சி வெஃகாவில்
கிடந்து இருந்து நின்றதுவும், அங்கு? 2345

அங்கற்கு இடர் இன்றி அந்திப் பொழுதத்து
மங்க இரணியனது ஆகத்தை- பொங்கி,
அரி உருவமாய்ப் பிளந்த அம்மான் அவனே
கரி உருவம் கொம்பு ஒசித்தான் - காய்ந்து 2346

காய்ந்து, இருளை மாற்றி கதிர் இலகு மா மணிகள்
ஏய்ந்த பணக் கதிர்மேல் வெவ்வுயிர்ப்ப,- வாய்ந்த
மது கைடவரும் வயிறு உருகி மாண்டார்
அது கேடு அவர்க்கு இறுதி ஆங்கு. 2347

ஆங்கு மலரும், குவியுமால் - உந்திவாய்
ஓங்கு கமலத்தின் ஒண் போது - ஆம் கைத்
திகிரி சுடர் என்றும், வெண் சங்கம் வானில்
பகரு மதி என்றும் பார்த்து! 2348

பார்த்த கடுவன் சுனை நீர் நிழல் கண்டு
பேர்த்து ஓர் கடுவன் எனப் பேர்ந்து- கார்த்த
களங் கனிக்குக் கை நீட்டும் வேங்கடமே மேல் நாள்
விளங் கனிக்குக் கன்று எறிந்தான் வெற்பு. 2349

வெற்பு என்று வேங்கடம் பாடும்; வியன் துழாய்க்
கற்புஎன்று சூடும் கருங் குழல்மேல்;- மல் பொன்ற
நீண்ட தோள் மால் கிடந்த நீள் கடல் நீர் ஆடுவான்
பூண்ட நாள் எல்லாம் புகும். 2350





ஒரு புறம் தாழ்ந்த சடை; மறுபுறம் நீண்ட திருமுடி. ஒரு பக்கம் அழகிய மழு; மறுபக்கம் சக்கரப்படை. சுற்றிய நாகம் ஒரு புறம்; பொன் அரைநாண் மறுபுறம்; இவ்வாறு சேராச் சேர்த்தியாக சங்கர நாராயண வடிவில் நாற்புறமும் அருவி விழும் திருவேங்கடத்தில் ஒரே வடிவமாய் பொருந்தி விளங்குவது என்ன ஆச்சரியம்! தனக்கே உரிய உருவில், தன்னைப் பெறத் தவம் செய்பவன் உருவம் சேர்ந்ததே! 2344

எம்பெருமானே! வாசுகியைக் கயிறாக, மந்தரமலையை மத்தாகக் கடலையே தாழியாகக் கொண்டு, அமுதம் எடுக்க நீ கடைந்த வருத்தத்தாலோ காஞ்சியில் திருவெஃகாவில் பள்ளி கொண்டாய்? திருப்பாடகத்தில் வீற்றிருந்தாய்? திருவூரகத்தில் நின்று கொண்டிருக்கிறாய்? 2345

திருமால் மாலை நேரத்தில் நரசிம்ம வடிவம் கொண்டு, பிள்ளையான பிரகலாதன் துன்பம் தீர்ப்பதற்காக, இரணியனின் மார்பைப் பிளந்து கொன்றான். அவனே கறுத்த குவலயாபீட யானையின் கொம்புகளைச் சீற்றத்துடன் ஒடித்தான். 2346

சீறி இருளைப் போக்கும் ஒளியுடைய, மணிகள் பொருந்திய படம் பெற்ற ஆதிசேஷன் மீது பள்ளி கொண்டவனை மதுகைடபர்கள் நெருங்கியதும் எம்பெருமான் பெரு மூச்சு விட்டான். அவர்கள் உடனேயே அங்கு குடல் அழுகி இறந்தனர். அவர்களுக்குக் கேடும் முடிவும் இவ்வாறு ஏற்பட்டது. 2347

திருமாலின் திருநாபியில் ஓங்கி வளர்ந்த தாமரைப் பூ, அவன் வலக் கரத்தில் உள்ள சக்கரத்தைச் சூரியன் என்றும், இடக் கரத்தில் உள்ள வெண்மையான சங்கைச் சந்திரன் என்றும் எண்ணி ஒரே நேரத்தில் மலர்ந்து மூடும். 2348

முன்பு விளாம்பழங்களை உதிர்க்கக் கன்றையே தடியாக வீசிய பெருமான் திருவேங்கட மலையில் எழுந்தருளி உள்ளான். இங்குள்ள சுனை நீரில் உற்றுப் பார்த்த ஆண் குரங்கு தன் நிழலையே வேறொரு குரங்காக எண்ணிப் பயந்து நீங்கி, வேறிடம் சென்று கரிய களாப் பழத்தைப் பறிக்கக் கைகளை நீட்டும். 2349

(தலைவியின் தன்மையைத் தாயார் பேசுவதாக உள்ளது இப்பாசுரம்) என் மகள் திருவேங்கட மலையைப் பற்றிப் பாடுகிறாள். கற்புக்குத் தக்கது என்று அகன்ற திருத்துழாயைத் தன் கருங்கூந்தலில் சூடுகிறாள். மல்லர்களை அழித்த தோள்களை உடைய திருமால் பள்ளி கொண்ட பாற்கடலிலே நீராட, ஒவ்வொரு விடியற் காலையிலும் புறப்படுகிறாள். 2350

புகு மதத்தால் வாய் பூசி, கீழ் தாழ்ந்து, அருவி
உகு மதத்தால் கால் கழுவி, கையால்- மிகு மதத் தேன்
விண்ட மலர் கொண்டு, விறல் வேங்கடவனையே
கண்டு வணங்கும் களிறு. 2351

களிறு முகில் குத்த, கை எடுத்து ஓடி,
ஒளிறு மருப்ப ஒசி கை யாளி- பிளிறி
விழ, கொன்று நின்று அதிரும் வேங்கடமே மேல் நாள்
குழக் கன்று கொண்டு எறிந்தான் குன்று. 2352

குன்று ஒன்றின் ஆய குற மகளிர் கோல் வளைக் கை
சென்று விளையாடும் தீம் கழை போய், -வென்று
விளங்கு மதி கோள் விடுக்கும் வேங்கடமே மேலை
இளங் குமரர் கோமான் இடம். 2353

இடம் வலம் ஏழ் பூண்ட இரவித் தேர் ஓட்டி
வட முக வேங்கடத்து மன்னும்- குடம் நயந்த
கூத்தனாய் நின்றான் குரை கழலே கூறுவதே
நாத்தன்னால் உள்ள நலம். 2354

நலமே வலிதுகொல் - நஞ்சு ஊட்டு வன் பேய்
நிலமே புரண்டு போய் வீழ- சலமே தான்
வெம் கொங்கை உண்டானை, மீட்டு ஆய்ச்சி ஊட்டுவான்,
தன் கொங்கை வாய் வைத்தாள்,சார்ந்து? 2355

சார்ந்து, அகடு தேய்ப்பத் தடாவிய கோட்டு உச்சிவாய்,
ஊர்ந்து இயங்கும் வெண் மதியின் ஒண் முயலைச்- சேர்ந்து
சின வேங்கை பார்க்கும் திருமலையே ஆயன்
புன வேங்கை நாறும் பொருப்பு. 2356

பொருப்பிடையே நின்றும், புனல் குளித்தும் ஐந்து
நெருப்பிடையே நிற்கவும் நீர் வேண்டா;- விருப்பு உடைய
வெஃகாவே சேர்ந்தானை மெய்ம் மலர் தூய்க் கைதொழுதால்
அஃகாவே தீவினைகள் ஆய்ந்து. 2357





*திருவேங்கடத்திலுள்ள யானை,மத நீராலே வாயைக் கழுவிக் கொண்டு, அருவி போல் விழும் அந்தநீராலே கால்களைக் கழுவியவாறு, துதிக்கையாலே தேன் துளிர்க்கும் மலர்ந்த பூ இட்டு மிடுக்கை உடைய திருவேங்கடவனை வழிபட்டு வணங்கும்.* 2351

*மேல் நாளில் இளங்கன்றைத் தடியாக விளாங்கனி மீது எறிந்த பெருமானின் திருவேங்கட மலையில், யானை தன் துதிக்கையால் மேகங்களைக் குத்துவதைக் கண்ட யாளி, அந்த யானையின் கொம்பை முறித்து வாய் விட்டலறி விழும்படி செய்யும்.* 2352

*என்றும் இளமை பெற்ற நித்திய சூரிகள் தலைவனான எம்பெருமானின் திருவேங்கட மலையில், அத் திருமலை தவிர வேறிடம் செல்லாத குறத்திகள் விளையாடுவர். தம் அழகிய வளையல் அணிந்த கைகளால் மூங்கில்களை வளைப்பார்கள். சந்திர மண்டலத்தளவும் ஓங்கி ராகுவிடமிருந்து சந்திரனை விடுவிக்கும் படியாக இம் மூங்கில்கள் வளர்ந்துள்ளன.* 2353

*இடமும் வலமும் ஏழு குதிரைகளைப் பூட்டிய தேருடைய சூரியனுக்கு உள்ளே நின்று இயக்குகிற திருமால், வடதிசையிலுள்ள திருவேங்கடத்தில் எழுந்தருளி உள்ளான. குடக் கூத்தாடிய கண்ண னாக அவதரித்தவனும் இப்பெருமானே. இந்த எம்பெருமானின் கழல் அணிந்த திருவடிகளைத் துதிப்பது நா பெற்ற பயன் ஆகும்.* 2354

*வஞ்சகமாக நஞ்சை ஊட்ட வந்த கொடிய பூதனை பூமியில் விழும்படி வஞ்சகமாகவே அவள் முலையைக் கண்ணபிரான் சுவைத்தான். ஆய்ச்சியான யசோதை, அவனை மீட்பதற்காக தன் முலைப் பாலை ஊட்டுவதற்கு அவனை அணுகிப் பாலூட்டினாளே! யசோதையின் அன்பு எவ்வளவு வலிமையானது! அச்சமே இல்லையே!* 2355

*கண்ணபிரானின் திருவேங்கட மலையில் நிலத்தில் வளர்ந்த வேங்கை மரங்கள் மணம் வீசும். அங்கு வாழும் சினம் உடைய வேங்கைப் புலிகள், பரந்த கொடு முடியிலே தன் கீழ் வயிறு தேய்த்து உலாவும். வெண்மையான சந்திரனின் முயலைப் பார்த்தபடி, நிற்கும். உணவாகிய முயலைப் புலி பிடிக்கவும் முடியாமல் அகலவும் விரும்பாமல் நிற்கும்.* 2356

*உலகோரே! நீங்கள் மலைகளிடையே நின்றும் நீர்த் துறைகளில் குளித்தும் ஐந்தீ நடுவே நின்றும் தவம் செய்ய வேண்டாம். எல்லோரும் விரும்பும் திருவெஃகாவில் கண் வளரும் பெருமானைப் பயன் எதிர்பாராமல் பூ இட்டு வணங்கினால் போதும். உம் பாவங்கள் யாவும் நமக்கு இது இடமில்லை என்று எண்ணி ஓடி விடும்.* 2357

ஆய்ந்த அரு மறையோன் நான்முகத்தோன் நன் குறங்கில்
வாய்ந்த குழவியாய் வாள் அரக்கன்- ஏய்ந்த
முடிப் போது மூன்று ஏழ் என்று எண்ணினான் ஆர்ந்த
அடிப் போது நங்கட்கு அரண். 2358

அரண் ஆம் நமக்கு என்றும் ஆழி வலவன்
முரன் நாள் வலம் சுழிந்த மொய்ம்பன்- சரண் ஆமேல்,
ஏது கதி? ஏது நிலை? ஏது பிறப்பு? என்னாதே;
ஓது -கதி மாயனையே ஓர்த்து. 2359

ஓர்த்த மனத்தராய், ஐந்து அடக்கி, ஆராய்ந்து
பேர்த்தால் பிறப்பு ஏழும் பேர்க்கலாம் -கார்த்த
விரை ஆர் நறும் துழாய் வீங்கு ஓத மேனி
நிரை ஆர மார்வனையே நின்று. 2360

நின்று எதிராய நிரை மணித் தேர் வாணன் தோள்,
ஒன்றிய ஈர் ஐஞ்நூறு உடன் துணிய வென்று இலங்கும்
ஆர் படு வான் நேமி அரவு அணையான் சேவடிக்கே
நேர்படுவான், தான் முயலும் நெஞ்சு. 2361

நெஞ்சால் நினைப்பு அரியனேலும் நிலைப்பெற்று என்
நெஞ்சமே பேசாய்; நினைக்குங்கால்- நெஞ்சத்துப்
பேராது நிற்கும் பெருமானை என்கொலோ
ஓராது நிற்பது உணர்வு ? 2362

உணரில், உணர்வு அரியன்; உள்ளம் புகுந்து
புணரிலும் காண்பு அரியன் உண்மை;- இணர் அணைய,
கொங்கு அணைந்து வண்டு அறையும் தன் துழாய்க்கோமானை
எங்கு அணைந்து காண்டும் இனி? 2363

இனி அவன் மாயன் என உரைப்பரேலும்
இனி அவன் காண்பு அரியனேலும்- இனியவன்
கள்ளத்தால் மண் கொண்டு விண் கடந்த பைங் கழலான்
உள்ளத்தின் உள்ளே உளன். 2364





வேதங்களை ஆராய்ந்து கற்ற பிரமனின் அழகிய மடியில், திருமால் குழந்தையாய்க் கிடந்தபடி, அரக்கனான இராவணனின் மலர் சூடிய தலைகள் பத்தையும் தன் திருவடியால் எண்ணிக் காட்டினான். அத் திருவடித் தாமரைகளே நமக்குக் குறைவில்லாத உபாயம் ஆகும். 2358

சக்கரத்தை வலக்கையில் ஏந்திய திருமால், முரன் என்னும் அசுரனின் ஆயுள் வலிமையைத் தொலைத்தான். இவனே நம்மைக் காப்பதால் நம் ஞானம், ஒழுக்கம், பிறவி ஆகியவற்றின் தாழ்வுகளைப் பார்க்க வேண்டியதில்லை. இவற்றைப் பொருட் படுத்தாது, அவனே எப்பொழுதும் நம்மைக் காப்பாற்றுகிறான். நெஞ்சமே! இம் மாயவனையே உபாயமாகக் கொண்டு அவன் நாமங்களை ஓதுவாய். 2359

மணம் வீசும் பச்சைத் திருத் துழாய் மாலையையும் அடுக்காக ஆரங்களையும் அணிந்த மார்புடைய பெருமானை, ஐம்புலன்களை அடக்கி, உலக வாழ்வை மறந்து, மனத்தை நிலை நிறுத்தித் தியானம் செய்தால், ஏழு பிறவிகளையும் போக்கி விடலாம். 2360

வரிசையாக மணிகள் உள்ள தேர் மேல் ஏறி, எதிர்த்துப் போரிட வந்த, பாணாசுரனின் ஆயிரம் தோள்களையும் கண்ணபிரான் ஒரே சமயத்தில் துணித்து வென்றான். ஒளி வீசும் சக்கரம் ஏந்தியவனும் பாம்பணையில் பள்ளி கொண்டவனுமான இத் திருமாலின் சிவந்த திருவடிகளிலே நேர்படுவதற்கு என் நெஞ்சம், தானே முயல்கிறது. 2361

என்நெஞ்சே! எம்பெருமான் உன்னால் நினைக்க முடியாத அரியவன் தான் என்றாலும், அவன் எளிமையை எண்ணி நீ நிலைப்பட்டு அவனைப் பற்றிப் பேசு. ஒருமுறை எண்ணினாலும் நெஞ்சை விட்டுப் போகாத அப்பெருமானை, உணர்வுடன் நெஞ்சம் நினையாமல் வாளா இருக்கலாமா? 2362

நாமாக அறிய முயன்றாலும் எம்பெருமான் அறிய ஒண்ணாதவன். அவனே நம் நெஞ்சில் புகுந்து அணைந்தாலும் உள்ளபடி அறிய முடியாதவன். இப்படிப்பட்ட நிலையிலே வண்டுகள் ஒலிக்கும் துழாய் மாலை அணிந்த அந்த இறைவனை இனி நாம் எங்குச் சென்று காண முடியும்? 2363

அந்த இறைவன் இப்போது நம்மால் காண முடியாத மாயவன் என்று சிலர் கூறுபவர். இப்போது அவனைக் கண்டு அனுபவிக்க இயலாதுதான். மாவலியிடம் வஞ்சகமாக மண் கொண்டு, வான் வளரப் பரப்பிய திருவடிகளை உடைய அப்பெருமான் இப்பொழுது என் உள்ளத்தின் உள்ளே நிலைத்து நிற்கிறான். இப்பேறே அடியேனுக்குப் போதும். 2364

உளனாய நான்மறையின் உட்பொருளை, உள்ளத்து
உளனாகத் தேர்ந்து உணர்வரேலும்- உளனாய
வண் தாமரை நெடுங் கண் மாயவனை யாவரே
கண்டார்? உகப்பர் கவி. 2365

கவியினார் கை புனைந்து கண் ஆர் கழல் போய்,
செவியின் ஆர் கேள்வியராய்ச் சேர்ந்தார்- புவியினார்
போற்றி உரைக்கப் பொலியுமே பின்னைக்கு ஆய்
ஏற்று உயிரை அட்டான் எழில்? 2366

எழில் கொண்ட மின்னுக் கொடி எடுத்து வேகத்
தொழில்கொண்டு தான் முழங்கித் தோன்றும்-எழில்கொண்ட
நீர் மேகம் அன்ன நெடு மால் நிறம் போல
கார் வானம் காட்டும் கலந்து. 2367

கலந்து மணி இமைக்கும் கண்ணா! நின் மேனி
மலர்ந்து மரதகமே காட்டும்;- நலம் திகழும்
கொந்தின்வாய் வண்டு அறையும் தண் துழாய்க் கோமானை
அந்தி வான் காட்டும் அது. 2368

அது நன்று இது தீது என்று ஐயப்படாதே.
மது நின்ற தண் துழாய் மார்வன் -பொது நின்ற
பொன் அம் கழலே தொழுமின்; முழு வினைகள்
முன்னம் கழலும் முடிந்து. 2369

முடிந்த பொழுதில் குற வாணர், ஏனம்
படிந்து உழு சால் பைந்தினைகள் வித்த- தடிந்து எழுந்த
வேய்ங் கழை போய் விண் திறக்கும் வேங்கடமே மேல் ஒரு நாள்
தீம் குழல் வாய் வைத்தான் சிலம்பு. 2370

சிலம்பும் செறி கழலும் சென்று இசைப்பவிண் ஆறு
அலம்பிய சேவடி போய்அண்டம்- புலம்பிய தோள்
எண் திசையும் சூழ இடம் போதாது என்கொலோ
வண்துழாய் மால் அளந்த மண்? 2371





நான்கு வேதப் பொருளாக உள்ள எம்பெருமானை, ஞானிகள் தம் உள்ளத்துள் இருப்பவனாக அறிய ஆசைப்பட்டனர். என்றாலும் ஆச்சரிய வடிவினன் ஆன, அப்பெருமானை முடியக் காணப் பெற்றவர் ஒருவரும் இல்லை. 'கண்டேன்' என்று துதிப் பாடல்களை உகந்து பாடுவார்களே அன்றி முடியக் காணல் ஆகுமோ! 2365

பூமியில் உள்ளோர் யாவரும் தம் கண்களை எம்பெருமான் திருவடிகளில் பதித்துக் கைகளால் வணங்கிக் காதார அவன் பெருமைகள் கேட்டுத் துதிப் பாடல்களைப் பாடி புகழ்ந்தாலும் அவன் சிறப்புகள் அதிகமாகி விடுமோ? நப்பின்னைக்காக எருதுகளைக் கொன்ற பெருமானுடைய அழகு இதனால் மேலோங்கி விடுமா? ஆகாது. 2366

அழகிய மின்னலைக் கொடியாக எடுத்து, வேகமாகத் திரிந்து கொண்டு முழங்கிவரும் கார்கால வானம் அழகிய காள மேகம் போன்ற திருமார்வின் திருநிறத்தைப் பொருந்தக் காட்டும். அவன் இயல்பும், குணமும், வடிவும் இந்த உவமையால் சிறிது கூறலாம். 2367

கண்ணபிரானே! கௌத்துப மணி விளங்கும் உன் திருமேனியை மரகதம், தன் ஒளியால் ஓரளவு காட்டும். பண்டொலிக்கும் அழகிய திருத்துழாய் மாலை அணிந்த உன் திருமேனியை மாலை நேர வானமும் ஒத்து நிற்கும். 2368

'அது நல்லதோ? இது கெட்டதோ?' என்று ஐயப்படாதீர். தேன் நிறைந்த திருத்துழாய் மாலையை மார்பில் அணிந்த எம் பெருமானின், எல்லோர்க்கும் பொதுவான அழகிய திருவடி களையே வணங்குங்கள். அவ்வாறு தொழுதால் உங்கள் பாவங்கள் எல்லாம் முன்னதாகவே முடிந்து அகன்று விடும். 2369

முன்பு இனிய புல்லாங்குழலை வாய் வைத்து ஊதின கண்ணபிரான் எழுந்தருளிய மலை திருவேங்கடம் ஆகும். இங்கு குறவர் தலைவர்கள், வயதான தங்கள் ஆயுள் முடிவுக் காலத்திலும் காட்டுப் பன்றிகள் உழுத நிலங்களிலே தினைகளை விதைப் பார்கள். வெட்டிய பிறகும் ஓங்கி வளர்ந்த மூங்கில்கள் வான் நோக்கி வளரும் சிறப்புடையது இம் மலை. 2370

எம்பெருமான் உலகளந்த பொழுது திருவடிச் சிலம்புகளும் தண்டைகளும் ஒலித்தன. ஆகாய கங்கையில் விளக்கப்பட்ட திருவடிகள் அண்டம் வரை நீண்டன. அனைவரும் துதிக்கத் தக்க அவன் தோள்கள் எட்டுத் திசைகளிலும் வியாபித்தன. எங்குமே இடம் போதவில்லை. திருத்துழாய் மாலை அணிந்த திருமால் அளந்த பூமி என்ன அவனுக்குப் பெரியதா? மிகவும் சிறியதே அன்றோ! 2371

மண் உண்டும் பேய்ச்சி முலை உண்டும் ஆற்றாதாய்,
வெண்ணெய் விழுங்க வெகுண்டு, ஆய்ச்சி- கண்ணிக்
கயிற்றினால் கட்டத் தான் கட்டுண்டிருந்தான்
வயிற்றினோடு ஆற்றா மகன். 2372

மகன் ஒருவர்க்கு அல்லாத மா மேனி மாயன்
மகன் ஆம்; அவன் மகன் தன் காதல்- மகனைச்
சிறைசெய்த வாணன் தோள் செற்றான் கழலே.
நிறைசெய்து என் நெஞ்சே! நினை. 2373

நினைத்து உலகில் ஆர் தெளிவார் நீண்ட திருமால்?
அனைத்து உலகும் உள் ஒடுக்கி ஆல் மேல்- கனைத்து உலவு
வெள்ளத்து ஓர் பிள்ளையாய் மெள்ளத் துயின்றானை
உள்ளத்தே வை, நெஞ்சே! உய்த்து. 2374

உய்த்து, உணர்வு என்னும் ஒளி கொள் விளக்கு ஏற்றி
வைத்து அவனை நாடி வலைப்படுத்தேன்;- மெத்தெனவே
நின்றான், இருந்தான், கிடந்தான் என் நெஞ்சத்து
பொன்றாமை மாயன் புகுந்து. 2375

புகுந்து இலங்கும் அந்திப் பொழுதத்து அரியாய்,
இகழ்ந்த இரணியனது ஆகம்-சுகிர்ந்து எங்கும்
சிந்தப் பிளந்த திருமால் திருவடியே
வந்தித்து என் நெஞ்சமே! வாழ்த்து. 2376

வாழ்த்திய வாயராய் வானோர் மணி மகுடம்
தாழ்த்தி வணங்கத் தழும்பாமே -கேழ்த்த
அடித் தாமரை மலர்மேல் மங்கை மணாளன்
அடித் தாமரை ஆம் அலர்! 2377

அலர் எடுத்த உந்தியான், ஆங்கு எழில் ஆய
மலர் எடுத்த மா மேனி மாயன்,- அலர் எடுத்த
வண்ணத்தான் மா மலரான் வார் சடையான் என்று இவர்கட்கு
எண்ணத்தான் ஆமோ இமை? 2378





*வயிற்றின் பாடு ஆற்ற முடியாத பிள்ளையான கண்ணன், உலகங்களை உண்டும் பூதனைப் பேயின் முலையை உண்டும் திருப்தி பெறவில்லை. அதனால், வெண்ணெயைத் திருடி விழுங்கின பொழுது, ஆய்ச்சி யசோதை கோபம் கொண்டு கண்ணிக் கயிற்றால் அவனைக் கட்டிப் போடவும், எல்லாச் சக்தியும் உடைய எம்பிரான் கட்டுப்பட்டிருந்தானே!* 2372

*என் மனமே! கர்மம் அடியாக மகனாகப் பிறக்காத மேனியுடைய மாயன் வசுதேவருக்கு மகனாகப் பிறந்தான். அந்தக் கண்ணன், தன் மகன் பிரத்யுமனின் மகன் அநிருத்தனைச் சிறை செய்த பாணாசுரன் தோள்கள் ஆயிரத்தையும் அறுத்தான். இப்பெருமானுடைய திருவடிகளையே முழுதும் நினைப்பாய்.* 2373

*ஓங்கி வளர்ந்த திருமால், ஒலித்துக் கொண்டு பரவிய பிரளய வெள்ளத்தில், சிறு குழந்தையாய் உலகங்களை எல்லாம் தன் வயிற்றில் அடக்கி, ஆலந்தளிரில் மெள்ளப் பள்ளி கொண்டான். இவ்வுலகில் அவனைத் தஞ்சமாக எண்ணித் தெளிவு பெறுபவர் உண்டோ? ஒருவரும் இல்லையே! நெஞ்சமே! நீயாவது அவனை நெஞ்சில் வைத்துக் கொள்.* 2374

*எம்பெருமானே உபாயம் என்னும் ஒளி விளக்கை ஏற்றி, அவனைத் தேடிப் பிடித்து, ஆராய்ந்து பயின்று பிடித்து வைத்துக் கொண்டேன். அந்த மாயப் பிரான், நான் நசியாதிருக்க, என் நெஞ்சில் புகுந்து மெத்தென நின்றான். பிறகு வீற்றிருந்தான். அதன் பிறகு பள்ளி கொண்டான். அவன் என்னிடத்தே வைத்த ஆசைதான் என்னே!* 2375

*மாலை நேரத்தில், நரசிம்மமாய்த் தோன்றிய திருமால், தன்னை இகழ்ந்த இரணியனின் உடலை பல கூறுகளாக வகிர்ந்து சிந்தும்படி பிளந்தான். எனது மனமே! அப்பெருமானுடைய திருவடிகளையே தலையார வணங்கி வாயார வாழ்த்து.* 2376

*பருத்த தாளை உடைய தாமரைப் பூவில் அமரும் திருமகளின் கேள்வனாகிய பெருமான் திருவடித் தாமரைகளை, நித்திய சூரிகள் வாயால் வாழ்த்துகின்றனர். தங்கள் மணிமுடிகளைத் தாழ்த்தி, எம் பெருமான் திருவடிகளில் வணங்குவதால் அத் திருவடிகள் தழும்பேறி உள்ளன.* 2377

*தாமரைப் பூ ஓங்கிய கொப்பூழையும் காயாம் பூப் போன்ற கரிய திருமேனியையும் பெற்றுள்ள மாயன் ஆன திருமாலை, காஞ்சி மலர் போன்ற நிறமுடைய இந்திரன், தாமரைப் பூவில் பிறந்த பிரமன், தாழ்ந்த சடை உடைய சிவன் ஆகியவர்கள் சற்றேனும் நெஞ்சால் நினைக்க முடியுமோ?* 2378

இமம் சூழ் மலையும் இரு விசும்பும் காற்றும்
அமம் சூழ்ந்து அற விளங்கித் தோன்றும் -நமன் சூழ்
நரகத்து நம்மை நணுகாமல் காப்பான்
துரகத்தை வாய் பிளந்தான் தொட்டு. 2379

தொட்ட படை எட்டும் தோலாத வென்றியான்,
அட்டபுயகரத்தான், அஞ்ஞான்று- குட்டத்துக்
கோள் முதலை துஞ்ச, குறித்து எறிந்த சக்கரத்தான்
தாள் முதலே நங்கட்குச் சார்வு. 2380

சார்வு நமக்கு என்றும் சக்கரத்தான், தண் துழாய்த்
தார் வாழ் வரை மார்பன் தான் முயங்கும்- கார் ஆர்ந்த
வான் அமரும் மின் இமைக்கும் வண் தாமரை நெடுங் கண்,
தேன் அமரும் பூமேல் திரு. 2381

## மூன்றாம் திருவந்தாதி முற்றிற்று.





*பனி சூழ்ந்த இமயமலையும், பெரிய வானும் காற்றும் அடங்கும்படி எங்கும் வியாபிக்கும் பரமனான எம்பெருமான், நம்மைச் சூழ்ந்து துன்புறுத்தும் பிறவியாகிய நரகம் இனிச் சேராதபடி காப்பதற்காக, கண்ணெதிரே விளங்கிய படி அவதரிக்கிறான். குதிரை வடிவில் வந்த கேசியைக் கைதொட்டு வாய் பிளந்த கண்ணன் அன்றோ இவன்!* **2379**

*தோல்வி அடையாமல் வெற்றியே பெறுகிற எம்பெருமான் எட்டு திவ்விய ஆயுதங்களை ஏந்தியவனாய் திருஅட்டபுயகரத்தில் எழுந்தருளி உள்ளான். முன்னொரு கால் நீர்ப் பொய்கையில், வலிமை பெற்ற முதலை இறக்கும்படி குறியுடன் எறிந்த சக்கரம் ஏந்திய திருமாலே, இப்பெருமான். இவன் திருவடிகளே நமக்குத் தஞ்சமாகும்.* **2380**

*கையில் சக்கரம் ஏந்தியவனும் குளிர்ந்த திருத்துழாய் மாலையை மார்பில் அணிந்தவனும் ஆன எம்பெருமானைப் பிரியாமல் திருமகள் சேர்ந்தே இருக்கிறாள். மேகம் நிறைந்த வானில் மின்னல் போலே விளங்குகின்ற அவள், அழகிய தாமரைப் பூப் போன்ற கண்களுடன் தேன் நிறைந்த தாமரையில் உறைபவள். இந்தப் பெரிய பிராட்டியாரே நமக்கு எப்பொழுதும் தஞ்சம் ஆவாள்.* **2381**

## மூன்றாம் திருவந்தாதி முற்றிற்று.



ஸ்ரீ :

# இயற்பா

திருமழிசை ஆழ்வார் அருளிய
நான்முகன் திருவந்தாதி

## நாலாயிர திவ்யப் பிரபந்தம்

ஸ்ரீ:

# நாலாயிர திவ்வியப் பிரபந்தம்

## இயற்பா

திருமழிசை ஆழ்வார் அருளிய
நான்முகன் திருவந்தாதித் தனியன்

நாராயணன் படைத்தான் நான் முகனை நான்முகனுக்கு
ஏரார் சிவன் பிறந்தான் என்னும் சொல் - சீர் ஆர்
மொழி செப்பி வாழலாம் நெஞ்சமே! மொய் பூ
மழிசைப் பிரான் அடியேன் வாழ்த்து.

**- ஸ்ரீராமப் பிள்ளை அருளியது.**



ஸ்ரீ:

# நாலாயிர திவ்வியப் பிரபந்தம்

## இயற்பா

திருமழிசை ஆழ்வார் அருளிய
நான்முகன் திருவந்தாதித் தனியன் உரை

"ஸ்ரீமந் நாராயணன் நான்கு முகங்களுடைய பிரமனைப் படைத்தான். அப் பிரமனுக்கு அழகிய சிவன் பிறந்தான்." இவ்வாறு கூறும் பெருமைகள் கூடிய இப் பிரபந்தத்தைச் சொல்லி வாழ்வு பெறுவாய். நெஞ்சமே! பூக்கள் நிரம்பிய திருமழிசையில் தோன்றிய ஆழ்வார் திருவடிகளையே நீ வாழ்த்து.

**– ஸ்ரீராமப் பிள்ளை அருளியது.**

ஸ்ரீ:

# திருமழிசை ஆழ்வார் அருளிச்செய்த

## நான்முகன் திருவந்ததாதி

நான்முகனை நாராயணன் படைத்தான்; நான்முகனும்
தான் முகமாய்ச் சங்கரனைத் தான் படைத்தான்;- யான் முகமாய்
அந்தாதி மேலிட்டு அறிவித்தேன் ஆழ் பொருளை;
சிந்தாமல் கொள்மின் நீர், தேர்ந்து. 2382

தேருங்கால், தேவன் ஒருவனே என்று உரைப்பர்;
ஆரும் அறியார் அவன் பெருமை: -ஓரும்
பொருள் முடிவும் இத்தனையே; எத் தவம் செய்தார்க்கும்
அருள் முடிவது ஆழியான்பால். 2383

பாலில் கிடந்ததுவும், பண்டு அரங்கம் மேயதுவும்
ஆலில் துயின்றதுவும் ஆர் அறிவார் - ஞாலத்து
ஒரு பொருளை வானவர் தம் மெய்ப் பொருளை அப்பில்
அரு பொருளை யான் அறிந்த ஆறு? 2384

ஆறு சடைக் கரந்தான் அண்டர்கோன் தன்னோடும்
கூறு உடையன் என்பதுவும் கொள்கைத்தே? - வேறு ஒருவர்
இல்லாமை நின்றானை எம்மானை, எப் பொருட்கும்
சொல்லானைச் சொன்னேன், தொகுத்து. 2385

தொகுத்த வரத்தனாய்த் தோலாதான் மார்வம்
வகிர்த்த வளை உகிர்த் தோள் மாலே!- உகத்தில்
ஒருநான்று நீ உயர்த்தி உள்வாங்கி, நீயே
அரு நான்கும் ஆனாய் -அறி. 2386

அறியார் சமணர்; அயர்த்தார் பவுத்தர்;
சிறியார் சிவப்பட்டார்;செப்பில் -வெறியாய
மாயவனை மாலவனை மாதவனை ஏத்தாதார்
ஈனவரே, ஆதலால் இன்று. 2387



ஸ்ரீ:

# திருமழிசை ஆழ்வார் அருளிச்செய்த

## நான்முகன் திருவந்ததாதி

ஸ்ரீமந் நாராயணன் நான்முகங்களுடைய பிரமனைப் படைத்தான். அப்பிரமனும் தன்னையே முதலாகக் கொண்டு சங்கரனைப் படைத்தான். நான் அறிந்த இந்த ஆழ்ந்த பொருளை, திருவந்தாதியாய் உள்ள இப்பிரபந்தத்தில் அறிவித்தேன். நீங்கள் ஆராய்ந்து இப்பொருளைச் சிதறாமல் மனத்தில் கொள்ளுங்கள். 2382

தேர்ந்து பார்த்தால் பரம்பொருள் ஒருவனே என்று ஞானிகள் கூறுவர். அவன் பெருமையை ஒருவரும் அறியார்கள். வேதம் முதலிய நூல்களால் ஆராயப்படும் பொருள் முடிவும் இத்தனையே. எவ்விதமான சாதனங்களை மேற்கொண்டவர்களுக்கும் அவற்றின் பலன் சக்கரம் ஏந்திய திருமாலின் அருளாலேயே உண்டாகும். 2383

திருமால், அவதாரத்துக்கு உறுப்பாகப் பாற்கடலில் கண் வளர்ந்ததும், பண்டு திருவரங்கம் மேவியதும், ஆலிலையில் பள்ளி கொண்டதும் நான் அறிந்தது போல் யார் அறிவார்? உலகத்துக் காரணப் பொருளாய் உள்ள அவன் நித்திய சூரிகளின் மெய்ப் பொருளாய் விளங்கு பவன். படைப்புக் காலத்தில் நீரில் பள்ளி கொண்ட எப்பெருமானை அவன் அருளால் அறிந்தேன். சுயமுயற்சியால் யாரும் அறிய முடியாது. 2384

கங்கை ஆற்றைச் சடையில் மறைத்து வைத்துள்ள சிவன் தேவாதி தேவனான திருமாலுடன் சமமானவன் என்று பாமரர் கூறுவது ஏற்கத் தக்கது அன்று. திருமாலுக்கு ஒப்பான தெய்வம் வேறில்லை. எந்தப் பொருளைக் கூறும் ஒலியும் வாசகமும் அவனே. நாராயணன் எல்லாத் தெய்வங்களையும் உள்ளடக்கியவன். இதைச் சுருங்க கூறினேன். 2385

திருமாலே! வரங்களைச் சேர்த்ததால் தோல்வியடையா திருந்த இரணியன் மார்பை இரு கூறாக உன் நகங்களால் பிளந்தாய். பிரளயத்தில் உலகங்களை உள் வாங்கிய நீ மீண்டும் அவற்றை வெளியிட்டு வளரச் செய்து தேவர்கள், மனிதர்கள், விலங்குகள், தாவரங்கள் ஆகிய நான்கிலும் வாழும் ஆத்மா ஆனாய். நீயே உலகங்கள் அனைத்துக்கும் கருவிப் பொருளாகவும் காரணனும் ஆவாய் என்பதை அறிவாய். 2386

சமணர்கள் உண்மையை அறியார்கள். பௌத்தர்களோ பிரமித்தார்கள். சைவர்கள் மிகவும் சிறியவர்கள். எம்பெருமான் மணமே வடிவெடுத்தவன். ஆச்சரியமான குணங்களை உடையவன்; அடியாரிடத்தில் அன்பு கொண்டவன். இப்படிப்பட்ட திருமாலை ஏத்தாதவர் ஈனர்களே. 2387

இன்று ஆக, நாளையே ஆக, இனிச் சிறிது
நின்று ஆக, நின் அருள் என்பாலதே;- நன்றாக
நான் உன்னை அன்றி இலேன் கண்டாய்; நாரணனே!
நீ என்னை அன்றி இலை. 2388

இலை துணை மற்று என் நெஞ்சே! ஈசனை வென்ற
சிலை கொண்ட செங்கண் மால் சேரா- குலை கொண்ட
ஈர் ஐந்தலையான் இலங்கையை ஈடு அழித்த
கூர் அம்பன் அல்லால், குறை. 2389

குறைகொண்டு, நான்முகன் குண்டிகை நீர் பெய்து
மறைகொண்ட மந்திரத்தால் வாழ்த்தி- கறைகொண்ட
கண்டத்தான் சென்னிமேல் ஏறக் கழுவினான்
அண்டத்தான் சேவடியை ஆங்கு. 2390

ஆங்கு ஆரவாரம் அது கேட்டு, அழல் உமிழும்
பூங் கார் அரவு அணையான் பொன் மேனி -யாம் காண
வல்லமே அல்லமே? மா மலரான் வார் சடையான்
வல்லரே அல்லரே? வாழ்த்து! 2391

வாழ்த்துக வாய்;காண்க கண்; கேட்க செவி; மகுடம்
தாழ்த்தி வணங்குமின்கள் தண் மலரால் - சூழ்த்த
துழாய் மன்னு நீள் முடிஎன் தொல்லை மால் தன்னை
வழா வண் கை கூப்பி மதித்து. 2392

மதித்தாய் போய் - நான்கில் மதியார் போய் வீழ
மதித்தாய்; மதி கோள் விடுத்தாய்!- மதித்தாய்
மடுக் கிடந்த மா முதலை கோள் விடுப்பான் ஆழி
விடற்கு: இரண்டும் போய் இரண்டின் வீடு. 2393

வீடு ஆக்கும் பெற்றி அறியாது மெய் வருத்திக்
கூடு ஆக்கி நின்று உண்டு கொண்டு உழல்வீர்!- வீடு ஆக்கும்
மெய்ப்பொருள் தான் வேத முதற்பொருள் தான் விண்ணவர்க்கு
நற்பொருள் தான் நாராயணன். 2394





நாராயணனே! இன்றைக்கோ, நாளைக்கோ, இன்னும், சிறிது காலம் கழித்தோ என்றைக்கு ஆனாலும் வகுத்த தலைவனான உன்னுடைய அருள், அடியவன் ஆன என்னிடம் ஏற்படும். நிச்சயமாக நான் உன்னை அன்றிப் புகல் இல்லாதவன். அதே போல் நீயும் என்னை அன்றி வேறு காப்பாற்றப்படும் பொருள் பெறாதவன். 2388

என்நெஞ்சே! சிவனை வென்ற வில்லை ஏந்திய செங்கண் மாலைப் பணியாத பத்துத் தலை இராவணனின் இலங்கையை இராமபிரான் தன் கூர்மையான அம்புகளால் பாழ்படுத்தி அழித்தான். அப்பெருமானை அன்றி நம் குறைகளைத் தீர்க்க வேறு துணைவன் இல்லை. 2389

பிரமன், தன் குறைகள் தீரப் பெற்றதும், கமண்டல நீரை வார்த்து, வேத மந்திரங்களினால் துதித்து உலகளந்த திருமாலின் திருவடிகளை விளக்கினான். அந்த நீர், நஞ்சுக் கழுத்துடைய சிவன் தலையில் விழுந்தது. இருவரும் தத்தம் குறைகள் தீரப்பெற்றனர். 2390

திரிவிக்கிரமன் உலகளந்த பொழுது பிரமன் முதலியோரின் துதி ஆரவாரத்தைக் கேட்ட ஆதிசேஷன், அசுரர் கூச்சலோ என்று எண்ணி நஞ்சுத் தீயைக் கக்கினான். இத்திருவனந்தாழ்வான் மீது பள்ளி கொண்ட திருமாலின் திருமேனியை நாம் காண வல்லோமோ? அவன் அருளால் காண்போம். ஆனால் பூவிற் பிறந்த பிரமனும், சடை உடைய சிவனும் அவனை வாழ்த்த வல்லார் அல்லர். 2391

திருத்துழாய் மாலை சுற்றப்பட்ட திருமுடி உடையவனும் என்னிடம் நெடுநாள்களாக அன்பு கொண்டவனும் ஆன திருமாலை, விடாது கைகள் கூப்பித் தியானம் செய்து, தலை சாய்த்து வணங்கி, குளிர்ந்த பூக்கள் கொண்டு வழிபடுங்கள். உங்கள் வாய் அவனைத் துதிக்கட்டும். கண்கள் சேவிக்கட்டும். காதுகள் அவனைப் பற்றியே கேட்கட்டும். 2392

பெருமானே! எங்கும் புகுந்து ஆராய்ந்தும் உன்னை அறியாதவர்கள் நால்வகைப் பிறவிகளில் விழும்படி நினைத்தாய். சந்திரன் துயரத்தை நீக்கியவனே; மடுவில் கிடந்த முதலை பற்றிய கஜேந்திரனை விடுவிக்கச் சக்கரத்தை விட நினைத்தாய். அப்படிச் செய்ததால் இரண்டும் பழைய நிலைகளை விட முடிந்தது. முதலை சாபம் தீரப் பெற்றது. கஜேந்திரன் மோட்சம் அடைந்தான். 2393

வீடு அடையும் வழியை விட்டு உடம்பை வருத்திக் கூடாக்கித் தவம் செய்து பின் உண்டு உழல்பவரே! ஸ்ரீமந் நாராயணனே உண்மை உபாயம் ஆவான். வேதப்பொருளான முழு முதற் கடவுள் அவனே! நித்திய சூரிகள் தலைவன் அவனே! 2394

நாராயணன், என்னை ஆளி, நரகத்துச்
சேராமல் காக்கும் திருமால் தன்-பேரான
பேசப் பெறாத பிணச் சமயர் பேசக் கேட்டு
ஆசைப்பட்டு ஆழ்வார் பலர். 2395

பல தேவர் ஏத்தப் படி கடந்தான் பாதம்
மலர் ஏற இட்டு, இறைஞ்சி வாழ்த்த- வலர் ஆகில்,
மார்க்கண்டன் கண்ட வகையே வரும் கண்டீர்
நீர்க்கண்டன் கண்ட நிலை. 2396

நிலைமன்னும் என் நெஞ்சம் -அந்நான்று தேவர்
தலைமன்னர் தாமே மாற்றாக- பல மன்னர்
போர் மாள, வெம் கதிரோன் மாய, பொழில் மறைய,
தேர் ஆழியால் மறைத்தாரால். 2397

ஆல நிழற்கீழ் அறநெறியை நால்வர்க்கு
மேலை யுகத்து உரைத்தான் மெய்த் தவத்தோன் -ஞாலம்
அளந்தானை, ஆழிக் கிடந்தானை, ஆல்மேல்
வளர்ந்தானைத் தான் வணங்குமாறு. 2398

மாறு ஆய தானவனை வள் உகிரால் மார்வு இரண்டு
கூறாகக் கீறிய கோளரியை- வேறாக
ஏத்தியிருப்பாரை, வெல்லுமே மற்று அவரைச்
சாத்தியிருப்பார் தவம். 2399

தவம் செய்து,நான்முகனால் பெற்ற வரத்தை
அவம் செய்த ஆழியாய் அன்றே? - உவந்து எம்மைக்
காப்பாய் நீ; காப்பதனை ஆவாய் நீ; வைகுந்தம்
ஈப்பாயும் எவ் உயிர்க்கும் நீ. 2400

நீயே உலகு எல்லாம்; நின் அருளே நிற்பனவும்;
நீயே தவத் தேவ தேவனும்; -நீயே
எரி சுடரும் மால் வரையும் எண் திசையும் அண்டத்து
இரு சுடரும் ஆய இவை. 2401





எல்லா உலகங்களுக்கும் தலைவனான நாராயணன், அடியேனை ஆட்கொண்டான். அடியார்களைப் பிறவி ஆகிற நரகிலிருந்து காப்பாற்றுகிறான். இத்திருமாலின் நாமங்களைப் பேசும் பேறு பெறாதவர், நடைப் பிணங்களே. வேதப் புறம்பான வரும், வேதத்தை உள்ளபடி உணராதவரும் பேசுவதைக் கேட்டுப் பலர் தாழ்கின்றனர். **2395**

தேவர்கள் பலரும் துதிக்கும்படி உலகளந்த திருமால் திருவடிகளில் பூக்களை இட்டு, வணங்கி வாழ்த்துங்கள். இவ்வாறு வழிபட்டால் நஞ்சு நீரைக் கழுத்தில் தாங்கிய சிவன் திருமாலுக்கு ஆட்பட்ட நிலையிலே, அவன் மூலமாய் மார்க்கண்டன் ஆயுளையும் வீட்டையும் பெற்றதை உணர்வீர். உங்களுக்கு அவ்வாறு உய்வு கிட்டும். **2396**

பாரதப்போரில் தேவாதி தேவன் ஆன திருமால் தானே எதிரியாக நின்று பல மன்னர் மடியும் படி செய்தான். சக்கரத்தால், சூரியனை மறைத்து, உலகு முழுவதும் இருள் மூடச் செய்தான். அடியார் பக்கமே சாரும் பெருமானின் நீர்மை என் மனத்தை நிலை பெறச் செய்து விட்டது. **2397**

உண்மையான தவ வழி உடைய சிவன், முன் யுகத்தில் ஆலமர நிழலில் நான்கு முனிவர்களுக்குத் திருமால் வழிபாட்டையே தன்னுடைய அறநெறியாக உபதேசித்தான். உலகளந்தவனும், பாற்கடலில் பள்ளி கொண்டவனும், ஆலந்தளிரில் கண் வளர்ந்தவனும் ஆன, திருமாலைத் தான் வணங்கியதைக் கூறி அவர்களையும் அவ்வழிப் படுத்தினான். **2398**

மிடுக்குடைய நரசிம்மப் பிரான், தன்னை எதிர்த்த இரணியன் மார்பைக் கூரிய நகங்களால் இரு பிளவாக்கிக் கொன்றான். இப்பெருமானைத் துதிக்கும் அடியார்க்கு ஆட்படும் அடியார்களின் புண்ணியம் மேலோங்கி வென்று விடும். **2399**

பெருமானே! இரணியன் முதலியோர் தவம் செய்து பிரமனிட மிருந்து பெற்ற வரங்களைப் பாழாக்கி, அவ்வரங்களைக் கொடுத் தவரைக் காப்பதற்கென்றே சக்கரத்தைக் கையில் ஏந்தினாயோ? உள்ளம் உவந்து எம்மைக் காப்பவன் நீயே! காக்கும் விழைவும், உறுதியும் உன்னுடையனவே. அடியார்க்குப் பரமபதமும் நீயே அளிக்கிறாய். **2400**

நீயே உலகங்களின் தலைவன். உன் அருளாலேயே நிலையான வீடு பேறு கிடைக்கும். தவம் செய்ததால் தேவர்களாகிய பிரமன் முதலியோர்க்குத் தலைவனும் நீயே. ஒளிவிடும் நெருப்பு, பெரிய மலைகள், எட்டுத் திசைகள், அண்டத்தில் உள்ள சந்திரன், சூரியன் ஆகியன யாவும் நீயே ஆவாய். **2401**

இவையா - பில வாய் திறந்து எரி கான்ற
இவையா - எரிவட்டக் கண்கள்!- இவையா
எரி பொங்கிக் காட்டும் இமையோர் பெருமான்
அரி பொங்கிக் காட்டும் அழகு! 2402

அழகியான் தானே, அரி உருவன் தானே,
பழகியான் தாளே பணிமின்;- குழவியாய்த்
தான் ஏழ் உலகுக்கும் தன்மைக்கும் தன்மையனே.
மீன் ஆய், உயிர் அளிக்கும் வித்து. 2403

வித்தும் இடவேண்டும் கொல்லோ விடை அடர்த்த
பத்தி உழவன் பழம் புனத்து? - மொய்த்து எழுந்த
கார் மேகம் அன்ன கரு மால் திருமேனி
நீர் வானம் காட்டும் நிகழ்ந்து. 2404

நிகழ்ந்தாய் -பால் பொன் பசுப்புக் கார் வண்ணம் நான்கும்;
இகழ்ந்தாய் இருவரையும் வீய;- புகழ்ந்தாய்
சினப் போர்ச் சுவேதனைச் சேனாபதியாய்
மனப் போர் முடிக்கும் வகை. 2405

வகையால் மதியாது மண் கொண்டாய்; மற்றும்
வகையால் வருவது ஒன்று உண்டே ? - வகையால்
வயிரம் குழைத்து உண்ணும் மாவலி, தான் என்னும்
வயிர வழக்கு ஒழித்தாய், மற்று. 2406

மற்றுத் தொழுவார் ஒருவரையும் யான் இன்மை
கற்றைச் சடையான் கரிக் கண்டாய்;-எற்றைக்கும்
கண்டுகொள் கண்டாய், கடல்வண்ணா! யான் உன்னைக்
கண்டு கொள் கிற்குமாறு. 2407

மால் தான் புகுந்த மட நெஞ்சம் மற்றதுவும்
பேறாகக் கொள்வனோ, பேதைகாள்! - நீறாடி
தான் காண மாட்டாத தார் அகலச் சேவடியை
யான் காண வல்லேற்கு இது? 2408





*தீயைக் கக்கும் திறந்த குகை போன்ற பெரியவாய் இதுவா? கொள்ளி வட்டம் போலச் சிவப்பாக ஒளிவிடும் கண்களா இவை? நரசிம்மப் பெருமான் திருமேனி நெருப்பே கிளர்ந்தது போல உள்ளதே! நித்திய சூரிகள் தலைவன் ஆன திருமால் சிங்கப் பிரானாக காட்டுகிற அழகு பொங்கி வழிகிறதே! இதுவா?* **2402**

*வித்தாக ஏழுலகங்களுக்கும் காரணமான எம்பெருமான், சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் ஆகியவற்றின் இருப்பிடமானவன். பிரளயத்தில் சிறு குழந்தை ஆனவன். மீனாய் வடிவெடுத்த பொழுதும் ஆத்மாக்களைக் காத்தான். இவனே அழகே வடிவம் கொண்ட நரசிம்மம் ஆனான். இந்த ஆதிப்பிரான் திருவடிகளில் பணியுங்கள்.* **2403**

*பக்திப் பயிருக்குப் பாடுபடும் எம்பெருமானின் தொன்மையான உலகம் என்னும் வயலில், நாம் புண்ணியங்களாகிற விதையை விதைக்கவும் வேண்டுமோ? நப்பின்னையை அடைய எருதுகளைக் கொன்ற அத்திருமால்,திரண்டு எழுந்த காளமேகம் போன்ற, கரியவன். நீர் கொண்ட மேகம் வானில் அவனைக் காட்டும்.* **2404**

*எம்பெருமானே! நீ, யுகங்களுக்கு ஏற்றபடி வெண்மை, சிவப்பு, பசுமை, கறுமை ஆகிய நிறங்களைக் கொள்கிறாய். மதுகைடபரை அழித்தாய். திரௌபதியின் கூந்தலை முடிக்க மனத்தில் திட்டமிட்ட நீ, அர்ச்சுனன் படைக்குக் காவலன் ஆகிப் பாரதப் போரைச் செய்வித்து முடித்தாய். சீறிப் போர் செய்த அவனைப் புகழ்ந்தாய்.* **2405**

*பெரியதாக எண்ணாமல், எளியவனாய், மாவலியிடம் யாசித்த நீ, பூமியைக் கொண்டாய். மருந்துடன் குழைத்து அளவாக, வயிரத்தை உட்கொண்டு, தன் அகங்காரத்தை வளர்த்த மாவலியின் பகைமையை ஒழித்தாய். இவ்வாறு நீ செய்தது உன் அடியார்க்காகவே அன்றி, உனக்காக உண்டோ?* **2406**

*கடல் வண்ணா! அடியேனால் வணங்கப்படும் தெய்வம் நீ அன்றி வேறில்லை. இதற்குச் சாட்சி, முடிந்த சடையுடைய சிவனே ஆவான். உன்னையே தொழும் அடியேன் எந்நாளும் இப்படியே வணங்கும்படி செய்தருள வேண்டும்.* **2407**

*மூடர்களே! நீறு பூசிய சிவனாலும் காண முடியாத, திருமாலின் அகன்ற திருவடிகளைக் காணும் பேறு பெற்றேனே! எம் பெருமான், தானே வந்து புகுந்த என் பணிவான நெஞ்சை விட வேறொன்றைப் பயனாகக் கொள்ள மாட்டேன்.* **2408**

இது -இலங்கை ஈடு அழியக் கட்டிய சேது;
இது - விலங்கு வாலியை வீழ்த்தது;- இது இலங்கை
தான் ஒடுங்க வில் நுடங்க தண் தார் இராவணனை
ஊன் ஒடுங்க எய்தான் உகப்பு. 2409

உகப்பு உருவன் தானே ஒளி உருவன் தானே,
மகப்பு உருவன் தானே; மதிக்கில் - மிகப் புருவம்
ஒன்றுக்கு ஒன்று ஓசனையான் வீழ, ஒரு கணையால்
அன்றிக்கொண்டு எய்தான் அவன். 2410

அவன் என்னை ஆளி, அரங்கத்து; அரங்கில்
அவன் என்னை எய்தாமல் காப்பான்;- அவன் என்னது
உள்ளத்து நின்றான் இருந்தான் கிடக்குமே.
வெள்ளத்து அரவு அணையின்மேல்? 2411

மேல்,நான்முகன் அரனை இட்ட விடு சாபம்
தான் நாரணன் ஒழித்தான், தாரகையுள்;- வானோர்
பெருமானை ஏத்தாத பேய்காள்! பிறக்கும்
கரு மாயம் பேசில் கதை. 2412

கதைப் பொருள் தான் கண்ணன் திருவயிற்றின் உள்ள
உதைப்பளவு போதுபோக்கு இன்றி;- வதைப்பொருள் தான்
வாய்ந்த குணத்துப் படாதது; அடைமினோ
ஆய்ந்த குணத்தான் அடி. 2413

அடிச் சகடம் சாடி அரவு ஆட்டி யானை
பிடித்து ஒசித்து பேய் முலை நஞ்சு உண்டு- வடிப் பவள
வாய்ப் பின்னை தோளிக்கா வல் ஏற்று எருத்து இறுத்து
கோப் பின்னும் ஆனான் குறிப்பு. 2414

குறிப்பு எனக்குக் கோட்டியூர் மேயானை ஏத்த;
குறிப்பு எனக்கு நன்மை பயக்க:- வெறுப்பனோ
வேங்கடத்து மேயானை, மெய் வினை நோய் எய்தாமல்
தான் கடத்தும் தன்மையான் தாள்? 2415





இந்த சேது இலங்கையின் அழகு குலைவதற்கென்றே கட்டிய அணை ஆகும். விலங்காய்ப் பிறந்த வாலியை வீழ்த்திய செயலும் இதோ தெரிகிறது. இலங்கை அழியவும், பூ மாலை அணிந்த இராவணனின் முதுகு வளையவும் வில்லை வளைத்து அம்பெய்த இராமபிரானின் செயலோ, அவனுக்கு உகந்த விளையாட்டு அன்றோ! 2409

சிந்தித்துப் பார்த்தால் எல்லோரும் விரும்பும் திருமேனி உடையவன் அவனே ஆவான். ஒளிமயமான உடம்புடையவனும் அந்த எம்பெருமானே. மிகவும் ஆச்சரியமான வடிவை உடையவனும் அவனே. இத்தகைய இராமபிரான், ஒரு காதம் தூரத்தில் இரு புருவங்களையும் பெற்ற கும்பகர்ணன், அலறி விழும்படி அம்பெய்து கொன்றான். 2410

என்னை ஆண்டு அருளும் அரங்கநாதன், நான் உலக வாழ்வு என்னும் நாடக அரங்கில் புகாதபடி காத்திடுவான். என் நெஞ்சிலே அவன் நிற்கிறான். அமர்கிறான். ஆனபின் அவன் திருப்பாற்கடலில் ஆதிசேஷன் ஆகிய படுக்கையில் கிடப்பானோ? மாட்டான். 2411

முன்பு பிரமன் சிவனுக்கு இட்ட சாபத்தை உலகத்தவர் அறியும்படி நாராயணனே போக்கி அருளினான். இந்த நித்திய சூரிகள் தலைவனைத் துதிக்காத அறிவிலிகளே! பிறவிக்கு உறுப்பான கருக் குழியில் நீங்கள் அடையப் போகும் வியப்பான துன்பங்களைப் பேசப் புகுந்தால், அப்பேச்சு பாரதக் கதைபோல் விரியும். 2412

வேதம், இதிகாசம், புராணங்கள் எல்லாம் எம்பெருமான் கண்ணனின் தீர்ந்த எண்ண முடிவைப் பற்றி நிற்பன. பொழுதை ஒரு கணமும் வீணாக்காமல் எம்பெருமானின் கல்யாண குணங்களில் ஈடுபடுக. இல்லையாயின் அந்நேரம் பிறரைத் துன்புறுத்தவே ஆகும். ஆதலால், குற்றமற்ற எம்பெருமான் திருவடிகளை அடைய விழையுங்கள். 2413

கண்ணபிரான் தன் திருவடிகளால் சகடாசுரனை உதைத்தான். காளியனை ஆட்டினான். குவலயாபீடம் என்னும் யானையின் கொம்பை முறித்தான். பூதனைப் பேயின் நஞ்சை உண்டான். பவள வாயும் அழகிய தோளும் உடைய நப்பின்னையைப் பெறுவதற்காக பலமுடைய காளைகளின் கழுத்தை ஒடித்தான். பாற்கடல் திரும்பிய பிறகும் தன் திருவுள்ளத்தாலே அடியார்களின் விரோதிகளை அகற்றும் இறைவனாய் உள்ளான். 2414

அடியேனுக்கு நன்மை உண்டாக வேண்டும் என்று விரும்புகிறேன். ஆகவே திருக்கோட்டியூர்ப் பெருமானை துதிப்பதே அடியேன் நோக்க மாகும். என்றாலும் திருவேங்கடத்து எம் பெருமானை ஒதுக்கித் தள்ள மாட்டேன். உடற் காரணமாக வரும் கர்மங்களையும் நோய்களையும் போக்கி, என்னைக் காக்கும் அந்த எம்பெருமானின் திருவடிகளை மறப்பேனா! மாட்டேன். 2415

தாளால் உலகம் அளந்த அசைவேகொல்?
வாளா கிடந்தருளும் வாய்திறவான் - நீள் ஓதம்
வந்து அலைக்கும் மா மயிலை மா அல்லிக் கேணியான்,
ஐந்தலை வாய் நாகத்து அணை. 2416

நாகத்து அணைக் குடந்தை வெஃகா திரு எவ்வுள்;
நாகத்து அணை அரங்கம் பேர் அன்பில்;- நாகத்து
அணைப் பாற்கடல் கிடக்கும்; ஆதி நெடுமால்
அணைப்பார் கருத்தன் ஆவான். 2417

வான், உலவு தீ வளி மா கடல், மா பொருப்பு
தான் உலவு வெம் கதிரும் தண் மதியும்- மேல் நிலவு
கொண்டல், பெயரும் திசை எட்டும் சூழ்ச்சியும்
அண்டம் - திருமால் அகைப்பு. 2418

அகைப்பு இல் மனிசரை ஆறு சமயம்
புகைத்தான், பொரு கடல் நீர் வண்ணன்,- உகைக்குமேல்,
எத் தேவர் வாலாட்டும் எவ்வாறு செய்கையும்
அப்போது ஒழியும் - அழைப்பு. 2419

அழைப்பன் திருவேங்கடத்தானைக் காண;
இழைப்பன் திருக்கூடல், கூட - மழைப் பேர்
அருவி மணி வரன்றி வந்து இழிய யானை
வெருவி, அரவு ஒடுங்கும் வெற்பு. 2420

வெற்பு என்று வேங்கடம் பாடினேன்; வீடு ஆக்கி
நிற்கின்றேன்; நின்று நினைக்கின்றேன;- கற்கின்ற
நூல் வலையில் பட்டிருந்த நூலாட்டி கேள்வனார்
கால் வலையில் பட்டிருந்தேன் காண். 2421

காணல் உறுகின்றேன் - கல் அருவி முத்து உதிர,
ஓண விழவில் ஒலி அதிர,- பேணி
வரு வேங்கடவா! என் உள்ளம் புகுந்தாய்;
திருவேங்கடம் அதனைச் சென்று. 2422





எம்பெருமான் உலகங்களைத் தன் திருவடியால் அளந்த களைப்பு மேம்பட்டதால் பள்ளி கொண்டானோ? அலைகள் வீசும் மயிலையை அடுத்த திருவல்லிக் கேணிப் பெருமான் ஐந்து தலைகளையும் வாய்களையும் உடைய ஆதிசேஷன் மேல் அசையாமல் கிடக்கிறானே! வாய் திறந்து பேசவும் இல்லையே! **2416**

திருக்குடந்தை, திருவெஃகா, திருஎவ்வுளூர், திருவரங்கம் திருப்பேர்நகர், திருஅன்பில் ஆகிய திருப்பதிகளிலும் திருப்பாற்கடலிலும் உலக காரணன் ஆனதிருமால் அன்பர்கள் இதயத்தில் புகுவதற்காகப் பள்ளி கொண்டிருக்கிறான். **2417**

வானம்,பரவும் தீ, வீசும் காற்று, கடல், மலைகள் வெப்பமான சூரியன், குளிர்ந்த சந்திரன், உலகிலுள்ள ஆத்மாக்கள் எண் திசைகள், அண்டபித்தியில் உள்ள நீர் மண்டலம் அண்டங்கள் யாவும், திருமாலின் திருவுள்ளத்தால் உண்டான படைப்புகள் ஆகும். **2418**

அலை கடல் நிறம் கொண்ட திருமால் அறிவில்லாதவர்களைத் தாழ்ந்தவையான ஆறு புறச் சமயங்களின் புகையான வலையிலே அகப்படுத்தினான். எம்பெருமான் புறக்கணித்து விட்டால், தேவர்கள் தங்கள் அகங்காரத்தால் என்ன செய்ய முடியும்? அவர்களுக்குக் கிடைக்கும், வேள்விப் பயன் அவியுணவு ஆகியவைகள் கிடையா. **2419**

திருவேங்கடமுடையானைக் கண்ணால் பார்க்க, வாய்விட்டு அழைக்கிறேன். அம்மலையில், மழை காலத்தில் அருவிகள் மணிகளைத் தள்ளிக் கொண்டு விழும் பொழுது, அவற்றின் ஒலியைக் காணும் யானைகள் அஞ்சும். மலைப் பாம்புகள் அவற்றை மின்னல் என எண்ணிப் புற்றில் ஒடுங்கும். இம் மலையை அடையக் கூடல் இழைக்கிறேன். **2420**

மற்ற மலைகளைக் கூறும்பொழுது தான் திருவேங்கட மலையையும் பாடினேன். அதற்காக எம்பெருமான், வீடுபேறு தர நிற்கிறான் என்று உணர்கிறேன். என்னே என்பேறு! அவனோ, ஓதப்படும் வேத சாத்திர வலையில் கட்டுப்பட்டான். நானோ திருமகள் கேள்வனான அப்பெருமானின் திருவடிகளாகிற வலையில் அகப்பட்டேன். **2421**

திருவேங்கட மலையில் அருவி நீர் கொட்டும் பொழுது மணிகளும், முத்துகளும் சிதறி விழும் ஓசை கேட்கும். திருவோண விழாவில் பக்தர்களின் பல்லாண்டு பாடுவர் வேதஒலியும் கேட்கும். இங்கே எழுந்தருளிய வேங்கடவா! நீ என் உள்ளம் புகுந்து விட்டாய். ஆனாலும் நான் இந்தத் திருவேங்கடம் சென்று உன்னைச் சேவிக்க விரும்புகிறேன். **2422**

சென்று வணங்குமினோ, சேண் உயர் வேங்கடத்தை
நின்று வினை கெடுக்கும் நீர்மையால் - என்றும்
கடிக் கமல நான்முகனும் கண்மூன்றத்தானும்
அடிக் கமலம் இட்டு, ஏத்தும் அங்கு. 2423

மங்குல் தோய் சென்னி வட வேங்கடத்தானை,
கங்குல் புகுந்தார்கள், காப்பு அணிவான் - திங்கள்
சடை ஏற வைத்தானும் தாமரைமேலானும்
குடை ஏற, தாம் குவித்துக் கொண்டு. 2424

கொண்டு குடங்கால்மேல் வைத்த குழவியாய்,
தண்ட அரக்கன் தலை தாளால்- பண்டு எண்ணிப்
போம் குமரன் நிற்கும் பொழில் வேங்கடமலைக்கே
போம் குமரருள்ளீர்! - புரிந்து. 2425

புரிந்து மலர் இட்டுப் புண்டரீகப் பாதம்
பரிந்து படுகாடு நிற்ப,- தெரிந்து எங்கும்
தான் ஓங்கி நிற்கின்றான் தண் அருவி வேங்கடமே
வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பு. 2426

வைப்பன் மணி விளக்கா மா மதியை மாலுக்கு என்று
எப்பொழுதும் கை நீட்டும் யானையை,- எப்பாடும்
வேடு வளைக்கக் குறவர் வில் எடுக்கும் வேங்கடமே
நாடு வளைத்து ஆடுதுமேல் நன்று. 2427

நன்மணி வண்ணன் ஊர் ஆளியும் கோளரியும்
பொன், மணியும், முத்தமும், பூ மரமும், -பன்மணி நீ
ரோடு பொருது உருளும் கானமும், வானரமும்
வேடும் உடை வேங்கடம். 2428

வேங்கடமே - விண்ணோர் தொழுவதுவும் மெய்ம்மையால்;
வேங்கடமே - மெய் வினை நோய் தீர்ப்பதுவும்;- வேங்கடமே
தானவரை வீழத் தன் ஆழிப் படை தொட்டு,
வானவரைக் காப்பான் மலை. 2429





உயர்ந்த சிகரங்கள் உள்ள திருவேங்கட மலையைச் சென்று வணங்குங்கள். தன்னுடைய நீர்மைத் தன்மையால் அது நம் பாவங்களைப் போக்கும். அங்குள்ள எம்பெருமான் திருவடிகளில், தாமரையில் பிறந்த பிரமனும், மூன்று கண்கள் பெற்ற சிவனும் தாமரைப் பூக்களை இட்டுத் துதிப்பார்கள். **2423**

திருவேங்கட மலைச் சிகரங்கள் மேக மண்டலத்தைத் தொடும் அளவு உயர்ந்தன. மாலை வேளைகளில் திருவேங்கடமுடை யானுக்குத் திருவந்திக் காப்பு இடுவதற்காக சந்திரனைச் சடையில் வைத்த சிவனும், தாமரையில் பிறந்த பிரமனும், திருமுத்துக் குடை முதலிய வழிபாட்டுப் பொருள்களுடன் செல்வார்கள். **2424**

இளைஞர்களே! முன்பு திருமால் பிரமன் மடியில் குழந்தையாய் அமர்ந்து தண்டனை பெறத் தகுந்த இராவணனின் பத்துத் தலைகளையும் தன் திருவடியால் கீறி எண்ணிக் காட்டினான். குமரனாக அப்பெருமான் எழுந்தருளிய சோலைகள் சூழ்ந்த திருவேங்கட மலைக்கு ஆசையுடன் செல்லுங்கள். **2425**

நித்திய சூரிகள் வேங்கட மலைப் பெருமானின் திருவடித் தாமரைகளில் பக்தியுடன் பூக்களைப் பணிமாறித் துதித்து, வீழ்ந்த மரம் போலே கிடந்தபடி வணங்குவர். குணங்களால் பெருமை பெற்ற திருமால் ஓங்கி நிற்கும், அருவிகள் உடைய இத்திருவேங்கட மலையே நித்திய சூரிகளுக்கும், இவ்வுலகோர்க்கும் வைப்பு நிதி ஆகும். **2426**

திருவேங்கட முடையானுக்கு விளக்கு ஏற்றி வைக்க எண்ணும் யானை தன் துதிக்கையை உயரத் தூக்கிச் சந்திரனைப் பிடிக்க முயலும். வேடர்கள் இம் மலையில் வில் எடுத்து யானைகளை வளைந்து சூழ்வார்கள். நாட்டோர்கள் இங்கு வந்து இம் மலையைச் சுற்றி ஆடினால் மிகவும் நல்லது. வினைகள் போகும். **2427**

நீல மணி நிறத் திருமாலின் திருவேங்கடத்தில், காடுகளிலுள்ள அருவிகள் கொட்டும் பொழுது, பல்வகை மணிகள் கலந்து உருண்டோடும். இங்கே யாளிகள், வலிய சிங்கங்கள், பொன், மாணிக்கம், முத்து பூத்த மரங்கள் யாவும் உள்ளன.மேலும் குரங்குகளும் வேடுவர்களும் இங்கே அதிகம் காணப்படுவர். **2428**

நித்திய சூரிகள் உண்மையான பக்தியுடன் திருமாலைத் தொழும் தலம் திருவேங்கடமே. தீராத பாவங்களையும் உடல் நோய்களையும் போக்க வல்லது திருவேங்கடமே. அசுரர் அழிய, தன் சக்கரத்தை ஏந்தித் தேவர்களைக் காப்பவன் மலை இத் திருவேங்கடமே ஆகும். **2429**

மலை ஆமைமேல் வைத்து, வாசுகியைச் சுற்றி
தலை ஆமை தான் ஒரு கை பற்றி,- அலையாமல்,
பீறக் கடைந்த பெருமான் திரு நாமம்
கூறுவதே யாவர்க்கும் கூற்று. 2430

கூற்றமும் சாரா; கொடு வினையும் சாரா; தீ
மாற்றமும் சாராவகை அறிந்தேன் - ஆற்றங்
கரைக் கிடக்கும் கண்ணன், கடல் கிடக்கும் மாயன்,
உரைக் கிடக்கும் உள்ளத்து எனக்கு. 2431

எனக்கு ஆவார் ஆர் ஒருவரே? எம் பெருமான்
தனக்கு ஆவான் தானே மற்று அல்லால்,- புனக் காயா
வண்ணனே! உன்னைப் பிறர் அறியார்; என் மதிக்கு
விண் எல்லாம் உண்டோ விலை? 2432

விலைக்கு ஆட்படுவர், விசாதி ஏற்று உண்பர்,
தலைக்கு ஆட்பலி திரிவர் - தக்கோர்;- முலைக்கால்
விடம் உண்ட வேந்தனையே வேறா ஏத்தாதார்,
கடம் உண்டார், கல்லாதவர். 2433

கல்லாதவர் இலங்கை கட்டழித்த காகுத்தன்
அல்லால், ஒரு தெய்வம் யான் இலேன்;- பொல்லாத
தேவரை,தேவர் அல்லாரை திரு இல்லாத்
தேவரைத் தேறேல்மின்- தேவு. 2434

தேவராய் நிற்கும் அத் தேவும் அத் தேவரில்
மூவராய் நிற்கும் முது புணர்ப்பும்- யாவராய்
நிற்கின்றது எல்லாம் நெடுமால் என்று ஓராதார்
கற்கின்றது எல்லாம் கடை 2435

கடை நின்று அமரர் கழல் தொழுது நாளும்
இடை நின்ற இன்பத்தர் ஆவர் - புடைநின்ற
நீர் ஓத மேனி நெடுமாலே! நின் அடியை
யார் ஓத வல்லார் அவர்? 2436





எம்பெருமான் ஆமையாகி, மந்தரமலையைத் தன் மேல் வைத்துக் கொண்டு, வாசுகிப் பாம்பைக் கயிறாகச் சுற்றி, மலை உச்சியைத் தன் ஒருகையால் பற்றி, நீர் வெளியே புரளாதபடி அமுதம் வெளிப்படுமாறு பாற்கடலைக் கடைந்தான். இவன் திருநாமங்களை வாய்விட்டுக் கூறுவதே யாவர்க்கும பேச்சாக அமைய வேண்டும். 2430

பாற்கடலில் பள்ளி கொண்ட திருமாலான மாயன் காவேரிக் கரையில், திருக்கபித்தலத்தில் திருக்கண் வளர்ந்தான். இக் கண்ணன் அருளிய கீதையின் சரமசுலோகமே என் நெஞ்சில் பதிந்துள்ளது. ஆதலால் யமபயம் அணுகாமைக்கும், பாவங்கள் சேராமைக்கும், கெட்ட பெயர் வராதபடிக்கும், உள்ள உபாயத்தை அறிந்தேன். 2431

புனத்துக் காயாம்பூவின் நிறமுடைய பெருமானே! என்னைக் காப்பாற்ற நீ ஒருவனே இருக்கும் பொழுது எனக்கு ஒப்பாவார் யாருமில்லை. நீயும் உனக்கு ஒப்பாக ஒருவரும் இல்லாத தனித் தன்மை இறைவன். மற்று, என்னைத் தவிர பிறர் உன்னை அறியார். உன்னை அறிந்த என் புத்திக்குப் பரமபதமும் ஒப்பு ஆகாது. 2432

தாழ்ந்தவர்கள் தங்கள் வாழ்விற்காகப் பிறர்க்கு அடிமை ஆகிறார்கள். வியாதிகளைத் தாங்களே வருவித்துக் கொள்கிறார்கள். ஒருவன் தலைக்காகத் தம் தலையப் பலி இடத் தயார் ஆகிறார்கள். பூதனை முலைக் காலின் நஞ்சை உண்ட கண்ணனைத் துதிக்காத வர்களாய், அறிவு கெட்டுப் பாவங்களுக்கு ஆட்படுகிறார்களே! 2433

அறிவில்லாத அரக்கரின் இலங்கையை அழித்த இராமனை அன்றி வேறு ஒரு தெய்வத்தை நான் வழிபடேன். தாழ்ந்த தேவதைகளையும், தெய்வத் தன்மை அற்றவர்களையும், திருமகள் தொடர்பில்லாமல் தெய்வம் என்று பெயரளவுக்கு உள்ள தேவதைகளையும், நீங்கள் நினைக்காதீர்கள். 2434

ஸ்ரீமந் நாராயணனே,சூரியன், இந்திரன், முதலானவர் நடுவே விஷ்ணுவாகத் தோன்றினார். மும்மூர்த்திகளாய் ஆனதில் முதல் அவதாரம் இவனே. மற்றும் அறிவுடைய ஆத்மாக்களாலும் அறிவற்ற பொருள்களாவும் ஆனவன்,இந்தத் திருமாலே ஆவான். இவ்வுண்மையை ஆராய்ந்துணராதார் கற்ற கல்வி மிகத் தாழ்ந்தது. 2435

சிலர், தாழ்ந்த தேவர்களின் வாசலில் நின்று, நாளும் அவர்கள் கால்களில் விழுந்து சுவர்க்கப் பேறாகிய இடைப்பட்ட இன்பத்தை பெறுகிறார்கள். கடல்நிறப் பெருமானே! உன் திருவடிகளைத் துதித்து வணங்க வல்லவர் இல்லையா? 2436

அவர் இவர் என்று இல்லை; அனங்கவேள் தாதைக்கு
எவரும் எதிர் இல்லை கண்டீர்:- உவரிக்
கடல் நஞ்சம் உண்டான், கடன் என்று வாணற்கு
உடன் நின்று தோற்றான் ஒருங்கு. 2437

ஒருங்கு இருந்த நல்வினையும் தீவினையும் ஆவான்,
பெரும் குருந்தம் சாய்த்தவனே, பேசில்;- மருங்கு இருந்த
வானவர் தாம் தானவர் தாம் தாரகை தான், என் நெஞ்சம்
ஆனவர் தாம் அல்லாதது என்? 2438

என் நெஞ்சம் மேயான், இருள் நீக்கி எம்பிரான்,
மன் அஞ்ச,முன் ஒரு நாள் மண் அளந்தான்;- என் நெஞ்சம்
மேயானை இல்லா விடை ஏற்றான் வெவ்வினை தீர்த்து
ஆயானுக்கு ஆக்கினேன் அன்பு. 2439

அன்பு ஆவாய்,ஆர் அமுதம் ஆவாய் அடியேனுக்கு
இன்பு ஆவாய், எல்லாமும் நீ ஆவாய்;-பொன் பாவை
கேள்வா! கிளர் ஒளி என் கேசவனே! கேடு இன்றி
ஆள்வாய்க்கு அடியேன் நான் - ஆள். 2440

ஆட் பார்த்து உழிதருவாய்! கண்டுகொள் என்றும் நின்
தாட்பார்த்து உழிதருவேன் தன்மையை;-கேட்பார்க்கு
அரும் பொருளாய் நின்ற அரங்கனே! உன்னை
விரும்புவதே விள்ளேன் மனம். 2441

மனக் கேதம் சாரா - மதுசூதுன் தன்னைத்
தனக்கே தான் தஞ்சமாக் கொள்ளில்; -எனக்கே தான்
இன்று - ஒன்றி நின்று உலகை ஏழ் ஆணை ஓட்டினான்
சென்று ஒன்றி நின்ற திரு. 2442

திரு நின்ற பக்கம் திறவிது என்று ஓரார்
கரு நின்ற கல்லார்க்கு உரைப்பர் - திரு இருந்த
மார்பில் சிரீதரன் தன் வண்டு உலவு தண் துழாய்த்
தார் தன்னைச் சூடித் தரித்து. 2443





ஞானத்தில் உயர்ந்தோர், ஞானத்தில் தாழ்ந்தோர் என்னும் வாசி இல்லாமல், யாருமே மன்மதனின் தந்தையான கண்ணபிரானுக்கு எதிர் நிற்க வல்லவர் இல்லை. உப்புக கடலில் தோன்றின நஞ்சை உண்ட சிவன் பாணாசுரனிடம் 'உன்னைக் காப்பது என் கடமை' என்று கூறி உடன் நின்று சண்டை செய்து திருமாலிடம் தோற்று ஓடினான். 2437

உண்மை பேசில், பெரிய குருந்த மரத்தைச் சாய்த்த கண்ணனே ஆத்மாவுடன் கூடியுள்ள புண்ணிய பாவங்களை ஆள்பவன். அவனே என் அருகில் உள்ளான். தேவர்கள், அசுரர்கள், உலகம், என் நெஞ்சம் ஆகியவற்றில் உள்ளான். அந்த எம்பெருமான் இல்லாத பொருள் எதுவும் இல்லை. 2438

எம்பெருமான் என்நெஞ்சில் வாழ்கிறான். அறியாமை இருளைப் போக்குபவன் அவனே. அரசர்கள் யாவரும் அஞ்சும்படி முன்பு, பூமியை அளந்து கொண்டான். உலகளந்த கோலத்துடன் என் இதயத்தில் உள்ளான். இப்பெருமானைத் தன் நெஞ்சில் கொள்ளாத காளை வாகனம் உடைய சிவனின் சாபத்தைத் தீர்த்துத் தன் நீர்மையைக் காட்டினான். இப்பெருமானிடம் நான் அன்பு கொண்டேன். 2439

அன்பே வடிவானவனே! இனிய அமுதம் போன்றவனே! அடியேனுக்குஉன்னுடைய அனுபவ இன்பத்தை தந்தவனே! எல்லா நன்மைகளும் நீயே ஆவாய். திருமகள் கேள்வனே! கிளரும் ஒளிமயமான கேசவப் பிரானே! அடியேன் ஒருகுறையும் இல்லாமல் உனக்கு அடிமைச் செய்யப் பெற்றேன். 2440

சுயமுயற்சியால் கேட்டு அறிய விரும்புவர்க்கு அறிய முடியாத பரம்பொருளான அரங்க நாதனே! ஆட்படும் அடியாரைத் தேடித் திரிபவனே! உன் திருவடிகளைக் கண்டு வழிபடுவதற்குத் திரியும் அடியேனுக்கு, அடிமைத் திறம் என்றும் நிலைக்க நீயே அருள் செய்ய வேண்டும். உன்னையே விரும்புவதை நெஞ்சில் தவிரேன். 2441

மது என்னும் அசுரனை அழித்த திருமாலே தனக்கு அடைக்கலம் என்று கொள்பவனுக்கு மனத் துன்பங்கள் வாரா. ஏழுலகங்களிலும் தன் ஆட்சியையும் ஆணையையும் செலுத்தும் எம்பெருமான் இன்று தானே வந்து என்னிடம் பொருந்தினான். இந்தச் செல்வம் என்னைத் தவிர வேறு யாருக்கும் இல்லை. 2442

திருமகள் தங்கிய மார்புடைய சிரீதரனின் வண்டுலாவும் திருத்துழாய் மாலையைச் சூடி வாழ்ச்சி பெறுபவர், பிராட்டியுடன் கூடிய நாராயணனே பரம் பொருள் என்று நிச்சயித்து விடுவார்கள். இவ்வாறு தெளிய முடியாதவர் தங்களைப் போலவே கருப்பை வாழ்வுடைய பிரமன், சிவன் முதலியவரைத் தெய்வங்கள் என்று கல்லாதவர்களுக்கு உபதேசம் செய்வார்கள். 2443

தரித்திருந்தேன், ஆகவே தாராகணப் போர்
விரித்து உரைத்த வெம் நாகத்து உன்னைத்- தெரித்து எழுதி
வாசித்தும், கேட்டும், வணங்கி வழிபட்டும்;
பூசித்தும் போக்கினேன் போது. 2444

போதான இட்டு இறைஞ்சி ஏத்துமினோ பொன் மகரக்
காதானை, ஆதிப் பெருமானை,- நாதானை,
நல்லானை, நாரணனை நம் ஏழ் பிறப்பு அறுக்கும்
சொல்லானை சொல்லுவதே சூது. 2445

சூது ஆவது என் நெஞ்சத்து எண்ணினேன்; சொல் மாலை
மாது ஆய மாலவனை, மாதவனை, -யாதானும்
வல்லவா சிந்தித்திருப்பேற்கு, வைகுந்தத்து
இல்லையோ, சொல்லீர் இடம்? 2446

இடம் ஆவது என் நெஞ்சம் இன்றெல்லாம் பண்டு
பட நாகணை நெடிய மாற்கு;- திடமாக
வையேன் மதிசூடி தன்னோடு அயனை; நான்
வையேன் ஆட்செய்யேன் வலம். 2447

வலம் ஆக மாட்டாமை தான் ஆக, வைகல்
குலம் ஆக குற்றம் தான் ஆக-நலம் ஆக
நாரணனை, நம் பதியை ஞானப் பெருமானை,
சீரணனை ஏத்தும் திறம். 2448

திறம்பேன்மின் கண்டீர்; திருவடி தன் நாமம்
மறந்தும் புறம் தொழா மாந்தர்- இறைஞ்சியும்
சாதுவராய்ப் போதுமின்கள் என்றான் நமனும் - தன்
தூதுவரைக் கூவிச் செவிக்கு. 2449

செவிக்கு இன்பம் ஆவதுவும் செங்கண் மால் நாமம்;
புவிக்கும் புவி அதுவே கண்டீர்:- கவிக்கு
நிறை பொருளாய் நின்றானை நேர்பட்டேன்; பார்க்கில்
மறைப் பொருளும் அத்தனையேதான். 2450





பகைவர்களுக்கு வெம்மையான ஆதிசேஷன், விண்மீன்களின் போக்கை விவரித்து உரைக்கும் ஜோதிட சாத்திரத்தை வெளியிட்டான். இத் திருவனந்தாழ்வானுக்கு உள்ளே வாழ்ந்து நியமிக்கும் பெருமானான உன்னை அடியேன் பயின்றும், எழுதியும், படித்தும், கேட்டும், வணங்கி வழிபட்டும், பூஜை செய்தும் காலத்தை கழிக்கிறேன். ஆதலால் அடியேன் வாழ்ச்சி பெற்றேன். **2444**

மகர குண்டலங்களை, காதில் அணிந்த உலக காரணன் ஆகிய எம் பெருமான் அடியாரிடம் அன்புடைய நாராயணன் ஆவான். நம்முடைய பிறவிகளை அறுக்கும் எம்பெருமானின் திருநாமங்களைக் கூறி மலர் இட்டு வணங்கித் துதியுங்கள். அவ்வாறு திருநாமங்களை வாயாரக் கூறித் துதிப்பதே நமக்கு ஏற்றது. **2445**

அழகே வடிவான மாதவன் ஆன திருமாலைப் பற்றிய இச்சொல் மாலையை எப்படியாயினும் ஓயாமல் பயிலும் எனக்கு, ஸ்ரீவைகுண்டத்தில் இடம் இல்லையோ? சொல்லுங்கள். இதுவே நமக்கு உற்றதான தகுதி என்று என் மனத்தில் உறுதி பெற்றேன். **2446**

என்னை ஏற்பதற்கு முன்பு எம் பெருமான் படங்களுடைய ஆதிசேஷன் மீது பள்ளி கொண்டிருந்தான். ஆனால் இன்று முதல் வருங்காலம் எல்லாம் அவன் இருப்பிடம் என் நெஞ்சமே ஆகும். நான் சந்திரனைச் சூடிய சிவனையும், பிரமனையும் பரம்பொருளாகக் கொள்ளேன். நுட்பமான ஞானமுடைய நான் அவர்களுக்கு ஆட்படேன். **2447**

என் நாவுக்குத் தலைவனாய் நற் குணங்கள் உடைய ஞானப் பிரான், நாராயணனைத் தினமும் நான் நன்கு துதி செய்வது பலன் கொடுத்தாலும் சரி; பலன் தரவில்லையாயினும் சரி, குலத்தைத் தந்தாலும் குற்றமே தான் ஆனாலும் துதிப்பதைக் கைவிடேன். **2448**

யமன் தன் பணியாள்களை அழைத்து அவர்கள் செவியில் "தூதர்களே! என் ஆணையைத் தவற வேண்டாம். திருமால் திருநாமத்தை மறந்து விட்டாலும் மற்ற தெய்வங்களை வழிபடாதவரைக் கண்டால், நீங்கள் வணங்கி அவர்களை விட்டு விடுங்கள். கொடுமையைத் தவிர்த்துக் சாதுக்களாய் விலகுங்கள்" என்று கூறினான். **2449**

காதுகளுக்கு இன்பம் தருவது செந்தாமரைக் கண்ணன் திருநாமமே. நாம் ஒதுங்குவதற்கு இடமும் அதுவே. கவிதைக்கு முழுப் பொருளாய் இருக்கும் அவனை நான் என் முயற்சி இன்றி அவன் அருளால் அடைந்தேன். ஆராய்ந்து பார்த்தால் வேதங்களின் தேர்ந்த பொருளும் அவ்வளவே. **2450**

தான் ஒருவன் ஆகி, தரணி இடந்து எடுத்து,
ஏன் ஒருவனாய், எயிற்றில் தாங்கியதும்- யான் ஒருவன்
இன்றா அறிகின்றேன் அல்லேன் இரு நிலத்தைச்
சென்று ஆங்கு அடிப்படுத்த சேய். 2451

சேயன், அணியன், சிறியன் மிகப் பெரியன்,
ஆயன், துவரைக் கோனாய் நின்ற- மாயன், அன்று
ஓதிய வாக்கு அதனைக் கல்லார் உலகத்தில்
ஏதிலர் ஆய், மெய்ஞ் ஞானம் இல். 2452

இல்லறம் இல்லேல் துறவறம் இல் என்னும்
சொல், அறம் அல்லனவும் சொல் அல்ல;- நல்லறம்
ஆவனவும் நால் வேத மாத் தவமும் நாரணனே
ஆவது: ஈது அன்று என்பார் ஆர்? 2453

ஆரே அறிவார்- அனைத்து உலகும் உண்டு உமிழ்ந்த
பேர் ஆழியான் தன் பெருமையை? கார்- செறிந்த
கண்டத்தான், எண் கண்ணான் காணான் அவன் வைத்த
பண்டைத் தானத்தின் பதி. 2454

பதிப் பகைஞற்கு ஆற்றாது பாய் திரை நீர்ப் பாழி
மதித்து அடைந்த வாள் அரவம் - தன்னை- மதித்து அவன் தன்
வல் ஆகத்து ஏற்றிய மா மேனி மாயவனை
அல்லாது ஒன்று ஏத்தாது என் நா. 2455

நாக் கொண்டு மானிடம் பாடேன் நலம் ஆக,
தீக் கொண்ட செஞ்சடையான் சென்று என்றும்- பூக் கொண்டு
வல்லவாறு ஏத்த, மகிழாத வைகுந்தச்
செல்வனார் சேவடிமேல் பாட்டு. 2456

பாட்டும், முறையும், படு கதையும் பல் பொருளும்,
ஈட்டிய தீயும் இரு விசும்பும்- கேட்ட
மனுவும் சுருதி மறை நான்கும், மாயன்
தன மாயையில் பட்ட தற்பு. 2457





*ஒப்பற்றவனான திருமால், சிறுபிள்ளையாய் மாவலியிடம் சென்று அகன்ற பூமியை அளந்து கொண்டான். அவனே வராக வடிவம் கொண்டு பூமியைக் குத்தி எடுத்துத் தன் கோரைப் பல்லின் மீது தாங்கினான். இவற்றை இன்று வரை அறிந்தவன், நான் ஒருவன் மட்டும் அல்ல. பலரும் பலநாளாகவே அறிவர்.* **2451**

*எம்பெருமான் வாக்கிற்கும் மனத்துக்கும் எட்டாத தொலைவில் உள்ளவன். ஆயினும் அவனே உலகில் தாழ்ந்தவனாய் அவதரித்து அடியார்க்கு எளியவன் ஆகிறான். இடைப்பிள்ளை யாயும், துவாரகை அரசனாகவும் இருந்த மாயன் கண்ணன் அருளிய சரம சுலோகக் கருத்தைக் கற்காதவர்கள், மெய்யுணர்வு அற்றவராய் இறைவனின் பகைவர் ஆவார்.* **2452**

*இல்லறமாகிய கர்மயோகமே உபாயம் என்பது ஏற்புடைய தல்ல. துறவறத்தைக் குறிக்கும் ஞானயோகமும் உபாயம் அல்ல. அன்றி, பக்தியோகம், நாமம் கூறல் ஆகிய உபாயங்களும் தஞ்சம் அல்ல. ஆனால் எல்லா தர்மங்களாலும் அடையப் பெறும் பாவ விடுதலை, நாராயணன் அருளாலேயே உண்டாகிறது. இவ் வுண்மையை இல்லை என்பார் உண்டோ?* **2453**

*எல்லா உலகங்களையும் உண்டு உமிழ்ந்த கடல்வண்ணன் பெருமையை யார் அறிவார்? அப்பெருமான் கூறி வைத்த பழைய, உபாயத்தின் வெளியீடான சரமசுலோகப் பொருளை நீலகண்டனான சிவனும் நான்முகனும் அறிவார்கள்.* **2454**

*தன் எதிரியான கருடனுக்குப் பயந்த சுமுகன் என்னும் ஒளிப் பாம்பு, பாற்கடல் திருமாலைப் புகலிடமாக எண்ணி வந்ததும் பெருமான் அப்பாம்பைக் கருடன் உடலில் ஏறவிட்டு அருள் செய்தான். இந்த மாயவனை அன்றி என் நா வேறு எவரையும் துதிக்காது.* **2455**

*தீ போல் சிவந்த சடை பெற்ற சிவன், என்றும் பூக்களாலே வழிபட்டுத் துதிக்கும் பெருமை உடைய வைகுந்த நாதனின் திருவடிகளுக்கு உரிய பாசுரங்களை அன்றி என் நாவால் மனிதர்களைப் பற்றிப் பாட மாட்டேன்.* **2456**

*இயல், இசை, இதிகாசங்கள், பல்பொருள்களுள்ள புராணங்கள், நெருப்பு, வானம், மனுநீதி, உபநிடதம், நான்கு வேதங்கள் ஆகிய இவை எல்லாம் மாயனான எம்பெருமானின் எண்ண மாத்திரத்தாலேயே ஏற்பட்ட உடைமைகள் ஆகும்.* **2457**

தற்பு என்னைத் தான் அறியானேலும் தடங் கடலைக்
கல் கொண்டு தூர்த்த கடல் வண்ணன், -எற் கொண்ட
வெவ்வினையும் நீங்க விலங்கா மனம் வைத்தான்
எவ் வினையும் மாயுமால் கண்டு. 2458

கண்டு வணங்கினார்க்கு என்னாம்கொல் காமன் உடல்
கொண்ட தவத்தாற்கு உமை உணர்த்த -வண்டு அலம்பும்
தார் அலங்கல் நீள் முடியான் தன் பெயரே கேட்டிருந்து அங்கு
ஆர் அலங்கல் ஆனமையால் ஆய்ந்து? 2459

ஆய்ந்து கொண்டு ஆதிப் பெருமானை, அன்பினால்,
வாய்ந்த மனத்து இருத்த வல்லார்கள்- ஏய்ந்த தம்
மெய் குந்தம் ஆக விரும்புவரே தாமும் தம்
வைகுந்தம் காண்பார் விரைந்து. 2460

விரைந்து அடைமின் - மேல் ஒரு நாள் வெள்ளம் பரக்க,
கரந்து உலகம் காத்து அளித்த கண்ணன்;- பரந்து உலகம்
பாடின ஆடின கேட்டு படு நரகம்
வீடின - வாசற் கதவு. 2461

கதவு மனம் என்றும் காணலாம் என்றும்,
குதையும் வினை ஆவி தீர்ந்தேன்;- விதை ஆக
நல் தமிழை வித்தி என் உள்ளத்தை நீ விளைத்தாய்
கற்ற மொழி ஆகிக் கலந்து. 2462

கலந்தான் என் உள்ளத்து காம வேள் தாதை;
நலம் தானும் ஈது ஒப்பது உண்டே?- அலர்ந்தலர்கள்
இட்டு ஏத்தும் ஈசனும் நான்முகனும் என்றிவர்கள்
விட்டு ஏத்த மாட்டாத வேந்து. 2463

வேந்தர் ஆய், விண்ணவர் ஆய், விண் ஆகி, தண்ணளி ஆய்,
மாந்தர் ஆய், மாது ஆய்,மற்று எல்லாம் ஆய்,- சார்ந்தவர்க்குத்
தன்ஆற்றான் நேமியான், மால் வண்ணன் தான் கொடுக்கும்
பின்னால் - தான் செய்யும் பிதிர். 2464





*அகன்ற கடலை மலைகளால் தூர்த்து, அணை கட்டிய கடல் வண்ணன், என்னை உள்ளபடியே அறியாவிடினும் என்னைக் கொண்ட கொடிய பாவங்கள் நீங்கும் படி அருள் செய்து, என் மனம் விட்டு விலகாதபடி நின்றான். ஆகையால் எல்லாப் பாவங்களும் நீங்கும்.* **2458**

*மன்மதன் உடலைச் சாம்பலாக்கிய தவமுடைய சிவனுக்கு, உமை திருமால் பெருமைகளை உணர்த்தினாள். வண்டு தங்கும் திருத்துழாய் மாலை உடைய பெருமானின் பெருமைகளைக் கேட்ட அவன் மனம் உருகி உடல் தளர்ந்தான். கேட்டவன் நிலையே இதுவானால் பெருமானைக் காண்பவர் எப்படித்தான் உருகுவார்களோ?* **2459**

*உலகத்துக்குக் காரணமான எம்பெருமானை அன்பினால் தம் நெஞ்சில் இருத்திக் கொண்டு துதிக்க வல்லவர்கள் தமக்கென்று உள்ள வைகுந்தம் சீக்கிரம் அடைய விரும்புவர். அவ்விருப்பத்தால் தம் உடம்பை வியாதியாகவே எண்ணுவர்.* **2460**

*அடியார்கள் பரந்து ஆடிப்பாடிய திருநாமங்களைக் கேட்டதால், நரக வாசல் கதவுகள் விழுந்தன. மேனாளில், பிரளய வெள்ளம் உலகங்களைக் கவர்ந்த பொழுது, அவற்றை வயிற்றில் வைத்து காத்த கண்ணபிரானைப் பணியுங்கள்.* **2461**

*எம்பெருமானே! நான் கற்ற தமிழ்மொழியின் பொருளாக உள்ள நீ என்னுடன் கலந்து நெஞ்சில் இப்பிரபந்தமாகிய பயிர் விளையச் செய்தாய். ஆகவே, மனமே தடை என்றும், மனமே துணை என்னும் இருவகைக் குழப்பங்கள் இல்லாதபடி, அது ஒருநிலைப் பட்டுவிட்டது.* **2462**

*மன்மதன் தந்தையான திருமாலைப் பிரமனும் சிவனும் பூக்களை இட்டு வழிபட்டுத் துதிக்கின்றனர். இந்த தேவாதி தேவன் என் நெஞ்சில் கலந்தான். இந்த நன்மையை ஒத்த வேறு நன்மைகள் உண்டோ? இல்லை.* **2463**

*சக்கரத்தை ஏந்திய அன்பே வடிவான திருமால், அவனை அடைந்தவர்க்கு அரசன் ஆவான். தேவர்களும் சுவர்க்கமும் அவனே. மனிதர்களுக்கு உறவாய், தாய், தந்தை செய்யும் நன்மைகளைப் புரியும் அருளாளன். இவ்வாறு அருள் செய்வதில் திருப்தி அடையாமல் தானே சிறப்பான வீட்டையும் தருவான்.* **2464**

பிதிரும் மனம் இலேன்; பிஞ்ஞகன் தன்னோடு
எதிர்வன; அவன் எனக்கு நேரான்;- அதிரும்
கழற் கால மன்னனையே கண்ணனையே நாளும்
தொழக் காதல் பூண்டேன், தொழில். 2465

தொழில் எனக்குத் தொல்லை மால் தன் நாமம் ஏத்த;
பொழுது எனக்கு மற்று அதுவே போதும்;- கழி சினத்த
வல்லாளன், வானரக் கோன், வாலி மதன் அழித்த
வில்லாளன், நெஞ்சத்து உளன். 2466

உளன் கண்டாய்; நல் நெஞ்சே! உத்தமன் என்றும்
உளன் கண்டாய்; உள்ளுவார் உள்ளத்து- உளன் கண்டாய்;
தன் ஒப்பான் தான் ஆய் உளன் காண் தமியேற்கும்
என் ஒப்பார்க்கு ஈசன் இமை. 2467

இமயப் பெரு மலை போல் இந்திரனார்ககு இட்ட
சமய விருந்து உண்டு ஆர் காப்பார்- சமயங்கள்
கண்டான், அவை காப்பான் கார்க்கண்டன் நான்முகனோடு
உண்டான் உலகோடு உயிர்? 2468

உயிர் கொண்டு உடல் ஒழிய, ஓடும்போது ஓடி
அயர்வு என்ற தீர்ப்பான் பேர் பாடி- செயல் தீரச்
சிந்தித்து வாழ்வாரே வாழ்வார் : சிறு சமயப்
பந்தனையார் வாழ்வேல், பழுது. 2469

பழுது ஆகாது ஒன்று அறிந்தேன்: பாற்கடலான் பாதம்
வழுவாவகை நினைந்து, வைகல்- தொழுவாரைக்
கண்டு இறைஞ்சி வாழ்வார் கலந்த வினை கெடுத்து
விண் திறந்து வீற்றிருப்பார், மிக்கு. 2470

வீற்றிருந்து விண் ஆள வேண்டுவார் வேங்கடத்தான்
பால் திருந்த வைத்தாரே பல் மலர்கள்;- மேல் திருந்தி
வாழ்வார் வரு மதி பார்த்து, அன்பினராய் மற்று அவற்க்கே
தாழ்வாய் இருப்பார் தமர். 2471





வீரக் கழல் அணிந்த மன்னன் ஆன கண்ணபிரானையே எந்நாளும் வழிபட்டு வணங்குவதே அடியேன் தொழில் ஆகும். பக்தி கொண்ட என் நெஞ்சில் இதில் குழப்பம் எதுவும் இல்லை. சில நேரங்களில் தன்னையே இறைவனாக எண்ணும் சிவன், ஞானத்தில் எனக்கு ஒப்பு ஆனாலும், முற்றிலும் தாசனான எனக்கு ஒப்பு ஆகான். 2465

கோபமும் வலிமையும் கொண்ட, குரங்குகள் வேந்தனான, வாலியின் மதத்தை அழித்த வில்லாளன் இராமன் என் நெஞ்சில் உள்ளான். ஆகவே என் தொழில், முழு முதல்வனான திருமால் நாமங்களைத் துதிப்பதே. அது என் பொழுது போக்காகும். 2466

நல்லநெஞ்சே! புருஷோத்தமன் ஆன திருமால் நம்மைக் காக்க எக்காலத்திலும் நிலை நிற்கிறான். அவனை எண்ண விழைவார் நெஞ்சில் நித்தியவாசம் செய்கிறான். தனக்கு நிகராக வேறு யாரு மில்லாத அந்த எம் பெருமான் கைம் முதல் இல்லா அடியேனுக்கும் என்னைப் போன்றவர்க்கும் தானே காவலன் ஆவான். 2467

இந்திரனுக்கு என்று தயாரித்த, இமயமலை அளவான உணவை, எம் பெருமான் கண்ணனாக உண்டான். அதனால் ஏற்பட்ட மழையிலிருந்து ஆயர்களைக் காப்பாற்றியவன் யார்? அவனே அன்றோ; வேதங்களைக் கண்டவன் யார்? அவற்றைக் காப்பவன் யார்? சிவன், பிரமன், இருவரையும் உலகத்து உயிர்களுடன் காப்பவன் யார்? எல்லாம் திருமாலே அன்றோ! 2468

உடலை விட்டு உயிர் நீங்கி, ஆத்மா ஓடும் பொழுது அதன் துன்பத்தை நீக்குபவன் எம் பெருமானே! அவன் திருநாமங்களைப் பாடி, நமது பாக்கியத்தையும் அடிமைப்பட்ட இயல்பையும் உணர்ந்து வாழ்வதே வாழ்வாகும். சிறியவையான கட்டுபாட்டு உபாயங்களைப் பற்றும் வாழ்வோ பழுதே ஆகும். 2469

வீணாகாத சிறந்த உபாயம் தெரிந்து கொண்டேன். பாற்கடல் நாதனின் பாதங்களைத் தவறாதபடி பற்றி வழிபடு வோரைக் கண்டு அவரை வணங்குவதே உய்வுக்கு வழி. அத்தகைய பாகவத அடியார்கள், ஆத்மாவுடன் இணைந்த தீவினைகளைத் தொலைத்துப் பரமபதவாசலைத் திறந்து உட்சென்று வீற்றிருப்பார்கள். 2470

இவ்வுலகின் நல் வாழ்வுக்குப்பின், பரமபதம் சென்று ஆள விரும்புவர் திருவேங்கடமுடையானை வழிபட்டு மலர்கள் இட்டு வணங்கியவரே ஆவார். அவர்களை விடவும், எம்பெருமான் விருப்பத்துக்கு ஏற்ப, அவனைப் பக்தியுடன் வணங்கும் அடியார்களுக்கு அடியார்கள் ஆகுபவரே மேலான வாழ்ச்சி பெறுவார்கள். 2471

தமர் ஆவார் யாவர்க்கும் தாமரைமேலாற்கும்
அமரர்க்கும் ஆடு அரவு ஆர்த்தாற்கும் அமரர்கள்:
தாள் தாமரை மலர்கள் இட்டு இறைஞ்சி மால் வண்ணன்
தாள் தாமரை அடைவோம் என்று. 2472

என்றும் மறந்தறியேன் என் நெஞ்சத்தே வைத்து
நின்றும் இருந்தும் நெடுமாலை,- என்றும்
திரு இருந்த மார்பன் சிரீதரனுக்கு ஆளாய்,
கரு இருந்த நாள் முதலாக் காப்பு. 2473

காப்பு மறந்தறியேன்; கண்ணனே என்று இருப்பன்;
ஆப்பு அங்கு ஒழியவும் பல் உயிர்க்கும்- ஆக்கை
கொடுத்து அளித்த கோனே! குணப்பரனே! உன்னை
விடத் துணியார் மெய் தெளிந்தார் தாம் 2474

மெய் தெளிந்தார் என் செய்யார்? வேறு ஆனார் நீறு ஆக,
கை தெளிந்து காட்டிக் களப்படுத்து- பை தெளிந்த
பாம்பின் அணையாய்! அருளாய் அடியேற்கு
வேம்பும் கறி ஆகும் என்று. 2475

ஏன்றேன் அடிமை; இழிந்தேன் பிறப்பு இடும்பை;
ஆன்றேன் அமரர்க்கும் அமராமை;- ஆன்றேன்
கடன் நாடும் மண் நாடும் கை விட்டு மேலை
இடம் நாடு காண. இனி. 2476

இனி அறிந்தேன் ஈசற்கும் நான்முகற்கும் தெய்வம்;
இனி அறிந்தேன் எம் பெருமான்! உன்னை- இனி அறிந்தேன்:
காரணன் நீ; கற்றவை நீ; கற்பவை நீ; நல் கிரிசை
நாரணன் நீ நன்கு அறிந்தேன் நான். 2477

**நான்முகன் திருவந்தாதி முற்றிற்று.**





கரியவனான திருமால் திருவடித் தாமரைகளில் பூக்களை இட்டு வணங்கி, அவற்றையே முடிவு பேறாகக் கொள்ளும் பரம பக்தர்கள், தாமரையில் பிறந்த பிரமனுக்கும், ஆடும் பாம்புகளை உடலில் பிணித்துக் கொண்டுள்ள சிவனுக்கும், நித்தியசூரிகள் முதலோர்க்கும் தெய்வங்கள ஆவர். **2472**

கருக்குழியில் இருந்த நாள் முதலாக அடியேன் திருமகள் தங்கும் மார்புடைய எம்பெருமானால் காக்கப்பட்டேன். அந்த நெடுமாலுக்கு அடிமைப்பட்டு என் இதயத்தில் அவனை வைக்கப் பெற்றேன். நிற்பது, இருப்பது, தொடக்கமான எல்லா என் நிலைகளிலும் அவனையே நினைத்து வணங்குகிறேன். **2473**

பிரளயத்தில் எல்லா ஆத்மாக்களுக்கும், புலன்கள் தொடர்பான வடிவம் இல்லாத போது, வேண்டிய உடல்களை அளித்து அருளும் எம்பிரானே! நீ எனக்குச் செய்யும் காப்பை மறக்கவே மாட்டேன். வழியும், முடிவும் கண்ணனான நீ மட்டுமே என்னும் உறுதி உடையவன் நான். பரமபுருஷனே! உள்ளபடி உன் இறை இயல்பைத் தெரிந்தவர்கள் உன்னை விடவே மாட்டார். **2474**

படங்களுடைய ஆதிசேஷன் மீது பள்ளி கொண்டவனே! அடியார்களுக்காக உன்னை எதிர்த்த பகைவர் சாம்பலாகும்படி பாரதப் போரை நடப்பித்தாய். பாண்டவர்க்கு உதவிய நீ, போர்க் களத்திலே துரியோதனாதியர் வீழச் செய்தாய். அடியேனுக்கு இன்று அருள வேண்டும். வேண்டுமாயின் வேப்பிலையும் கறியாகுமே! மெய்ம்மை தெளிந்தவர் செய்ய முடியாதது உண்டோ? இல்லை. **2475**

உனக்கு அடிமை செய்வதையே ஏற்றேன். பிறப்பால் வரும் வினைகள் நீங்கப் பெற்றேன். பிரமன் முதலிய தேவர்களும் என் பக்கம் அமர முடியாதபடியான பக்தி,ஞானத்தால் நிறைவுற்றேன். ஆகவே அடியேனுக்கு சுவர்க்கம், பூவுலக இன்பம், ஆகியவை தேவையில்லை. எல்லாவற்றுக்கும் மேலான அடியார்கள் குழாங்களின் திருநாட்டைக் காண பரம பக்தி பெற்றேன். **2476**

எம்பெருமானே! சிவனுக்கும் பிரமனுக்கும் தெய்வமாக இருப்பவன் நீயே என்று இப்பொழுது தெரிந்து கொண்டேன். உன் இயல்பை அறிந்ததால் நீயே உலக காரணன் என்பதையும், முன்பு கற்றவை, இனி அறியப் போகிறவை யாவும் நாராயணன் ஆகிற உன் பேரருளாலேயே என்பதையும் நன்கு அறிந்து கொண்டேன். **2477**

**நான்முகன் திருவந்தாதி உரை முற்றிற்று.**



ஸ்ரீ :

# இயற்பா

நம்மாழ்வார் அருளிய
திருவிருத்தம்

## நாலாயிர திவ்யப் பிரபந்தம்

ஸ்ரீ:

# நாலாயிர திவ்வியப் பிரபந்தம்

## இயற்பா

நம்மாழ்வார் அருளிய

திருவிருத்தம் - தனியன்

கருவிருத்தக் குழி நீத்தபின் காமக் கடுங்குழி வீழ்ந்து
ஒருவிருத்தம் புக்கு உழல் உறுவீர்! உயிரின் பொருள்கட்கு
ஒருவிருத்தம் புகுதாமல், குருகையர் கோன் உரைத்த
திருவிருத்தத்து ஓர் அடி கற்று இரீர். திருநாட்டகத்தே.

**- கிடாம்பி ஆச்சான் அருளியது.**



ஸ்ரீ:

# நாலாயிர திவ்வியப் பிரபந்தம்

## இயற்பா

நம்மாழ்வார் அருளிய

திருவிருத்தம் - தனியன் உரை

*பிறவிக் கடலில் அலையும் மக்களே! கருப்பைக் குழியை விட்டுப் பிறந்தபின் வாழ்க்கையில் சிற்றின்பம் என்னும் குழியில் விழுந்து, பிறகு கிழத் தனம் அடைகிறீர்கள். இவற்றால் உங்கள் உயிருக்கு என்ன கிடைத்தது ? பிறவிப் பயன் வேண்டுமானால் திருக்குருகூரில் அவதரித்த நம்மாழ்வாரின் திருவிருத்த நூலில் ஓர் அடியாவது கற்றுக் கொள்ளுங்கள். அதைப் பயின்று உணர்ந்தால் எத் தடையும் இல்லாமல் நீங்கள் பரமபதம் அடையும் பேறு பெறுவீர்கள்.*

**- கிடாம்பி ஆச்சான் அருளியது.**

ஸ்ரீ:

# சடகோபர் அருளிச் செய்த திருவிருத்தம்

### தாமான தன்மையில் அருளியது

பொய்ந் நின்ற ஞானமும் பொல்லா ஒழுக்கும், அழுக்கு உடம்பும்,
இந் நின்ற நீர்மை இனி யாம் உறவாமை உயிர் அளிப்பான்,
எந் நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்! இமையோர் தலைவா
மெய்ந் நின்று கேட்டருளாய், அடியேன் செய்யும் விண்ணப்பமே. 2478

### தலைவியின் வேறுபாடு கண்ட தோழி வியத்தல்

செழு நீர்த் தடத்துக் கயல் மிளிர்ந்தால் ஒப்ப, சேயரிக் கண்
அழு நீர் துளும்ப, அலமருகின்றன. வாழியரோ!
முழு நீர் முகில் வண்ணன், கண்ணன் விண் நாட்டவர் மூதுவர் ஆம்
தொழு நீர் இணை அடிக்கே அன்பு சூட்டிய சூழ் குழற்கே. 2479

### தலைவி நெஞ்சு அழிந்து உரைத்தல்

குழல் கோவலர் மடப் பாவையும், மண்மகளும் திருவும்
நிழல்போல்வனர் கண்டு நிற்கும்கொல் மீளும்கொல் தண் அம் துழாய்
அழல்.போல் அடும் சக்கரத்து அண்ணல், விண்ணோர் தொழ, கடவும்
தழல் போல் சினத்த அப் புள்ளின் பின் போன தனி நெஞ்சமே? 2480

### தலைவி வாடைக்கு ஆற்றாது வருந்துதல்

தனி நெஞ்சம் முன் அவர் புள்ளே கவர்ந்தது; தண் அம் துழாய்க்கு
இனி நெஞ்சம் இங்குக் கவர்வது யாம் இலம்; நீ நடுவே,
முனி வஞ்சப் பேய்ச்சி முலை சுவைத்தான் முடி சூடு துழாய்ப்
பனி நஞ்ச மாருதமே! எம்மது ஆவி பனிப்பு இயல்வே? 2481

### தலைவியின் மாமை கண்டு தோழி இரங்குதல்

பனிப்பு இயல்வாக உடைய தண் வாடை இக் காலம் இவ் ஊர்ப்
பனிப்பு இயல்வு எல்லாம் தவிர்ந்து, எரி வீசும்; அம் தண்ணம் துழாய்ப்
பனிப்புயல் சோரும் தடங் கண்ணி மாமைத் திறத்துக் கொலாம்
பனிப் புயல் வண்ணன் செங்கோல் ஒருநான்று தடாவியதே! 2482



ஸ்ரீ:

# சடகோபர் அருளிச் செய்த திருவிருத்தம்

### தாமான தன்மையில் அருளியது

*நித்திய சூரிகள் தலைவனே! உலகத்து உயிர்களைக் காக்க நீயே விருப்பமுடன் பலவகைப் பிறப்புகளை எடுக்கிறாய். நாங்களோ பொய்யே நிலைபெற்ற அறிவும், தீய நடத்தையும், அழுக்குப் பதிந்த உடம்பையும் கொண்டு பிறவியில் அழுந்தி உள்ளோம். இவ்வாறு நாங்கள் பிறவி அடையாதபடி நீ தான் அருள வேண்டும். அடியேன் கூறும் விண்ணப்பத்தைச் செவி சாய்த்து அருள வேண்டும்.* 2478

### தலைவியின் வேறுபாடு கண்ட தோழி வியத்தல்

*நீருண்ட காளமேக நிறமுடைய நித்திய சூரிகள் தலைவனான கண்ணன் அவர்களால் வணங்கப்படும் அறப்பெரியவன். அடர்ந்த கூந்தலை உடைய இப்பெண் மகள்அப்பெருமான் திருவடிகளில் தன் காதல் மாலையைச் சூட்டிவிட்டாள். தண்ணீர் தளும்பும் குளத்தில் கயல் மீன்கள் பிறழ்வது போல உள்ள சிவந்த வரிகள் உள்ள கண்களில் பிரிவுத் துன்பத்தால் நீர் ததும்பி மோதுகிறது. இவள் காதல் வாழ்க.* 2479

### தலைவி நெஞ்சு அழிந்து உரைத்தல்

*திருத்துழாய் சூடியவனும் தீபோன்ற சக்கரத்தை ஏந்தியவனும் ஆன தலைவன், நெருப்புப் போல சினங்கொண்ட கருடாழ்வான் மீதேறிச் செல்லவும் நித்திய சூரிகள் அவனைத் தொழுவார்கள். என் நெஞ்சம் கருட வாகனன் பின்னே சென்றது. புல்லாங்குழல் கொண்ட ஆயர்கள் குலத்து நப்பின்னையும், பூமிதேவியும், திருமகளும் பெருமானுக்கு நிழல் போன்ற தேவியர்கள் ஆவர். அவர்களைப் பார்த்தவாறு என் நெஞ்சம் வாடாதே நிற்குமோ? அல்லது என்னிடம் திரும்ப வருமோ?* 2480

### தலைவி வாடைக்கு ஆற்றாது வருந்துதல்

*என் தொடர்பற்ற நெஞ்சம் முழுவதையும் அவருடைய கருடப் பறவை கவர்ந்து போயிற்று. இனி வேறு எந்த மனம், அவர் திருத்துழாய் மாலையைக் கவர உள்ளது? ஏ! வாடைக் காற்றே! சினம் கொண்டு வஞ்சனையுடன் வந்த பூதனைப் பேயின் முலை சுவைத்து வதைத்த கண்ணன் தொடர்பை நினைவு படுத்தவா நீ நஞ்சு போல் என் மீது வீசு கிறாய்? இடையிலே புகுந்து என் உயிரை நடுக்குவது உன் இயல்பா?* 2481

### தலைவியின் மாமை கண்டு தோழி இரங்குதல்

*குளிர்ச்சியே இயல்பான வாடைக் காற்று இக் காலத்தில் இவ் வூரில் மட்டும் இவள் மீது படும்பொழுது, தன் இயல்பை விட்டு வெப்பம் வீசுமோ? அவன் திருத்துழாய் மாலைக்கு ஆசைப்படும் இவள் கண்களி லிருந்து மேகம் மழை பெய்வது போல் கண்ணீர் சொரிகிறதே! காளமேக நிறமுடைய பெருமானின் செங்கோன்மை வளைந்து விட்டதே! இயல்புக்கு மாறாக, வாடையை அனுப்பித் துன்புறுத்துகிறானோ?* 2482

## தலைவியின் அழகைத் தலைவன் வியந்து பேசுதல்

தடாவிய அம்பும், முரிந்த சிலைகளும் போகவிட்டு,
கடாயின கொண்டு ஒல்கும் வல்லி ஈது ஏனும் அசுரர் மங்கக்
கடாவிய வேகப் பறவையின் பாகன் மதன செங்கோல்
நடாவிய கூற்றம்கண்டீர்! உயிர் காமின்கள், ஞாலத்துள்ளே! 2483

## கால மயக்கு

ஞாலம் பனிப்பச் செறுத்து, நல் நீர் இட்டு, கால் சிதைந்து,
நீல வல் ஏறு பொராநின்ற வானம் இது ; திருமால்
கோலம் சுமந்து பிரிந்தார் கொடுமை குழறு தண் பூங்
காலம் கொலோ? அறியேன் விளையாட்டியேன் காண்கின்றவே! 2484

## தலைவன் பொருள் வயிற்பிரிதலைத் தலைவி தோழிக்குக் கூறல்

காண்கின்றனகளும் கேட்கின்றனகளும் காணில், இந் நாள்
பாண் குன்ற நாடர் பயில்கின்றன இது எல்லாம் அறிந்தோம்-
மாண் குன்றம் ஏந்தி தண் மாமலை வேங்கடத்து உம்பர் நம்பும்
சேண் குன்றம் சென்று பொருள் படைப்பான், கற்ற திண்ணனவே. 2485

## தலைவன் தலைவியின் நீங்கல் அருமை கூறுதல்

திண் பூஞ் சுடர் நுதி நேமி அம் செல்வர் விண் நாடு அனைய
வண் பூ மணி வல்லி! யாரே பிரிபவர் தாம்? இவையோ
கண் பூங் கமலம் கருஞ் சுடர் ஆடி வெண் முத்து அரும்பி,
வண் பூங் குவளை மட மான் விழிக்கின்ற மா இதழே. 2486

## தலைவன் தோழியிடம் தன் குறை கூறல் - மதி உடன்படுத்தல்

மாயோன் வட திருவேங்கட நாட வல்லிக்கொடிகாள்!
நோயோ உரைக்கிலும் கேட்கின்றிலீர்: உரையீர் நுமது
வாயோ? அது அன்றி வல்வினையேனும் கிளியும் எள்கும்
ஆயோ? அடும் தொண்டையோ? அறையோ! இது அறிவு அரிதே. 2487





## தலைவியின் அழகைத் தலைவன் வியந்து பேசுதல்

*வளைந்த அம்புகளையும், ஒடிந்த விற்களையும் தவிர்த்து விட்டுப் பயனுடைய அம்புகைளும், விற்களையும் கொண்டு, ஒசிந்த நடையில் வரும் இப்பெண் மன்மதன் ஆணையை நடத்த வந்த யமனோ? அசுரர்களை அழிக்கக் கருடன் மீதேறி வரும் திருமாலின் புதல்வனான மன்மதன் ஆட்சியை நடத்துவது போல், இத் தலைவி தோன்றுகிறாள். ஆகவே நீங்கள் உயிரைக் காத்துக் கொள்ளுங்கள்.* **2483**

## கால மயக்கு

*தலைவியே! உன் பிரிவுத் துன்பத்தைக் காணும் தீவினை உடையவன் நான். உலகமே நடுங்கும்படி எருதுகள் தங்களுக்குள் கால்களைக் கீறியபடி போர் செய்து, தம் உடல் நீரைச் சிந்துவது, வானில் மேகங்கள் மோதி மழை பொழிவது போல் தோன்றுகிறது. திருமாலின் கொடுமையைக் கார்காலம் நினைவுபடுத்துகிறது. இக் கார்காலம் மெய்யே வந்ததோ என்று நான் அறியேன்.* **2484**

## தலைவன் பொருள் வயிற்பிரிதலைத் தலைவி தோழிக்குக் கூறல்

*தோழீ! குன்றுகளை உடைய நாட்டுத் தலைவரான என் காதலரிடத்தே காணப்படும் செய்கைகளும், பேச்சும், வெளிப் பூச்சாகத் தெரிகின்றன. மலையைத் தூக்கிய கண்ணபிரான் தங்கியதும், நித்திய சூரிகள் விரும்புவதும் ஆன திருவேங்கட மலை சென்று, பொருள் தேடப் போகிறார் போலும். அதற்காக அவர் கற்றுள்ள வலிய செயல்தான், என்னிடத்தே பேசும் பசப்பு வார்த்தை என்பதைத் தெரிந்து கொண்டேன்.* **2485**

## தலைவன் தலைவியின் நீங்கல் அருமை கூறுதல்

*இந்த அழகிய பூங்கொடி, வலிய கூர்மையான சக்கரத்தை ஏந்திய எம்பெருமானின் பரமபதம் போலே விளங்குகிறாள். தாமரையையும் செங்கழுநீர்ப் பூவையும் ஒத்த இவளுடைய மைக் கண்களிலிருந்து வடியும் கண்ணீர்த் துளிகள், முத்துக்கள் போல ஒளி விடுகின்றன. மட மான் ஆன இம் மணிவல்லியை யாரால் பிரிய முடியும்!* **2486**

## தலைவன் தோழியிடம் தன் குறை கூறல் - மதி உடன்படுத்தல்

*மாயனின் திருவேங்கட மலையில் வாழும் வல்லிக் கொடி போன்றவர்களே! என் காதல் நோயைப் பற்றிக் கூறியும் நீங்கள் கேட்கவில்லையே? தீவினைக்கு ஆட்பட்ட என்னையும் என் கிளியையும் உங்கள் வாயழகு கவர்ந்தது. நீங்கள் மிழற்றும் ஆயோ என்னும் சொல்லும், கொவ்வைப்பழ உதடுகளும், என்னைத் துன்புறுத்துகின்றன. என் முறையீட்டைக் கேட்கலாகாதா?* **2487**

### தலைவியின் வேறுபாடு கண்டு தலைவன் உரைத்தல்

அரியன, யாம் இன்று காண்கின்றன; கண்ணன் விண் அனையாய்!
பெரியன காதம் பொருட்கோ பிரிவு என ஞாலம் எய்தற்கு
உரியன ஒண் முத்தும் பைம் பொன்னும் ஏந்தி, ஓரோ குடங்கைப்
பெரியன கெண்டைக் குலம் இவையோ வந்து போர்கின்றவே! 2488

### தலைவி தன் ஆற்றாமையைக் கூறுதல்

போர்கின்றது மணி மாமை; பிறங்கி அள்ளல் பயலை
ஊர்கின்றது; கங்குல் ஊழிகளே; இது எல்லாம் இனவே-
ஈர்கின்ற சக்கரத்து எம் பெருமான் கண்ணன் தண் அம் துழாய்
சார்கின்ற நல் நெஞ்சினார் தந்து போன தனி வளமே. 2489

### தலைவி, பிரிவு மேலிட, இருளுக்கும் வாடைக்கும் இரங்கல்

தனி வளர் செங்கோல் நடாவு தழல் வாய் அரசு அவிய,
பனி வளர் செங்கோல் இருள் வீற்றிருந்தது பார் முழுதும்;
துனி வளர் காதல் துழாயைத் துழாவு தண் வாடை தடிந்து
இனி வளை காப்பவர் ஆர்? எனை ஊழிகள் ஈர்வனவே! 2490

### தலைவன் தலைவியின் அழகைப் பாராட்டுதல்

ஈர்வன வேலும், அம் சேலும் உயிர்மேல் மிளிர்ந்து இவையோ
போர்வனவோ அல்ல; தெய்வ நல் வேள் கணைப் பேர் ஒளியே
சோர்வன; நீலச் சுடர் விடு மேனி அம்மான் விசும்பு ஊர்
தேர்வன; தெய்வம் அன்னீர கண்ணோ, இச் செழுங் கயலே? 2491

### தோழி தலைவன் எண்ணம் தெரிந்து உரைத்தல்

கயலோ நும கண்கள்? என்று களிறு வினவி, நிற்றீர்;
அயலோர் அறியிலும் ஈது என்ன வார்த்தை? கடல் கவர்ந்த
புயலோடு உலாம் கொண்டல் வண்ணன் புன வேங்கடத்து எம்மொடும்
பயலோ இலீர்; கொல்லை காக்கின்ற நாளும் பல பலவே. 2492





### தலைவியின் வேறுபாடு கண்டு தலைவன் உரைத்தல்

*"கண்ணன் பரமபதம் போல் அளவற்ற இன்பம் தருபவளே! உலகில், சிலர் பொருள் சேர்ப்பதற்காகப் பல காதங்கள் சென்று, தங்கள் காதலிகளைப் பிரிகிறார்களே!" என்று நான் கேட்டேன். கேட்டதுமே அவள் அகங்கை போன்ற தன் கண்களிலிருந்து நீர் சொரிந்தாள். கெண்டைக்குலக் கண்களிலிருந்து உதிர்ந்த முத்துக்களும், பொன் போன்ற பசலை நிறமும், உடைய காட்சி தோன்றுகிறதே! என்ன வியப்பு இது!* **2488**

### தலைவி தன் ஆற்றாமையைக் கூறுதல்

*என் அழகிய மாமை நிறம் மாறுபட்டது. அடர்ந்த பசலை நிறம் மேன்மேலும் பரவுகின்றது. இரவோ பல கற்பங்களாக நீள்கிறது. இவ்விரு செல்வங்களை (அதாவது துயரங்களை) தனிப்பட்ட சொத்தாகத் தந்து விட்டு என் மனம், அந்தக் கண்ணன் திருத்துழாயை ஆசைப்பட்டு அவனிடம் சென்று விட்டதே! இதை நான் நல்ல நெஞ்சு என்று பாராட்டத் தான் வேண்டுமோ?* **2489**

### தலைவி, பிரிவு மேலிட, இருளுக்கும் வாடைக்கும் இரங்கல்

*இணை இல்லாத ஒளி உடைய வெப்ப சூரியனின் ஆட்சி முடிந்து, நடுக்கத்தை உண்டாக்கும் இருள் அரசன் பூமி முழுவதும் ஆட்சி செலுத்துகிறான். தலைவனின் திருத்துழாய் மீது பட்டு வரும் வாடைக் காற்றைத் தண்டிப்பார் யாரேனும் உண்டோ? என் உடல் மெலியாமல் காத்து, வளை கழலாதபடி செய்பவர் யார்? இராக் காலம் ஊழியாய் நீள்கிறதே!* **2490**

### தலைவன் தலைவியின் அழகைப் பாராட்டுதல்

*வேலாயுதத்தையும், சேல்மீன்களையும் ஒத்த இவள் கண்கள் என் உயிரைப் பற்றி நீங்காமல் தங்கின. இவை தெய்வ மன்மதனின் ஐந்து அம்புகளின் வேலையைச் செய்கின்றன. நீலமணி போல ஒளிவிடும் மேனி உடைய எம்பெருமானின் பரமபதத்தை இவை ஒத்தன. இவை கயல் மீன்களா' அல்லது தெய்வப் பெண்ணின் கண்களோ?* **2491**

### தோழி தலைவன் எண்ணம் தெரிந்து உரைத்தல்

*தலைவரே! யானையைப் பற்றிக் கேட்கும் நீங்கள், உங்கள் கண்கள் கயல்மீன்களா? என்றும் கேட்கிறீர். பொருந்தாத இரு விதமாகப் பேசினால் அயலார் தவறாக எண்ணுவார். காளமேகப் பெருமானின் திருவேங்கட மலையில் பல காலமாய்ப் புனம் காக்கும் எங்களுடன் நெடுநாள் பழகியவர் போல் நடிக்க வேண்டாம்.* **2492**

## தலைவி இருட்டைப் பற்றி வியந்து பேசுதல்

பலபல ஊழிகள் ஆயிடும்; அன்றி ஓர் நாழிகையைப்
பலபல கூறிட்ட கூறு ஆயிடும்; கண்ணன் விண் அனையாய்
பலபல நாள் அன்பர் கூடிலும் நீங்கிலும் -யாம் மெலிதும்;
பலபல சூழல் உடைத்து அம்ம! வாழி, இப் பாய் இருளே! 2493

### தலைவி கடலை நோக்கித் தேர்க்கால் சுவடுகளை அழிக்காதே என்றல்

இருள் விரிந்தால் அன்ன மா நீர்த் திரைகொண்டு வாழியரோ
இருள் பிரிந்தார் அன்பர் தேர் வழி தூரல்; அரவு அணைமேல்
இருள் விரி நீலக் கரு நாயிறு சுடர் கால்வது போல்
இருள் விரி சோதிப் பெருமான் உறையும் எறி கடலே! 2494

### கார்காலம் கண்டு வருந்திய தலைவியைப் பார்த்துத் தோழி இரங்குதல்

கடல் கொண்டு எழுந்தது வானம்; அவ் வானத்தை அன்றிச் சென்று
கடல் கொண்டு ஒழிந்த அதனால், இது கண்ணன் மண்ணும் விண்ணும்
கடல் கொண்டு எழுந்த அக் காலம்கொலோ? புயல் காலம் கொலோ?
கடல் கொண்ட கண்ணீர் அருவிசெய்யாநிற்கும் காரிகையே! 2495

## செவிலி பழிக்கு இரங்குதல்

காரிகையார் நிறை காப்பவர் யார் என்று, கார் கொண்டு இன்னே
மாரி கை ஏறி, அறையிடும் காலத்தும், வாழியரோ!
சாரிகைப் புள்ளர் அம் தண்ணம் துழாய் இறை கூய் அருளார்;
சேரி கை ஏறும் பழியாய் விளைந்தது என் சில்மொழிக்கே. 2496

## வெறி விலக்கு

சில்மொழி நோயோ கழி பெருந் தெய்வம்; இந் நோய் இனது என்று
இல்மொழி கேட்கும் இளந் தெய்வம் அன்று இது; வேல! நில் நீ;
என் மொழி கேண்மின் என் அம்மனைமீர்! உலகு ஏழும் உண்டான்
சொல் மொழி மாலைஅம் தண்ணம் துழாய் கொண்டு சூட்டுமினே. 2497





## தலைவி இருட்டைப் பற்றி வியந்து பேசுதல்

*பரமபதம் போல எனக்குப் பிரியமான தோழியே! இருளுடைய இந்த இரவு, அவரைப் பிரிந்த பொழுது ஊழிக் காலம் போல் நீள்வதால் நான் மெலிகிறேன். ஆனால் அவர் கூடி இருக்கும் பொழுது, நாழிகையைக் கூறிட்ட நொடி போலப் பொழுது மறைவதால் அதனாலும் மெலிகிறேன். சிறுமையும் செய்து, பெருமையும் சேர்க்கும் இந்த இரவின் சாமர்த்தியம் தான் என்னே! வஞ்சக இருள் வாழ்க.* **2493**

### தலைவி கடலை நோக்கித் தேர்க்கால் சுவடுகளை அழிக்காதே என்றல்

*இருளை உமிழும் நீலமணி போன்ற கறுத்த சூரியன் ஒளி விடுவது போல், கரிய திருமால் ஆதிசேஷன் மீது பள்ளி கொள்ளும் இடமாகிய கடலே! நீ வாழ்க! இருள் பரந்த கறுத்த உன் அலைகளால், இருளில் என்னைப் பிரிந்த தலைவரின் தேர் போன வழியை அழித்து விடாதே!* **2494**

### கார்காலம் கண்டு வருந்திய தலைவியைப் பார்த்துத் தோழி இரங்குதல்

*கடல் போலக் கண்ணீர் அருவி சொறிகின்ற பெண்ணே! ஆகாயம் கடல் மீது கவிழ்ந்து பருகி, மேல் எடுத்துச் சென்றதா! அல்லது கடலே, வானின் மீது சாடி அதனைக் கவர்ந்ததோ? கார்காலம் ஊழி போல் வந்ததே! கண்ணபிரானின் பூவுலகத்தையும், விண்ணுலகத்தையும் பிரளயம் கொண்ட காலமோ? அன்றி இது மழை காலமோ? நான் இதனை அறியேன்.* **2495**

## செவிலித் தாய் பழிக்கு இரங்குதல்

*மேகங்கள் கறுத்து வானில் பரவி மழை பொழிய அறை கூவும் கார் காலம் வந்து விட்டதே! பெண்களே! உங்களுக்குள் அடக்கத்தைச் சிதறாமல் காக்க வல்லவர் யார்? என்று கூவும் மேகம் வானில் ஏறி நிற்கிறது. பிரிவால் வாடும் என் மகளுக்குக் கருடவாகனப் பெருமான் திருத்துழாய் மாலையைத் தர மாட்டானோ? இவள் காதல் ஊர்ப் பேச்சாகச் சேரி முழுதும் பரவிப் பழி ஆயிற்று. இவள் துயரம் நீங்கி வாழ வேண்டும்.* **2496**

## வெறிவிலக்கு

*சில மொழிகளே பேசும் இவள் நோய், மிகப்பெரிய எம்பெருமானைப் பற்றியது. பொருள் அற்ற புகழுரைகளைக் கேட்டு மகிழும் சிறுதெய்வம் பற்றி வந்தது அன்று. வெறி ஆடும் வேலனே! நீ விலகி நில். என் தாய்மார்களே! என் சொல்லைக் கேளுங்கள். பிரளயத்தில் ஏழுலகங்களை உண்ட பெருமானின் திருநாமத்தை இவள் காது கேட்கச் சொல்லுங்கள். அவன் திருத்துழாய் மாலையை இவளுக்குச் சூட்டுங்கள்.* **2497**

### எருதுகளை அடக்கித் திருமணம் செய்யக் கூறுதல்

சூட்டு நல் மாலைகள் தூயன ஏந்தி, விண்ணோர்கள் நல் நீர்
ஆட்டி அம் தூபம் தராநிற்கவே,அங்கு ஓர் மாயையினால்
ஈட்டிய வெண்ணெய் தொடு உண்ணப் போந்து இமில் ஏற்று வன் கூன்
கோட்டிடை ஆடினை கூத்து அடல் ஆயர் தம் கொம்பினுக்கே. 2498

### தோழி தலைவனைக் கேலி செய்தல்

கொம்பு ஆர் தழை கை; சிறு நாண் எறிய இலம்; வேட்டை கொண்டாட்டு;
அம்பு ஆர் களிறு வினவுவது ஐயர் புள் ஊரும் கள்வர்
தம் பாரகத்து என்றும் ஆடாதன தம்மில் கூடாதன;
வம்பு ஆர் வினாச் சொல்லவோ எம்மை வைத்தது, இவ் வான் புனத்தே? 2499

### தலைவன் தன் குறை வேண்டுதல்

புனமோ? புனத்து அயலே வழிபோகும் அரு வினையேன்
மனமோ? மகளிர்: நும் காவல் சொல்லீர்; புண்டரீகத்து அம் கேழ்
வனம் ஓர் அனைய கண்ணான், கண்ணன் வான் நாடு அமரும் தெய்வத்து
இனம் ஓர் அனையீர்களாய், இவையோ நும் இயல்வுகளே? 2500

### தலைவிக்காகச் செவிலித் தாய் இரங்குதல்

இயல்வாயின வஞ்ச நோய் கொண்டு உலாவும் ஒரோ குடங்கைக்
கயல் பாய்வன பெரு நீர்க் கண்கள் தம்மொடும் குன்றம் ஒன்றால்
புயல்வாய் இன நிரை காத்த புள் ஊர்தி கள் ஊரும் துழாய்க்
கொயல்வாய் மலர்மேல் மனத்தொடு என்னாம்கொல் எம் கோல்-வளைக்கே? 2501

### தலைவன் மாலைக்குத் தலைவி ஆசைப்படுதல்

எங்கோல் வளை முதலா, கண்ணன் மண்ணும் விண்ணும் அளிக்கும்
செங்கோல் வளைவு விளைவிக்குமால்; திறல் சேர் அமரர்-
தம் கோனுடைய தம் கோன் உம்பர் எல்லா எவர்க்கும் தம்கோன்
நம் கோன் உகக்கும் துழாய் என் செய்யாது இனி நானிலத்தே? 2502





### எருதுகளை அடக்கித் திருமணம் செய்யக் கூறுதல் (தாமான தன்மைப் பாசுரமும் ஆகும்)

*எம்பெருமானே! பரமபதத்தில் நித்திய சூரிகள் உனக்குத் திருமஞ்சனம் செய்து, தூய மாலைகளைச் சூட்டுவதற்கு நின்று, அழகிய தூபம் காட்டி நிற்கையில், உன் மாயையால் நொடியில், திருவாய்ப்பாடிக்குச் சென்று விடுகிறாய். அங்குச் சேர்த்து வைத்த வெண்ணெயை உண்பதற்கு வந்த நீ, இடையர் குலப் பூங்கொம்பான நப்பின்னையை மணக்க, திமிலை உடைய எருதுகளைத் தழுவி அடக்கினாய். அவற்றின் கொம்புகள் இடையே நின்று கூத்தாடினாய்.* 2498

### தோழி தலைவனைக் கேலி செய்தல்

*இப்பெரியவர் கையில் மரத் தழையே உள்ளது. வில் இல்லை. நாம் இவர் தெறித்த நாண் ஒலியையும் கேட்கவில்லை. அம்பு எய்யப் பட்ட யானையைத் தேடி வந்ததாகப்பேசுகிறார். கருடவாகனப் பிரானின் இவ்வுலகில் இவை நடக்காதவை அன்றோ! இவர் பேச்சும் செயலும் ஒன்றிற் கொன்று பொருந்தவில்லை. புதிது புதிதாக வினாக்களுக்கு விடை சொல்லவோ நம்மை இப்புனத்தில் காவலுக்கு வைத்தது?* 2499

### தலைவன் தன் குறை வேண்டுதல்

*பெண்களே! உங்கள் காவலுக்கு உட்பட்டது, இத்தினைப் புனமோ அல்லது இங்கு வந்த பாவியேன் நெஞ்சமோ? சொல்லுங்கள் . செந் தாமரைக் காட்டை ஒத்த கண்களுடைய கண்ணனின் பரமபதத்தில் உள்ள நித்திய சூரிகளைப் போல நீங்கள் உள்ளீர்கள். மற்றவர் மனத்தைக் கொள்ளை கொள்ளுதல் உங்கள் செயல்கள் ஆகுமோ?* 2500

### தலைவிக்காகச் செவிலித் தாய் இரங்குதல்

*பிறரால் அறியப்படாத இயல்பான காதல் நோயால், இப் பெண்ணின் கண்கள் அகங்கை அளவு விரிந்து மீன் போல் பிறழ்ந்து நீரைப் பெருக்குகின்றன. மலை எடுத்து மழையினின்று பசுக்களைக் காத்த கண்ணனும், கருடவாகனனும் ஆன பெருமானின் திருத்துழாய்ப் பூவுக்கு இவள் மனம் ஆசைப்பட்டது. அழகிய வளையல் அணிந்த இப்பெண்ணுக்கு இன்னும் எந்நிலைமை உண்டாகுமோ?* 2501

### தலைவன் மாலைக்குத் தலைவி ஆசைப்படுதல்

*சக்தி நிறைந்த, தேவர்கள் தலைவன் பிரமனுக்கும், நித்திய சூரிகளுக்கும், இவ் வுலகோர்க்கும், தலைவன் ஆன எம்பெருமானின் திருத்துழாய் மாலையைப் பெற முடியாததால் நான் வாடினேன். விண்ணையும் மண்ணையும் ஆளும் அவன் செங்கோல், என் கைவளை கழல்வதால் வளைந்தது. இவ்வாறு அவன் செங்கோல் வளையக் காரணமான திருத்துழாய் இவ்வுலகில் எத் தீமை தான் செய்யாது?* 2502

### நகர் காட்டல்

நானிலம் வாய்க் கொண்டு, நல் நீர் அற மென்று, கோது கொண்ட
வேனில் அம் செல்வன் சுவைத்து உமிழ் பாலை கடந்த பொன்னே!
கால்நிலம் தோய்ந்து விண்ணோர் தொழும் கண்ணன் வெஃகாஉது; அம்பூந்
தேன் இளஞ் சோலை அப்பாலது எப்பாலைக்கும் சேமத்ததே. 2503

### தலைவி மாலை பெற்று மகிழ்தல்

சேமம் செங்கோன் அருளே; செறுவாரும் நட்பு ஆகுவர் என்று
ஏமம் பெற, வையம் சொல்லும் மெய்யே; பண்டு எல்லாம் அறை கூய்,
யாமங்கள் தோறு எரி வீசும் நம் கண்ணன் அம் தண்ணம் துழாய்த்
தாமம் புனைய, அவ் வாடை ஈதோ வந்து, தண்ணென்றதே. 2504

### தலைவி வாடைக்கு வருந்துதல்

தண் அம் துழாய் வளை கொள்வது; யாம் இழப்போம்; நடுவே
வண்ணம் துழாவி ஓர் வாடை உலாவும்; வள் வாய் அலகால்
புள் நந்து உழாமே பொரு நீர்த் திருவரங்கா!அருளாய்!
எண்ணம் துழாவுமிடத்து உளவோ பண்டும் இன்னன்னவே? 2505

### தலைவி அன்னத்தை வெறுத்தல்

இன்னன்ன தூது எம்மை ஆள் அற்றப்பட்டு இரந்தான் இவள் என்று
அன்னன்ன சொல்லாப் பெடையொடும் போய் வரும் நீலம் உண்ட
மின் அன்ன மேனிப் பெருமான் உலகில் பெண் தூது செல்லா
அன்னன்ன நீர்மைகொலா? குடிச் சீர்மை இல் அன்னங்களே. 2506

### அன்னங்களையும் குருகுகளையும் தூது விடுத்தல்

அன்னம் செல்வீரும் வண்டானம் செல்வீரும் தொழுது இரந்தேன்;
முன்னம் செல்வீர்கள் மறவேல்மினோ; கண்ணன் வைகுந்தனோடு
என் நெஞ்சினாரைக் கண்டால் என்னைச் சொல்லி அவரிடை நீர்
இன்னம் செல்லீரோ? இதுவோ தகவு? என்று இசைமின்களே. 2507





### நகர் காட்டல்

*வெப்பமுடைய சூரியன் என்னும் செல்வன், குறிஞ்சி, மருதம், முல்லை, நெய்தல் என்னும் நானிலங்களைச் சுவைத்து, நீர் அறமென்று துப்பிய பாலை நிலத்தைத் தாண்டி வந்த பொன் போன்ற என் காதலியே! நித்திய சூரிகளும் தம் கால்கள் நிலம் தோய நின்று வணங்கும் கண்ணனின் திருவெஃகாவில், தேன் துளிர்க்கும் பூஞ்சோலைகள் நம் துன்பத்தைப் போக்கி இன்பம் தரும்.* 2503

### தலைவி மாலை பெற்று மகிழ்தல்

*தலைவனான எம்பெருமான் திருவருளே நம்மைக் காப்பது. பகைவரும் ஒரு சமயம் நண்பர் ஆவார் என்று உறுதி பொருந்த உலகோர் கூறுவது உண்மையே. பிரிவுக் காலத்து இரவில் நெருப்பு வீசிப் பகைமைக்கு அறை கூவிய அந்த வாடைக் காற்று, நம் கண்ணனின் திருத்துழாய் மாலையை நாம் சூடியதால் இதோ குளிர்ந்து விட்டது.* 2504

### தலைவி வாடைக்கு வருந்துதல்

*பறவைகள் தம் அலகால் சங்கைக் கொத்தாதபடி அலைமோதும் காவிரி சூழ்ந்த திருவரங்கத்தில் உள்ளவனே! உன் திருத் துழாய் எம் கை வளையைப் பறித்ததால் நாம் இழந்தோம். வாடைக் காற்று நடுவே வந்து எம் நிறத்தைத் தடவி உலவுகிறது. அதையும் நாம் இழக்காதபடி நீயே அருள வேண்டும். மனம் தடுமாறும் அளவிலும் முன்பும் இப்படிப்பட்ட நிலைமைகள் வேறு எங்கேனும் உண்டோ?* 2505

### தலைவி அன்னத்தை வெறுத்தல்

*குடிச்சிறப்பில்லாத இவ் வன்னங்கள் “இப்பெண் ஆள் இல்லாததால் தூதாக நம்மை அனுப்ப வேண்டினாள்” என்று எண்ணுகின்றன. தூது மொழிகளைத் தலைவனிடம் கூறாத ஆண் அன்னம் தன் பெடையுடன் உலாவுகிறது. மின்னல் ஒளி மேனி உடைய நீல நிறப் பெருமானின் உலகில், பெண்களுக்குத் தூது செல்லாத அன்னங்கள் தன்மை இவ்வளவுதானோ?* 2506

### அன்னங்களையும் குருகுகளையும் தூது விடுத்தல்

*வானில் செல்லும் அன்னங்களே! குருகுகளே! நான் வணங்கிக் கேட்கிறேன். உங்களுக்குள் முன்னே செல்பவர் மறவாதீர்கள். பரமபத நாதனும், கண்ணனும் ஆன பெருமானுடன் என் மனம் இருப்பதை நீங்கள் கண்டால் என்னைக் குறிப்பிட்டு, அது மீண்டு வராமல் அங்கேயே தங்கியது தகுதியா என்று கேளுங்கள்.* 2507

## தலைவி மேகங்களிடம் இரங்குதல்

இசைமின்கள் தூது என்று இசைத்தால், இசையிலம்; என் தலைமேல்
அசைமின்கள் என்றால், அசையும் கொலாம் அம் பொன் மா மணிகள்
திசை மின் மிளிரும் திருவேங்கடத்து வன் தாள் சிமயம்
மிசை மின் மிளிரிய போவான், வழிக்கொண்ட மேகங்களே? 2508

## தலைவி போலி கண்டு பேசுதல்

மேகங்களோ! உரையீர் திருமால் திருமேனி ஒக்கும்
யோகங்கள் உங்களுக்கு எவ்வாறு பெற்றீர்? உயிர் அளிப்பான்,
மாகங்கள் எல்லாம் திரிந்து நல் நீர்கள் சுமந்து நும் தம்
ஆகங்கள் நோவ வருத்தும் தவம் ஆம் அருள்பெற்றதே. 2509

## தோழி தலைவனை வெறுத்தல்

அருள் ஆர் திருச் சக்கரத்தால் அகல் விசும்பும் நிலனும்
இருள் ஆர் வினை கெட செங்கோல் நடாவுதிர்;ஈங்கு ஓர் பெண்பால்
பொருளோஎனும் இகழ்வோ? இவற்றின் புறத்தாள் என்று எண்ணோ?
தெருளோம் அரவணையீர்! இவள் மாமை சிதைக்கின்றதே. 2510

## தலைவி கூடல் இழைத்தல்

சிதைக்கின்ற ஆழி என்று ஆழியைச் சீறி, தன் சீறடியால்
உதைக்கின்ற நாயகம் தன்னொடு மாலே! உனது தண் தார்
ததைக்கின்ற தண் அம் துழாய் அணிவான், அதுவே மனமாய்ப்
பதைக்கின்ற மாதின்திறத்து அறியேன் செயற்பாலதுவே. 2511

## தலைவி வாடைக்கு இரங்குதல்

பால் வாய்ப் பிறைப் பிள்ளை ஒக்கலைக் கொண்டு பகல் இழந்த
மேல்பால் திசைப்பெண் புலம்புறு மாலை உலகு அளந்த
மால்பால் துழாய்க்கு மனம் உடையார்க்கு நல்கிற்றை எல்லாம்
சோல்வான் புகுந்து இது ஓர் பனி வாடை துழாகின்றதே. 2512





## தலைவி மேகங்களிடம் இரங்குதல்

*பொன்னும், மணிகளும் திசைகள் எல்லாம் மின்னல் ஒளி போல் வீசும். மலைச் சிகரங்களில் வழி நடைப்பட்ட மேகங்களே! நீங்கள் எனக்காகத் தூது சென்று பேசுங்கள் என்று வேண்டினால் உடன்பட்டுப் போகவில்லை. என் தலைவியின் மீதாவது உங்கள் பாதத்தை வைத்துச் செல்லுங்கள்.* 2508

## தலைவி போலி கண்டு பேசுதல்

*மேகங்களே! எம் பெருமானுடைய திருமேனியை ஒக்கும் படியான நிலையைப்பெற நீங்கள் என்ன தவம் செய்தீர்கள்? உலகத்து உயிர்களை வாழ வைக்க நீங்கள் நல்ல தண்ணீரைச் சுமக்கிறீர்கள். அகன்ற வானங்களிலெல்லாம் திரிந்து உங்களுடைய உடம்பு நோவ நோன்பு நோற்றீர்களா?* 2509

## தோழி தலைவனை வெறுத்தல்

*ஆதி சேஷனைப்படுக்கையாக உடைய பெருமானே! அருள் சக்கரத்தால் தேவர் உலகையும் பூமியையும் இருட்டைப் போன்ற கொடிய தொழில்கள் நிகழாதபடி காப்பாற்றுகிறீர். இப்பராங்குச நாயகியைக் காவாது கை விடுவது இகழ்ச்சி அன்றோ? பிரிவால் இவள் நிறம் இழந்தாள். இவள் உம்மால் காக்கப்படும் உலகங்களுக்கு வெளியே இருக்கிறாள் என்ற எண்ணமோ? நாமோ இதனால் கலங்குகிறோம்.* 2510

## தலைவி கூடல் இழைத்தல்

*திருமாலே! இப்பெண் கூடல் இழைக்கும் பொழுது, அது கெடுப்பதால் கோபம் கொண்டு காலால் உதைக்கிறாள். வாடாத திருத்துழாய் மாலையைச் சூட வேண்டும் என்னும் ஆசையால் வருந்துகிறாள். உம்மிடம் காதல் கொண்ட இப்பெண் விஷயமாக செய்யத் தக்கது என்னவென்பதை அறியாமல் நான் கலங்குகிறேன்.* 2511

## தலைவி வாடைக்கு இரங்குதல்

*பால் மணம் மாறாத பிறைச் சந்திரனாகிய இளங்குழந்தையைத் தன் இடுப்பிலே எடுத்துக் கொண்டு, சூரியனாகிற கணவனை இழந்த, மேல் திசை ஆகிய பெண், வருந்தி அழும் மாலைப்பொழுது வந்தது. உலகளந்த திருமாலின் திருத் துழாய்க்கு ஆசைப்பட்ட எங்களுக்குச் செய்யும் உதவியைக் கவர்ந்து கொள்ள, இந்தக் குளிர்ந்த வாடைக் காற்று என்மேல் தடவுகிறது அந்தோ!* 2512

### தோழி தலைவனின் கொடுமையைக் கூறல்

துழா நெடும் சூழ் இருள் என்று, தம் தண் தார் அது பெயரா,
ஏழா நெடு ஊழி எழுந்த இக் காலத்தும், ஈங்கு இவளோ
வழா நெடுந் துன்பத்தள் என்று இரங்கார் அம்மனோ! இலங்கைக்
குழா நெடு மாடம் இடித்த பிரானார் கொடுமைகளே! 2513

### நற்றாய் தன் மகள் சென்ற பாலை நிலக் கொடுமையை கூறி இரங்கல்

கொடுங் கால் சிலையர், நிரைகோள் உழவர், கொலையில் வெய்ய
கடுங் கால் இளைஞர் துடி படும் கவ்வைத்து அரு வினையேன்
நெடுங் காலமும் கண்ணன் நீள் மலர்ப் பாதம் பரவிப் பெற்ற
தொடுங்கால் ஒசியும் இடை, இளமான் சென்ற சூழ் கடமே. 2514

### தலைவி போலி கண்டு மகிழ்தல்

கடம் ஆயினகள் கழித்து தன் கால் வன்மையால் பல நாள்
தடம் ஆயின புக்கு நீர் நிலைநின்ற தவம் இது கொல்
குடம் ஆடி இம் மண்ணும் விண்ணும் குலுங்க உலகு அளந்து
நடமாடிய பெருமான் உரு ஒத்தன நீலங்களே? 2515

### தலைவனின் உருவம் பற்றித் தலைவி கூறுதல்

நீலத் தட வரைமேல் புண்டரீக நெடுந் தடங்கள்
போலப் பொலிந்து, எமக்கு எல்லா இடத்தவும் பொங்கு முந்நீர்
ஞாலப் பிரான், விசும்புக்கும் பிரான், மற்றும் நல்லோர் பிரான்
கோலம் கரிய பிரான் எம் பிரான் கண்ணனின் கோலங்களே. 2516

### இருள் கண்ட தலைவி, தோழியிடம் திருமண விருப்பம் கூறுதல்

கோலப் பகல் களிறு ஒன்று கல் புய்ய, குழாம் விரிந்த
நீலக் கங்குல் களிறு எல்லாம் நிரைந்தன; நேரிழையீர்!
ஞாலப் பொன் மாதின் மணாளன் துழாய் நங்கள்சூழ் குழற்கே
ஏலப் புனைந்து என்னைமார் எம்மை நோக்குவது என்றுகொலோ? 2517





### தோழி தலைவனின் கொடுமையைக் கூறல்

*தடவித் தேடும்படி பரந்த இருள் ஊழிக் காலம் போல நீள்கிறது. இவள் தனிமை பொறுக்காததை அவன் அறியவில்லையோ? அவன் குளிர்ந்த திருத்துழாய் மாலைக்கு ஆசைப்பட்டு இவள் முடிவில்லாமல் துன்பம் அனுபவிப்பதை உணர்ந்தும் அவன் மனம் இரங்கவில்லையே! இலங்கை நகர் மாடங்களை இடித்துத் தள்ளிய எம்பெருமானின் கொடுமைகள் இருந்தபடி தான் என்னே!* **2513**

### நற்றாய் தன் மகள் சென்ற பாலை நிலக் கொடுமையை கூறி இரங்கல்

*தீவினை உடைய நான் வெகுகாலம் கண்ணன் மலர்த் திருவடிகளை வணங்கி அதன் பயனால், மெல்லிய இடையும் மான்பார்வையும்உடைய இப்பெண்ணைப் பெற்றேன். இவள் நடந்து சென்ற பாலை நிலம் மிகக் கொடியது! அங்கே,கொலைத் தொழிலில் வல்ல கொடிய கள்வர்கள் பசுக்களைக் கவர்வர். வளைந்த வில் ஏந்திய இக் கள்வர்கள் உண்டாக்கும் பறை ஒலி ஆரவாரம் பாதையில் கேட்கும்.* **2514**

### தலைவி போலி கண்டு மகிழ்தல்

*கருங்குவளைப் பூக்கள், நீர்இல்லாத காடுகளைக் கடந்து, நீர் நிலைகளில் தம் கால்களின் வலிமையால் பல நாள் தங்கித் தவம் செய்தனவோ? இப்பெருமான் குடக்கூத்தாடியவன் அன்றோ? மண்ணும் விண்ணும் குலுங்க உலகங்களை அளந்த இப்பெருமானின் திருவிளையாடல் தான் என்னே!* **2515**

### தலைவனின் உருவம் பற்றித் தலைவி கூறுதல்

*பொங்கும் கடல் சூழ்ந்த உலகுக்கும், விண்ணுக்கும், மற்றுமுள்ள நல்லவர்களுக்கும் தலைவனான எம் பெருமான் கரிய திருமேனி கொண்டவன். நீல மணி மயமான பெரிய மலையின் மேலே, செந் தாமரைப் பூப் பொய்கைகள் காணப்படுவன போல அவன் நீலமேனியில் திருமுகத்தில் திருக்கண்கள் அழகுடன் விளங்குகின்றன.* **2516**

### இருள் கண்ட தலைவி, தோழியிடம் திருமண விருப்பம் கூறுதல்

*அணிகலன்கள் உடைய தோழிகளே! சூரியன் என்னும் யானை அத்தமன மலையில் மறைந்தது. கருநீல இரவு என்னும் யானைகள் பரந்து விரிந்தன. பிரிவோ என்னை வாட்டுகிறது. பூமி தேவிக்கும் திருமகளுக்கும் நாயகனான எம்பெருமானின் திருத் துழாய் மாலையை என் கூந்தலில் சூட்டி, என்னை அவனுக்கு என்று திருமணம் செய்யப் போகிறார்கள்?* **2517**

### வாடைக்கு வருந்திய தலைவி வார்த்தை

என்றும் புன் வாடை இது கண்டு அறிதும்; இவ்வாறு வெம்மை
ஒன்றும் உருவும் சுவடும் தெரியிலம்; ஓங்கு அசுரர்
பொன்றும் வகை, புள்ளை ஊர்வான் அருள் அருளாத இந் நாள்,
மன்றில் நிறை பழி தூற்றி நின்று என்னை வன் காற்று அடுமே. 2518

### தலைவி தலைவன் கண்ணழகில் ஈடுபடுதல்

வன் காற்று அறைய, ஒருங்கே மறிந்து கிடந்து அலர்ந்த
மென் கால் கமலத் தடம்போல் பொலிந்தன மண்ணும் விண்ணும்
என் காற்கு அளவின்மை காண்மின் என்பான் ஒத்து வான்நிமிர்ந்த
தன் கால் பணிந்த என்பால் எம் பிரான் தடங் கண்களே. 2519

### தலைவனின் வடிவ அழகு பற்றித் தலைவி பேசுதல்

கண்ணும் செந்தாமரை; கையும் அவை; அடியோ அவையே;
வண்ணம் கரியது ஓர் மால் வரை போன்று மதி விகற்பால்
விண்ணும் கடந்து உம்பர் அப்பால் மிக்கு, மற்று எப்பால் யவர்க்கும்
எண்ணும் இடத்ததுவோ எம்பிரானது எழில் நிறமே? 2520

### தலைவி தலைவன் பெருமை கூறல்

நிறம் உயர் கோலமும் பேரும், உருவும் இவைஇவை என்று
அறம் முயல் ஞானச் சமயிகள் பேசிலும் அங்கு அங்கு எல்லாம்
உற உயர் ஞானச் சுடர் விளக்காய் நின்றது அன்றி, ஒன்றும்
பெற முயன்றார் இல்லையால் எம்பிரான் பெருமையையே. 2521

### தலைவி தலைவன் தனக்கு நீரில் உதவியதை நினைக்கிறாள்

பெருங் கேழலார் தம் பெருங் கண் மலர்ப் புண்டரீகம் நம்மேல்
ஒருங்கே பிறழ வைத்தார் இவ்வ காலம்; ஒருவர் நம் போல்
வருங் கேழ்பவர் உளரே? தொல்லை வாழியம் சூழ் பிறப்பு
மருங்கே வரப் பெறுமே? சொல்லு; வாழி மட நெஞ்சமே! 2522





### வாடைக்கு வருந்திய தலைவி வார்த்தை

*என்றைக்கும் புல்லியதாக இருந்து கொண்டு கொடுமை செய்யும் இவ்வாடைக் காற்றின் வெம்மையையும் சுவட்டையும் அறிய முடியவில்லை. ஓங்கி எழும் அசுரர்கள் அழியும்படி கருடன் மீதேறி வரும் எம்பெருமான் எனக்கு அருளவில்லை. ஊரார் பழிக்கும்படி செய்து விட்ட வாடை அப்பால் போகாமல் வருத்துகிறது.* 2518

### தலைவி தலைவன் கண்ணழகில் ஈடுபடுதல்

*மண்ணும் விண்ணும் என் இருபாதங்களுக்குப் போதா' என்னும்படி தன் திருக்காலை மேலே வளரச் செய்த உலகளந்த பெருமான் என்னைக் கடைக்கணித்த விதம் தான் என்னே! பெருங்காற்று வீசவும் மெல்லிய தண்டுகளை உடைய தாமரைப் பூக்கள் ஒரு பக்கமாகச் சாய்ந்து அசைவது போல, அவன் திருக்கண்கள் என்னை ஒருக்கடித்துப் பார்த்தன.* 2519

### தலைவனின் வடிவ அழகு பற்றித் தலைவி பேசுதல்

*எம் பெருமானின் கண்கள், கைகள், திருவடிகள் ஆகியன தாமரைப் பூவை ஒத்தன. அவன் உடமபு கரிய மலை போன்றது. அவன் இயல்போ இத்தகையது எனக் கூறமுடியாது. அவன் அழகு, ஞான மிகுதியால் விண்ணைக் கடந்தது. தேவருக்கும் அப்பாற் பட்டது. பரமபதவாசிகளாலும் அளவிட அரியது. எல்லோர் எண்ணங்களுக்கும் அப்பாற்பட்டது அவன் திருமேனி அழகு.* 2520

### தலைவி தலைவன் பெருமை கூறல்

*அறவழியில் நின்று முயன்று பெற்ற ஞானத்தால் உயர்ந்த சமயவாதிகள், எம் பெருமான் திருமேனி நிறமும், நிறைந்த அழகும், திருநாமமும், உருவமும் இன்னின்னவை என்று எடுத்துக் கூறுவர். அவர் கூறுவதற்கு மேலான ஞான விளக்காக அவன் இருப்பதால் உள்ளபடி, அவன் பெருமையை அளவிட்டுக் கூறும் முயற்சி அவர்களிடம் இல்லை.* 2521

### தலைவி தலைவன் தனக்கு நீரில் உதவியதை நினைக்கிறாள்

*பேதை நெஞ்சே! வராகப் பெருமான் தன் தாமரைக் கண்கள் நம் மேல் மிளிரப் பார்த்து அருள் செய்தார். நாம் அவருடன் கொண்ட தொடர்பு போல் வேறு ஒருவர் திடமான சம்பந்தம் உடையவரோ? மிகப் பழங்காலம் தொடங்கி வளர்ந்துள்ள தொடர்பால், விடாது சூழும் பிறவித் துன்பங்கள் அருகில் வருமோ? நெஞ்சமே! நமக்குப் பிறப்பில்லை என்று குழப்பமின்றி நீ வாழ்வாயாக.* 2522

## நெஞ்சைத் தூது விட்ட தலைவி இரங்குதல்

மட நெஞ்சம் என்றும், தமது என்றும், ஓர் கருமம் கருதி,
விட நெஞ்சை உற்றார் விடவோ அமையும்; அப் பொன்பெயரோன்
தடநெஞ்சம் கீண்ட பிரானார் தமது அடிக்கீழ் விடப் போய்,
திட நெஞ்சம் ஆய், எம்மை நீத்து, இன்றுதாறும் திரிகின்றதே. 2523

## செவிலி இரங்குதல்

திரிகின்றது வட மாருதம்; திங்கள் வெம் தீ முகந்து
சொரிகின்றது; அதுவும் அது; கண்ணன் விண்ணூர் தொழவே.
சரிகின்றது சங்கம்; தண் அம் துழாய்க்கு வண்ணம் பயலை
விரிகின்றது முழு மெய்யும்; என் ஆம்கொல் என் மெல்லியற்கே? 2524

## பல்லிக் குரல் கேட்டதைத் தலைவி கூறுகிறாள்

மெல்லியல் ஆக்கைக் கிருமிக் குருவில் மிளிர்தந்து ஆங்கே
செல்லிய செல்கைத்து; உலகை என் காணும்? என்னாலும் தன்னைச்
சொல்லிய சூழல் திருமால் அவன் கவி யாது கற்றேன்:
பல்லியின் சொல்லும் சொல்லாக் கொள்வதோ உண்டு பண்டுபண்டே. 2525

## தலைவி இருளுக்கு ஆற்றாது பேசல்

பண்டும் பலபல வீங்கு இருள் காண்டும்; இப் பாய் இருள் போல்,
கண்டும் அறிவதும் கேட்பதும் யாம் இலம் காள வண்ண
வண்டு உண் துழாய்ப் பெருமான், மதுசூதனன், தாமோதரன்
உண்டும் உமிழ்ந்தும் கடாயமண் நேர் அன்ன ஒள் நுதலே! 2526

## தலைவன் பாகனிடம் கூறல்

ஒள் நுதல் மாமை ஒளி பயவாமை விரைந்து நம் தேர்
நண்ணுதல் வேண்டும், வலவ! கடாகின்று தேன் நவின்ற
விண் முதல் நாயகன் நீள் முடி வெண் முத்த வாசிகைத்தாய்
மண்முதல் சேர்வுற்று அருவிசெய்யாநிற்கும் மா மலைக்கே. 2527





## நெஞ்சைத் தூது விட்ட தலைவி இரங்குதல்

*மனம் பேதமை உடையது என்றும் அந்தரங்கமானதென்றும் நம்பி, ஒரு காரியத்துக்காகத் தூது விடக் கற்றவர் அத்துணிவை விடவேண்டியது தான். ஏனென்றால் இராவணன் மார்பைப் பிளந்த பெருமான் திருவடிகளில் நான் என் நெஞ்சைத் தூது விட்டதும் அது போய்த் திடம் ஆகி, எம்மைக் கைவிட்டு இன்று வரையில் அவரையே தொடர்ந்து திரிகின்றது.* **2523**

## செவிலி இரங்குதல்

*வாடை உலவுகிறது; சந்திரனோ கொடிய நெருப்பைக் கொட்டுகிறது. வாடைக் காற்றும் நெருப்பை வீசுகிறது. இப்பெண், கண்ணபிரானின் பரமபதத்தைத் தொழ ஆசைப்பட்டுக் கிடையாமல், மெலிந்தாள். கைவளை கழல்கிறது. குளிர்ந்த திருத்துழாய்க்கு ஆசைப்பட்டுக் கிடையாததால்உடம்பு பசலை பூக்கிறது. இனி மெல்லியளான என் மகளுக்கு என்னதான் நடக்குமோ?* **2524**

## பல்லிக் குரல் கேட்டதைத் தலைவி கூறுகிறாள்

*மென்மையான உடல் உடைய புழு, புண்ணிலே வெளி வந்து ஊர்ந்தால் உலகியல்பு தெரியுமோ? அதே போல் நானும் அறியாதவள்; என்னைக் கொண்டு திருமால் தன்னைப் பாடிக் கொண்டான். பல்லியின் சொல்லையும் நன்மையாகக் கொள்வது போல் என் சொல்லையும் ஏற்று அவன் வருவான் என்று தேறி இருக்கிறேன்.* **2525**

## தலைவி இருளுக்கு ஆற்றாது பேசல்

*கறுத்த நிறமும், வண்டுகள் தேன் உண்ணப் பெற்ற திருத் துழாய் மாலையும் உடைய பெருமான், மதுசூதனன் என்றும் தாமோதரன் என்றும் பெயருடையவன். அவன் உண்டு, உமிழ்ந்து காத்த பூமியின் அழகை ஒத்த ஒளி முகம் உடையவளே! முன்பும் பல பல இருட்பொழுதுகளைக் கண்டுள்ளோம். இந்தப் பரந்த இருள் பொழுது போல, நாம் வேறொரு பொருளைக் கண்டதும் இல்லை. கேட்டதும் இல்லை.* **2526**

## தலைவன் பாகனிடம் கூறல்

*பாகனே! அழகிய முகமுடைய என் தலைவி மேனியில் பசலை படர்வதன் முன் விரைந்து தேரைச் செலுத்து. பரமபத நாதன் தன் முடியில் தரித்துள்ள வெண்ணிற முத்து மாலை போல, அடிவாரத்தில் நீர்ப் பெருக்கு ஓடும், பெரிய திருமலைக்குத் தேரை விரைந்து ஓட்டு.* **2527**

### தலைவி கடலோசை கேட்டு வருந்துதல்

மலை கொண்டு மத்தா, அரவால் சுழற்றிய மாயப் பிரான்
அலை கண்டு கொண்ட அமுதம் கொள்ளாது கடல் பரதர்
விலை கொண்டு தந்த சங்கம் இவை, வேரித் துழாய் துணையாத்
துலை கொண்டு தாயம் கிளர்ந்து கொள்வான் ஒத்து அழைக்கின்றதே. 2528

### கால மயக்கு

அழைக்கும் கருங் கடல் வெண் திரைக் கைக் கொண்டு போய், அலர்வாய்
மழைக்கண் மடந்தை அரவு அணை ஏற, மண் மாதர் விண்வாய்
அழைத்துப் புலம்பி, முலைமலைமேல் நின்றும் ஆறுகளாய்,
மழைக் கண்ண நீர் திருமால் கொடியான் என்று வார்கின்றதே. 2529

### கட்டுவிச்சி கூறுதல்

வார் ஆயின முலையாள் இவள்; வானோர் தலைமகன் ஆம்
சீர் ஆயின தெய்வ நல் நோய் இது; தெய்வத் தண் அம் துழாய்த்
தார் ஆயினும் தழை ஆயினும், தண் கொம்பு அது ஆயினும், கீழ்
வேர் ஆயினும், நின்ற மண் ஆயினும் கொண்டு வீசுமினே. 2530

### வண்டு விடு தூது

வீசும் சிறகால் பறத்திர்; விண் நாடு நுங்கட்கு எளிது;
பேசும் படி அன்ன பேசியும் போவது நெய் தொடு உண்டு.
ஏசும்படி அன்ன செய்யும் எம் ஈசர் விண்ணோர் பிரானார்
மாசு இல் மலர் அடிக்கீழ் எம்மைச் சேர்விக்கும் வண்டுகளே. 2531

### நலம் பாராட்டுதல்

வண்டுகளோ! வம்மின்; நீர்ப் பூ நிலப் பூ மரத்தில் ஒண் பூ
உண்டு களித்து உழல்வீர்க்கு ஒன்று உரைக்கியம்; ஏனம் ஒன்றாய்
மண் துகள் ஆடி வைகுந்தம் அன்னாள் குழல்வாய் விரை போல்
விண்டு கள் வாரும் மலர் உளவோ நும் வியலிடத்தே? 2532





### தலைவி கடலோசை கேட்டு வருந்துதல்

*மந்தரமலை மத்தாக, வாசுகிப் பாம்பு கயிறாக, மாயப்பிரான் திருமால் கடலைக் கடைந்த பொழுது அமுதம் வெளிவந்தது. கடல் அந்த அமுதத்தை மீளவும் எடுத்துக் கொள்ளாமல் பெருமானின் மணம் மிகுந்த திருத்துழாயைத் துணையாகக் கொண்டு என்னிடம் பங்காளிச் சண்டை போடுகிறது. நெய்தல் நிலத்தவர்களிடம் நான் வாங்கிய கைவளையல்களை வாங்கிக் கொள்வது போலப் போருக்கு அழைக்கிறது.* 2528

### கால மயக்கு

*குளிர்நத கண்களை உடைய மலர்மகளான திருமகளைப் பாற்கடல் அழைத்து, வெண்மையான அலைக் கரங்களால் எடுத்து, அரவணையில் ஏற உதவுகிறது. இதைக் கண்டு பொறுக்க முடியாத பூமிப்பிராட்டி, வானமேகம் மூலம் அழுகுரலை எழுப்பி மழை நீரான கண்ணீரைப் பெருக விடுகிறாள். முலைகளாகிய மலைகளில் ஓடும் ஆறு, 'திருமால் கொடியவன்' என்று எங்கும் கூறுவது போல் உள்ளது.* 2529

### கட்டுவிச்சி கூறுதல்

*கச்சணிந்த மார்புடைய இப்பெண்ணின் நோய் நித்திய சூரிகள் தலைவன் குணத்தில் ஈடுபட்ட காதல் ஆகும். இதற்கு மருந்தாக அத் தெய்வம் சூடிய திருத்துழாய் மாலையையோ அதன் இலையையோ, கிளையையோ, வேரையோ கொண்டு வரவேண்டும். இல்லையானால் அத்துழாய் வளர்ந்த இடத்தின் மண்ணையாவது கொண்டு வரவேண்டும். இவற்றுள் எதைக் கொண்டு வீசினாலும் அக் காற்றால் நோய் தீரும்.* 2530

### வண்டு விடு தூது

*பலரும் ஏசும்படி நெய்யைக் கவர்ந்து உண்ட எம் தலைவர், விண்ணோர் பிரானின் திருவடிக்கீழ் எம்மைச் சேர்க்க வல்ல வண்டுகளே! உம் வீசும் சிறகால் பறந்து செல்வீர். பரமபதமும் உமக்கு எளிது. நீங்கள் தூதுக்குப் புறப்படும் முன், நீங்கள் பேசப்போவதை ஒருமுறை பேசிக் காட்டுங்கள்.* 2531

### நலம் பாராட்டுதல்

*வண்டுகளே! வாருங்கள் நீர்ப்பூ, நிலப்பூ, மரப்பூ ஆகியவற்றில் தேன் அருந்தும் உங்களிடம் ஒன்று கூறுகிறேன். என் தலைவியின் கூந்தல், வராகமாய்ப் பூமியின் தூளியை அளைந்த பகவானின் பரமபதத்தை ஒத்தது. அக்கூந்தலின் இயற்கை மணம் போலே, மணம் வீசும் பூக்களை அகன்ற இடங்களில் நீங்கள் கண்டது உண்டோ?* 2532

### தலைவன் கலந்ததைத் தோழியிடம் தலைவி கூறுதல்

வியலிடம் உண்ட பிரானார் விடுத்த திருவருளால்
உயல் இடம் பெற்று உய்ந்தம்; அஞ்சலம்; தோழி! ஓர் தண் தென்றல் வந்து
அயலிடை யாரும் அறிந்திலர் -அம் பூந்துழாயின் இன் தேன்
புயலுடை நீர்மையினால் தடவிற்று என் புலன், கலனே. 2533

### தலைவன் தோழனிடம் எதிர் வார்த்தை பேசுதல்

புலக் குண்டலப் புண்டரீகத்த போர்க் கெண்டை வல்லி ஒன்றால்
விலக்குண்டு உலாகின்று, வேல் விழிக்கின்றன; கண்ணன் கையால்
மலக்குண்டு, அமுதம் சுரந்த மறி கடல் போன்று அவற்றால்
கலக்குண்ட நான்று கண்டார் எம்மை யாரும் கழறலரே. 2534

### தோழி தலைவன் பெருமையைக் கூறுதல்

கழல் தலம் ஒன்றே நிலம் முழுது ஆயிற்று; ஒரு கழல் போய்
நிழல் தர எல்லா விசும்பும் நிறைந்தது; நீண்ட அண்டத்து
உழறு அலர் ஞானச் சுடர் விளக்காய் உயர்ந்தோரை இல்லா
அழறு அலர் தாமரைக் கண்ணன் என்னோ, இங்கு அளக்கின்றதே? 2535

### செவிலி இரங்குதல்

அளப்ப அரும் தன்மைய ஊழி அம் கங்குல்; அம் தண்ணம் துழாய்க்கு
உளப் பெருங் காதலின் நீளிய ஆய் உள; ஓங்கு முந்நீர்
வளப் பெரு நாடன் மதுசூதனன் என்னும் வல் வினையேன்
தளப் பெரு நீள் முறுவல், செய்ய வாய தட முலையே. 2536

### தலைவியின் இளமைக்குச் செவிலி இரங்குதல்

முலையோ முழு முற்றும் போந்தில; மொய் பூங் குழல் குறிய;
கலையோ அரை இல்லை; நாவோ குழறும்; கடல் மண் எல்லாம்
விலையோ என மிளிரும் கண்; இவள் பரமே பெருமான்
மலையோ திருவேங்கடம் என்று கற்கின்ற வாசகமே? 2537





### தலைவன் கலந்ததைத் தோழியிடம் தலைவி கூறுதல்

*அகன்ற உலகங்களை உண்டு காத்த பெருமானின் திருஅருளால், உய்வு பெற்றோம். இனி வாடைக்கு அஞ்சோம். தோழி! குளிர்ந்த தென்றல் வந்து எவரும் அறியாதபடி, திருத்துழாய்ப் பூவின் தேன் துளிகளை மழைத் துளிகள் போல், என் உடல் உறுப்புகளிலும் அணிகலன்கள் மீதும் தடவுகின்றது.* 2533

### தலைவன் தோழனிடம் எதிர் வார்த்தை பேசுதல்

*அழகிய குண்டலங்களை உடைய தலைவியின் முகத் தாமரையில் உள்ள கெண்டை மீன்களாகிய கண்கள், மூக்காகிய கொடியால் விலக்கப்பட்டு உலாவி, வேலாயுதம் போல் என்னைக் குத்துகின்றன. கண்ணன் கைகளால் கடைந்த, அமுதம் வெளியிட்ட கடல்போல், அக் கண்களால் நான் கலக்குண்டேன். அவற்றைப் பார்த்தவர் எவரும் எம்மைக் குற்றம் சொல்ல மாட்டார்கள்.* 2534

### தோழி தலைவன் பெருமையைக் கூறுதல்

*உலகளந்தவனின் ஒரு திருவடி மட்டும் பூமி முழுவதும் பரந்தது. மற்றொரு திருவடி யாவர்க்கும் நிழலாய் ஆகாயத்தில் நிறைந்தது. பரமபத நாதனாய், ஞான ஒளிக்கு இருப்பிடமான விளக்காய் உள்ள எம்பெருமானை விட உயர்ந்தவர் இல்லை. சேற்றில் மலர்ந்த தாமரைப் பூப் போன்ற கண்களுடைய திருமால் இவ்வுலகில் இனி அளக்க வேண்டியது உண்டோ!* 2535

### செவிலி இரங்குதல்

*முல்லைப் பூப் போன்ற பற்களும், சிவந்த வாயும், பெரிய மார்புகளையும் உடைய இப்பெண் இரவெல்லாம் வருந்துவதைக் காணும் தீவினை உடையேன் நான். இவள், “வள நாடுடைய மதுசூதனன் என் நாயகன். அவன் திருத்துழாய்க்கு ஆசைப்பட்ட என் காதலை விடவும் இந்த இரவு நீண்டு போகிறதே” என்று புலம்புகிறாள்.* 2536

### தலைவியின் இளமைக்குச் செவிலி இரங்குதல்

*என் சிறுமிக்கு முலைகளோ முழுதுமாய் வளரவில்லை. கூந்தல் மயிரோ குட்டையாகவே உள்ளன. அரையில் ஆடையும் நிற்கவில்லை. நாவிலோ மழலையே உள்ளது. கண்களோ நிலையான பார்வை பெறாமல், கடல் சூழ்ந்த உலகுக்கு விலையாகப் பிறழ்கின்றன. இச்சிறுமியா, திருவேங்கடமலை என் தலைவன் இடம் என்று கூறப் பயின்றாள்?* 2537

**தோழி தலைவன் நீர்மையைத் தலைவிக்குக் கூறுதல்**

வாசகம் செய்வது நம்பரமே தொல்லை வானவர் தம்
நாயகன், நாயகர் எல்லாம் தொழும் அவன் ஞாலம் முற்றும்
வேய் அகம் ஆயினும் சோராவகை இரண்டே அடியால்
தாயவன் ஆய்க் குலமாய் வந்து தோன்றிற்று நம் இறையே? 2538

**தலைவியின் ஆற்றாமையைத் தோழி தலைவனுக்குக் கூறுதல்**

இறையோ இரக்கினும் ஈங்கு ஓர் பெண்பால் எனவும் இரங்காது
அறையோ என,நின்று அதிரும் கருங்கடல்; ஈங்கு இவள் தன்
நிறையோ இனி உன் திரு அருளால் அன்றி காப்பு அரிதால்;
முறையோ அரவு அணைமேல் பள்ளி கொண்ட முகில் வண்ணனே? 2539

**தலைவி தோழியிடம் தலைவன் இயல்பை எடுத்துக் கூறுதல்**

வண்ணம் சிவந்துள வான் நாடு அமரும் குளிர் விழிய
தண் மென் கமலத் தடம் போல், பொலிந்தன தாம் இவையோ
கண்ணன் திருமால் திருமுகம்-தன்னொடும் காதல் செய்தேற்கு
எண்ணம் புகுந்து அடியேனொடு இக் காலம் இருக்கின்றவே. 2540

**தலைவி தலைவன் திருநாமம் கூறல்**

இருக்கு ஆர் மொழியால் நெறி இழுக்காமை உலகு அளந்த
திருத் தாள் இணை நிலத்தேவர் வணங்குவர்; யாமும் அவா
ஒருக்கா வினையொடும் எம்மொடும் நொந்து கனி இன்மையின்
கருக்காய் கடிப்பவர் போல், திருநாமச் சொல் கற்றனமே. 2541

**தலைவியின் கண்கள் கவர்ந்ததைத் தலைவன் கூறல்**

கற்றுப்பிணை மலர் கண்ணின் குலம் வென்று ஒரோ கருமம்
உற்றுப் பயின்று செவியோடு உசாவி உலகம் எல்லாம்
முற்றும் விழுங்கி உமிழ்ந்த பிரானார் திருவடிக்கீழ்
உற்றும் உறாதும் மிளிர்ந்த கண் ஆய் எம்மை உண்கின்றவே. 2542





**தோழி தலைவன் நீர்மையைத் தலைவிக்குக் கூறுதல்**

பழைமையான நித்திய சூரிகளுக்குத் தலைவனும், இறைமை பாராட்டும் பிரமன் முதலியோரால் வணங்கப்பெறுபவனும், ஆன எம்பெருமான் உலகம் முழுவதையும் ஒரு மூங்கில் கோல் நாட்டக் கூட இடம் இல்லாதபடி, இரண்டே அடிகளால் அளந்தான். இந்த நம் இறைவன் இடையர் குலத்தில் தோன்றி வளர்ந்த நீர்மைக் குணத்தை ஏற்றிப் பேசுவது நம்மால் ஆகக் கூடிய காரியமோ? ஆகாது. 2538

**தலைவியின் ஆற்றாமையைத் தோழி தலைவனுக்குக் கூறுதல்**

எத்தனை தான் வேண்டினாலும் இவள் ஒரு பெண்ணே எனறு இரக்கம் கொள்ளாமல் கருங்கடல் அறை கூவுவது போலக் கூவுகிறது. இது என்ன கொடுமை! ஆதிசேஷன்மீது பள்ளி கொண்டவனே! முகில் வண்ணா! இங்கு இவள் நிறை குணம் இனிமேல் உன் திருவருளால் அன்றி வேறு எதாலும் பாதுகாக்க முடியாது. இவளை நீ அலட்சியம் செய்வது முறையோ? 2539

**தலைவி தோழியிடம் தலைவன் இயல்பை எடுத்துக் கூறுதல்**

என் தலைவனின் கண்கள் சிவந்து அழகானவையாய்ப் பரமபதமும் மகிழ்ச்சி அடையும்படி பார்வை கொண்டதாய், குளிர்ந்த தாமரைக் குளம் போல் உள்ளன. கண்ணனாக அவதாரம் செய்த திருமாலின் திருமுகத்திலே நான் வேட்கை கொண்டேன். அம்முகம் என் நெஞ்சில் புகுந்து இடம் பெற்றது. எப்பொழுதும் நீங்காமல் என்னுடன் உள்ளது. 2540

**தலைவி தலைவன் திருநாமம் கூறல்**

பூவுலகில் உள்ள தேவர்கள் எனத் தகும் அந்தணர், வேத மந்திரங்கள் கொண்டு முறை தவறாமல் உலகளந்த திருவடிகளை வணங்குவார். நாமும் நம் ஆசையை அடக்கமுடியாமல் வினையையும் எம்மையும் நொந்தபடி, பழம் கிடைக்காதவர் பிஞ்சைத் தின்பது போல் அவன் திருநாமங்களைச் சொல்லக் கற்றோம். 2541

**தலைவியின் கண்கள் கவர்ந்ததைத் தலைவன் கூறல்**

இவளுடைய கண்கள் இளம்பெண்மானின் பார்வையை வென்று, ஒரு செயலில் பொருந்தி ஆலோசிப்பனவாய், நன்மை, தீமைகளில் தடுமாறுபவையாய்ப் பிறழ்கின்றன. பிரளயத்தில் உலகங்களை உண்டு காத்த பெருமான் திருவடிக் கீழ், இவளுடைய கண்கள் எம்மைக் கவர்ந்து விட்டன. 2542

### தலைவன் தோழன் பேச்சை மறுத்தல்

உண்ணாது உறங்காது உணர்வுறும் எத்தனை யோகியர்க்கும்
எண் ஆய் மிளிரும் இயல்வின ஆம் எரி நீர், வளி, வான்,
மண் ஆகிய எம் பெருமான் தனது வைகுந்தம் அன்னாள்
கண் ஆய், அருவினையேன் உயிர் ஆயின, காவிகளே. 2543

### தலைவன் தன் வலியழிவு உரைத்தல்

காவியும் நீலமும், வேலும், கயலும் பலபல வென்று
ஆவியின் தன்மை அளவு, அல்ல பாரிப்பு அசுரர்ச் செற்ற
மா வியம் புள் வல்ல மாதவன் கோவிந்தன் வேங்கடம் சேர்
தூவி அம் பேடை அன்னாள் கண்கள் ஆய துணைமலரே. 2544

### கால மயக்கு

மலர்ந்தே ஒழிந்தில-மாலையும், மாலைப் பொன் வாசிகையும்
புலம் தோய் தழைப் பந்தர் தண்டு உற நாற்றி; பொருகடல் சூழ்
நிலம் தாவிய எம் பெருமான் தனது வைகுந்தம் அன்னாய்!
கலந்தார் வரவு எதிர் கொண்டு வன் கொன்றைகள் கார்த்தனவே. 2545

### தலைவியைத் தோழி ஆற்றுதல்

கார் ஏற்று இருள் செகில் ஏற்றின் சுடருக்கு உளைந்து வெல்வான்
போர் ஏற்று எதிர்ந்தது புன் தலை மாலை; புவனி எல்லாம்
நீர் ஏற்று அளந்த நெடிய பிரான் அருளா விடுமே?
வார் ஏற்று இளமுலையாய்! வருந்தேல் உன் வளைத்திறமே. 2546

### தலைவி இரவின் நெடுமைக்கு இரங்குதல்

வளை வாய்த் திருச் சக்கரத்து எங்கள் வானவனார் முடிமேல்
தளை வாய் நறுங் கண்ணித் தண் அம் துழாய்க்கு வண்ணம் பயலை
விளைவான் மிக வந்து நாள், திங்கள் ஆண்டு ஊழி நிற்க எம்மை
உளைவான் புகுந்து, இது ஓர் கங்குல் ஆயிரம் ஊழிகளே. 2547





### தலைவன் தோழன் பேச்சை மறுத்தல்

*என் காதலியின் கண்கள், தீ, நீர், காற்று, வானம் , பூமி ஆகிய வடிவான எம்பெருமானின் பரமபதம் போல், இன்ப வடிவாய்ச் செங்கழு நீர்ப் பூக்களை ஒத்தவை. தீவினையேனின் உயிராக உள்ள இக் கண்கள், உண்ணாது, உறங்காது, தியான யோகம் செய்யும் முனிவர்களையும் கவர வல்லவை என்றால் அவற்றின் அழகை என்னென்பேன்.* 2543

### தலைவன் தன் வலியழிவு உரைத்தல்

*அசுரர்களை அழித்தவனும் பெரிய கருடன் மீது ஏறுபவனும் ஆன எம்பெருமானின் திருவேங்கட மலையில் என் காதலி வாழ்கிறாள். சிறகுடைய அன்னப்பேடை போன்ற அவள் கண்கள் இரு தாமரைப் பூக்கள் போலவும், செங்கழுநீர் நீலம், வேல், கயல் மீன் ஆகியவற்றை வென்றும், என்னைக் காத்து வருத்துகின்றன. என் உயிரின் தன்மைக்கு ஏற்ற அளவல்ல இப்பாதிப்பு.* 2544

### கால மயக்கு

*கடல் சூழ்ந்த உலகத்தைத் தாவி அளந்தவனின் வைகுந்தத்தை ஒத்தவனே! கார் காலம் வராதபொழுது, வலிய கொன்றை மரங்கள் கருவடைந்து, அரும்ப ஆரம்பிக்கின்றனவே அன்றிச் சுருள் சுருளாக கிளைகளுடன் கூடிய தழைகளாகிய பந்தலிலே முற்றிலும் பூத்துக் குலுங்கவில்லை. இன்னும் அக்காலம் வரவில்லை.* 2545

### தலைவியைத் தோழி ஆற்றுதல்

*கறுத்த இருளாகிய எருது, சிவந்த சூரியனாகிற எருதைத் தாக்கி வெல்லும் பொருட்டுப் போர் செய்யவந்தது. மாவலியிடம் நீர் ஏற்று, உலகங்களை அளந்த நெடிய திருமால் இம் மாலைப் பொழுதிலே அருள் செய்யாது வருவானோ? இக் கனிந்த மார்புடைய இளைய பெண்ணே! உன் கைவளை பற்றி வருந்தாதே.* 2546

### தலைவி இரவின் நெடுமைக்கு இரங்குதல்

*வட்டமான நுனி உடைய சக்கரம் ஏந்திய பரமபத நாதன் திருமுடியில் உள்ள மணம் வீசும் திருத்துழாய் மாலைக்கு ஆசைப்பட்டு, நான் என் மாமை நிறத்தை இழந்து பசலை படரப் பெற்றேன். எம்மை அழிக்க நெருங்கிய இந்த ஓர் இரவே, நாளாகவும், மாதமாயும், வருடமாயும், கற்பமாயும் தோன்றி ஆயிரம் கற்பகாலமாக நீள்கிறது.* 2547

### செவிலித் தாயின் கோபத்தைத் தலைவி தோழியிடம் கூறுவது

ஊழிகள் ஆய், உலகு ஏழும் உண்டான் என்றிலம்; பழம் கண்டு,
ஆழி களாம் பழம் வண்ணம் என்றேற்கு அஃதே கொண்டு அன்னை
நாழ் இவளோ என்னும்; ஞாலம் உண்டான் வண்ணம் சொல்லிற்று என்னும்
தோழிகளோ! உரையீர் எம்மை அம்மனை சூழ்கின்றவே. 2548

### தலைவி இளம்பிறை கண்டு தளர்தல்

சூழ்கின்ற கங்குல் சுருங்கா இருளின் கருந் திணிம்பைப்
போழ்கின்ற திங்கள் அம் பிள்ளையும் போழ்க; துழாய்மலர்க்கே
தாழ்கின்ற நெஞ்சத்து ஒரு தமியாட்டியேன் மாமைக்கு இன்று
வாழ்கின்ற ஆறு இதுவோ வந்து தோன்றிற்று வாலியதே? 2549

### மாலையில் வருந்தும் தலைவிக்குத் தோழி இரங்குதல்

வால் வெண் நிலவு உலகு ஆரச் சுரக்கும் வெண்திங்கள் என்னும்
பால் விண் சுரவி சுர முதிர் மாலை, பரிதி வட்டம்
போலும் சுடர் அடல் ஆழிப் பிரான் பொழில் ஏழ் அளிக்கும்
சால்பின் தகைமைகொலாம் தமியாட்டி தளர்ந்ததுவே? 2550

### தலைவி தென்றல் வீசவும் மகிழ்தல்

தளர்ந்தும் முறிந்தும் வரு திரைப் பாயல் திரு நெடுங் கண்
வளர்ந்தும் அறிவுற்றும் வையம் விழுங்கியும், மால் வரையைக்
கிளர்ந்து மறிதர, கீண்டு எடுத்தான் முடி சூடு துழாய்
அளைந்து உண் சிறு பசுந் தென்றல் அந்தோ வந்து உலாகின்றதே! 2551

### தலைவன் தலைவியின் ஊர்பற்றி விசாரித்தல்

உலாகின்ற கெண்டை ஒளி அம்பு எம் ஆவியை ஊடுருவக்
குலாகின்ற வெஞ்சிலை வாள் முகத்தீர்! குனி சங்கு இடறிப்
புலாகின்ற வேலைப் புணரி அம் பள்ளி அம்மான் அடியார்
நிலாகின்ற வைகுந்தமோ வையமோ-நும் நிலையிடமே? 2552





### செவிலித் தாயின் கோபத்தைத் தலைவி தோழியிடம் கூறுவது

*தோழிகளே! என் நாயகன் ஊழிக் காலத்தில் உலகேழும் உண்டவன் என்று அவன் பெயரை வெளிப்படையாகக் கூறவில்லை. களாப்பழத்தைக் கடல்நிறம் போல் உள்ளது என்று நான் குறிப்பாகக் கூறியதை என் தாய் புரிந்து கொண்டு 'இப்பெண் அடங்காதவள், என்று என்னை வேறுபட எண்ணுகிறாள். உலகம் உண்டவன் நிறத்தைப் பழம் மூலம் குறிப்பிட்டேன் என்று குறைப்படும் அன்னையை, சமாதானம் செய்யுங்கள்.* 2548

### தலைவி இளம்பிறை கண்டு தளர்தல்

*சூழ்கின்ற இரவில், சுருங்காத இருளின் கறுத்த திண்மையைப் பிளக்கும் இளஞ்சந்திரன் என்னையும் பிளக்கட்டும். அவன் திருத்துழாயைப் பெறத் தாழ்கின்ற என் நெஞ்சுடன் தனியாக உள்ள என் உடல் நிறமும் மாறுகிறது. இதை இன்னும் குறைக்க வந்த சந்திரன் எனக்கு என்ன வாழ்வு அளிக்கிறான்? போதும் இவன் துன்பம்.* 2549

### மாலையில் வருந்தும் தலைவிக்குத் தோழி இரங்குதல்

*வானில் உலாவும் வெண்மையான சந்திரனாகிய பசு, நிலவாகிய பாலைச் சுரந்து கொட்டும் மாலைப் பொழுது வந்தது. நாயகன் வராததால் தனிமையில் இவள் தளர்ச்சி அடைகிறாள். சூரிய மண்டலம் போன்ற ஒளி உடைய சக்கரத்தை ஏந்திய அத் தலைவன் ஏழுலகங்களையும் காக்கிறான் என்றால் இவளை விட்டுவிடுவானோ?* 2550

### தலைவி தென்றல் வீசவும் மகிழ்தல்

*கொந்தளிப்பதும் அடங்குவதுமான பாற்கடலில் அறிதுயில் கொண்ட பெருமான் பிரளயத்தில் உலகங்களை உண்டு காத்தான். கோவர்த்தன மலையைத் தூக்கிய அக் கண்ணனின் திருமுடியில் சூடியுள்ள திருத்துழாயை இந்தத் தென்றல் தொட்டு அளைந்து என் மீது பட்டு, எனக்கு மகிழ்ச்சியைத் தருகிறது.* 2551

### தலைவன் தலைவியின் ஊர்பற்றி விசாரித்தல்

*ஒளி முகமுடைய பெண்களே! காதளவும் ஓடும் உங்கள் கெண்டை மீன் கண்கள் அம்பு போல என் உயிரை ஊடுறுவுகின்றன. உங்கள் புருவங்கள் வில் போல் உள்ளன. வளைந்த சங்குகள் பாய்ந்து மீன் வாடை வீசும் கடலில் பள்ளி கொண்டவனும், நித்திய சூரிகள் தலைவனுமானவனின் ஸ்ரீவைகுண்டம் உங்கள் வாழ்விடமா? அல்லது இந்த நிலவுலகமோ உங்கள் வாழ்விடம்?* 2552

### தலைவி சந்திரனைக் கண்டு வருந்துதல்

இடம் போய் விரிந்து இவ் உலகு அளந்தான்எழில் ஆர் தண் துழாய்
வடம் போது இனையும் மட நெஞ்சமே! நங்கள் வெள் வளைக்கே
விடம் போல் விரிதல் இது வியப்பே - வியன் தாமரையின்
தடம் போது ஒடுங்க மெல் ஆம்பல் அலர்விக்கும் வெண்திங்களே? 2553

### மாலைப் பொழுதுக்கு ஆற்றாது தலைவி இரங்குதல்

திங்கள் அம் பிள்ளை புலம்ப தன் செங்கோல் அரசு பட்ட
செங் களம் பற்றி நின்று எள்கு புன் மாலை, தென்பால் இலங்கை
வெங் களம் செய்த நம் விண்ணோர் பிரானார் துழாய் துணையா
நங்களை மாமை கொள்வான், வந்து தோன்றி நலிகின்றதே. 2554

### தலைவன் ஆற்றலை எண்ணித் தலைவி நெஞ்சழிகிறாள்

நலியும் நரகனை வீட்டிற்றும், வாணன் திண் தோள் துணித்த
வலியும் பெருமையும் யாம் சொல்லும் நீர்த்து அல்ல; மை வரை போல்
பொலியும் உருவிற் பிரானார் புனை பூந்துழாய் மலர்க்கே
மெலியும் மட நெஞ்சினார் தந்து போயின வேதனையே. 2555

### இடைவிடாத சேர்த்தி இல்லையே என்று தலைவி இரங்குதல்

வேதனை, வெண்புரி நூலனை, விண்ணோர் பரவ நின்ற
நாதனை, ஞாலம் விழுங்கும் அநாதனை, ஞாலம் தத்தும்
பாதனை பாற்கடல் பாம்பு அணைமேல் பள்ளிகொண்டருளும்
சீதனையே தொழுவார் விண்ணுளாரிலும் சீரியரே. 2556

### பிரிவு ஆற்றாத தலைவி மாலைப் பொழுதுக்கு இரங்குதல்

சீர் அரசு ஆண்டு தன் செங்கோல் சில நாள் செலீஇக் கழிந்த
பார் அரசு ஒத்து மறைந்தது நாயிறு; பார் அளந்த
பேர் அரசே! எம் விசும்பு அரசே! எம்மை நீத்து வஞ்சித்த
ஓர் அரசே! அருளாய் இருளாய் வந்து உறுகின்றதே. 2557





### தலைவி சந்திரனைக் கண்டு வருந்துதல்

*மடநெஞ்சே! எங்கும் போய் வளர்ந்து இவ்வுலகத்தை அளந்தவனின் குளிர்ந்த திருத் துழாய் மாலையைப் பெற வருந்துகிறாயே? பெரிய தாமரைப் பூ குவியவும், ஆம்பல் மலரவும் செய்யும் வெண்மையான சந்திரன் நமது வெளுத்த வளைகளைக் கழலச் செய்யவே நஞ்சு போன்ற இந்த ஒளியை வீசுகிறானோ!* 2553

### மாலைப் பொழுதுக்கு ஆற்றாது தலைவி இரங்குதல்

*ஒளி அரசு செய்த செங்கோல் சூரியன், மறைந்ததை இறந்ததாகக் கொண்ட சந்திரன் அழ, அச்சூரியனின் மனைவி யாகிய மாலை நேரப் பெண், செவ்வானப் போர்க்களத்தில் வருந்துகிறாள். தென் திசை இலங்கையில் போர் செய்த தேவதேவனின் திருத்துழாயை இம் மாலை நங்கை துணையாகக் கொண்டு, நமது மாமை நிறத்தைக் கவர எதிரில் தோன்றி வருந்துகிறாள்.* 2554

### தலைவன் ஆற்றலை எண்ணித் தலைவி நெஞ்சழிகிறாள்

*என் நாயகன், உலகை வருத்திய நரகாசுரனைக் கொன்றதும் பாணாசுரனின் தோள்களை அறுத்துத் தள்ளியதும் அப்போரில் தலைமை ஏற்றதும் ஆகியவற்றை நாம் புகழ்ந்து சொல்லி முடிக்க இயலாது. மை மலைபோல் விளங்கும் அவர் சாத்தியுள்ள திருத்துழாய் மாலையைப் பெற ஆசைப்படும் எம் நெஞ்சு கொடுத்த பிரிவுத் துன்பங்கள் இவை.* 2555

### இடைவிடாத சேர்த்தி இல்லையே என்று தலைவி இரங்குதல்

*வேதம் வல்லவனும், வெண்மையான பூணூல் அணிந்தவனும், நித்திய சூரிகளால் வணங்கப் படுபவனும் ஆன ஆதி முதல்வன் பிரளயத்தில் உலகங்களைக் காத்தான். உலகளந்த திருவடி களுடைய அவன், பாற்கடலில் ஆதி சேஷன் மீது பள்ளி கொண்டவன். அருளாளனான நீர்மைக் குணம் உடையவனைத் தொழுபவர்கள் நித்திய சூரிகளை விட மேலானவர்.* 2556

### பிரிவு ஆற்றாத தலைவி மாலைப் பொழுதுக்கு இரங்குதல்

*உலகளந்த பேரரசனே! செங்கோல் செலுத்தி ஆண்டபின் இறந்து போன சக்கரவர்த்தி போல, சூரியன் மறைந்தான். பரமபதத்தில் உள்ள எங்கள் கோமானே! நாயகனே! என்னைத் தனியே விட்டுப் பிரிந்த நீ, வஞ்சனை செய்யலாமா? இருள் நெருங்கி வருத்துவதால் நீ என்னைப் பிரியாமல் இருக்க வேண்டும்.* 2557

### வெறி விலக்குவிக்க நினைந்த தோழி இரங்குதல்

உறுகின்ற கன்மங்கள் மேலன, ஓர்ப்பிலராய் இவளைப்
பெறுகின்ற தாயர் மெய்ந் நொந்து பெறார்கொல்?துழாய் குழல்வாய்த்
துறுகின்றிலர்; தொல்லை வேங்கடம் ஆட்டவும் சூழ்கின்றிலர்;
இறுகின்றதால் இவள் ஆகம் மெல் ஆவி எரி கொள்ளவே. 2558

### தலைவி, தலைவனின் கண்ணழகைப் பாராட்டுதல்

எரிகொள் செந்-நாயிறு இரண்டு உடனே உதய மலைவாய்
விரிகின்ற வண்ணத்த எம் பெருமான் கண்கள்; மீண்டு அவற்றுள்
எரி கொள் செந் தீ வீழ் அசுரரைப் போல, எம் போலியர்க்கும்
விரிவ; சொல்லீர்-இதுவோ வையம் முற்றும் விளரியதே? 2559

### அன்றிலின் குரலுக்குத் தலைவி தளர்வதைக் கண்டு தோழி இரங்குதல்

விளரிக் குரல் அன்றில் மென் பெடை மேகின்ற முன்றில் பெண்ணை
முளரிக் குரம்பை இதுஇதுவாக முகில் வண்ணன் பேர்
கிளரிக்கிளரிப் பிதற்றும் மெல் ஆவியும் நைவும் எல்லாம்
தளரின் கொலோ அறியேன் உய்யல் ஆவது இத் தையலுக்கே? 2560

### தலைவி தலைவனைக் காண விரைதல்

தையல் நல்லார்கள் குழாங்கள் குழிய குழுவினுள்ளும்
ஐய நல்லார்கள் குழிய விழவினும் அங்கு அங்கு எல்லாம்
கைய பொன் ஆழிவெண் சங்கொடும் காண்பான் அவாவுவன் நான்
மைய வண்ணா! மணியே! முத்தமே! என்-தன் மாணிக்கமே! 2561

### மாலைப் பொழுது கண்டு தலைவி வருந்துதல்

மாணிக்கம் கொண்டு குரங்கு எறிவு ஒத்து, இருளோடு முட்டி
ஆணிப்பொன் அன்ன சுடர் படு மாலை; உலகு அளந்த
மாணிக்கமே! என் மரதகமே! மற்று ஒப்பாரை இல்லா
ஆணிப்பொன்னே! அடியேன் அடி ஆவி அடைக்கலமே. 2562





### வெறி விலக்குவிக்க நினைத்த தோழி இரங்குதல்

*இப்பெண்ணின் நோய்ப் பற்றித் தெளிவு பெறாத தாய்மார் வெறியாட்டு முதலியவற்றை நடத்துகின்றனர். இவளைப் பெற்று வளர்த்தவர் உடம்பு வருந்திப் பெறவில்லையோ? இவள் கூந்தலில் எம்பெருமான் திருத் துழாயைக் சூட்டவில்லை. தொன்மையான திருவேங்கட மலைக்கு இவளைக் கொண்டு போக ஆலோசிக்கவும் இல்லை. விரகத் தீ இவள் உடம்பைத் தாக்கி உயிரைக் கொள்ளும்படி ஆயிற்றே.* 2558

### தலைவி, தலைவனின் கண்ணழகைப் பாராட்டுதல்

*இரு சிவந்த சூரியர்கள் உதய கிரியில் தோன்றி விரிவதைப் போல எம்பெருமானின் திருக் கண்களிலிருந்து புறப்படும் தீ, அசுரர்கள் மீண்டும் மீண்டும் விழுந்து இறந்து போகச் செய்யும். அந்த நெருப்பு நல்லவர்களான எங்களையும் சுடுகிறதே! உலகை வாழ வைக்கும் எம்பெருமான் எங்களை இப்படியா வாழ வைப்பான்?* 2559

### அன்றிலின் குரலுக்குத் தலைவி தளர்வதைக் கண்டு தோழி இரங்குதல்

*முன்வாசலில் உள்ள பனை மரத்தின் மீது உள்ள முள் கூட்டில் விளரி இசைக் குரல் கொடுக்கும் அன்றில் பறவை, தன் பேடையுடன் விரும்பித் தழுவி இருக்கிறது. அதன் குரல் செவிப் பட்டதும் இவள் ஆற்றாமை மிகுகிறது. நீல மேகப் பெருமான் பெயரை இவள் வாய் திரும்பத் திரும்பப் பிதற்றுகிறது. இவள் ஆவியும் உடலும் தளர்ந்த பிறகு இப்பெண்ணுக்கு உய்வு உண்டாவதை நான் அறியேன். இவள் எவ்வாறு வாழ்வாள்?* 2560

### தலைவி தலைவனைக் காண விரைதல்

*மைந்நிறப் பெருமானே! மணியே! முத்தே! என் மாணிக்கமே! அழகிய பெண்களின் கூட்டங்கள் நடுவே யாயினும், நல்ல மனிதர்கள் திரண்ட திருவிழாவில் ஆயினும், இன்னும் பல இடங்களிலும், பொன்னிறச் சக்கரம் சங்கு ஏந்திய உன் திருக்கரங்களுடன் நீ தோன்றுவதைக் காண ஆசைப் படுகிறேன்.* 2561

### மாலைப் பொழுது கண்டு தலைவி வருந்துதல்

*உலகங்களை அளந்த மாணிக்கமே! மரகதம் போன்றவனே! ஒப்பில்லாத பத்தரை மாற்றுத் தங்கமே! கருங்குரங்கால் வீசி எறியப் படும் மாணிக்கம் தன் ஒளி தெரியாது வீழ்வது போல, ஆணிப் பொன் போன்ற ஒளியுடைய சூரியன் இருளின் மீது சாடி மறைந்தான். இந்த மாலையில் உன் அடியவளான நான் உன் பிரிவால் வருந்துகிறேன். என் உயிர் உனக்கு அடைக்கலம் ஆகிவிட்டது.* 2562

### தலைவனைப் பிரிந்த தலைவி வருந்துதல்

அடைக் கலத்து ஓங்கு கமலத்து அலர் அயன் சென்னி என்னும்
முடைக் கலத்து ஊண் முன் அரனுக்கு நீக்கியை ஆழி சங்கம்
படைக்கலம் ஏந்தியை, வெண்ணெய்க்கு அன்று ஆய்ச்சி வன்தாம்புகளால்
புடைக்கலந்தானை எம்மானை என் சொல்லிப் புலம்புவனே? 2563

### அன்றில் குரலையும் கடல் ஓசையையும் கேட்ட தலைவி ஆற்றாமைக்குத் தோழி இரங்குதல்

புலம்பும் கனகுரல் போழ் வாய அன்றிலும் பூங் கழி பாய்ந்து
அலம்பும் கன குரல் சூழ் திரை ஆழியும் ஆங்கு அவை, நின்
வலம் புள்ளது நலம் பாடும் இது குற்றமாக வையம்
சிலம்பும்படி செய்வதே திருமால்! இத் திருவினையே. 2564

### போலி கண்டு தலைவி இரங்குதல்

திருமால் உரு ஒக்கும் மேரு; அம் மேருவில் செஞ்சுடரோன்
திருமால் திருக்கைத் திருச் சக்கரம் ஒக்கும்; அன்ன கண்டும்
திருமால் உருவோடு அவன் சின்னமே பிதற்றா நிற்பது ஓர்
திரு மால் தலைக் கொண்ட நங்கட்கு எங்கே வரும் தீவினையே? 2565

### தலைவனது கலவிக்கு விரைகிற தலைவி இரங்குதல்

தீவினைக்கு அரு நஞ்சை, நல் வினைக்கு இன் அமுதத்தினை,
பூ வினை மேவிய தேவி மணாளனை புன்மை எள்காது
ஆவினை மேய்க்கும் வல் ஆயனை, அன்று உலகு ஈர் அடியால்
தாவின ஏற்றை எம்மானை, எஞ்ஞான்று தலைப்பெய்வனே? 2566

### காலம் கடந்தமைக்குத் தலைவி வருந்துதல்

தலைப்பெய்து யான் உன் திருவடி சூடும் தகைமையினால்,
நிலைப்பு எய்த ஆக்கைக்கு நோற்ற இம் மாயமும் மாயம் செவ்வே
நிலைப்பு எய்திலாத நிலைமையும் காண்தோறு அசுரர் குழாம்
தொலைப் பெய்த நேமி எந்தாய்! தொல்லை ஊழி சுருங்கலதே. 2567





### தலைவனைப் பிரிந்த தலைவி வருந்துதல்

*தாமரையில் தோன்றிய பிரமனின் தலையைச் சிவன், முடை நாற்ற முடைய பச்சைக் கலமாகக் கொண்டு யாசித்த பொழுது, அது கையை விட்டு விலகுமாறு திருமால் அருள் செய்து துன்பத்தை நீக்கினான். சங்கு, சக்கரம் ஏந்திய அவன் வெண்ணெய்க்கு ஆசைப்பட்டு, யசோதையின் கயிற்றால் அடிபட்டானே! அப்பொழுது வருந்தியவன் போலக் காட்சி தந்த இத் திருமாலைப் பற்றி நான் என்ன கூறிப் புலம்புவேன்?* 2563

### அன்றில் குரலையும் கடல் ஓசையையும் கேட்ட தலைவி ஆற்றாமைக்குத் தோழி இரங்குதல்

*திருமாலே! பிரிவில் கத்தும், பிளந்த வாயுடைய அன்றில் பறவையும், கழிகளில் புகுந்து அலையும் கடல் ஓசையும் இப்பெண்ணைத் துன்புறுத்துகின்றன. உன் வலிமையுடைய கருடனின் நன்மையைப் பாடுகிற இவள் பாட்டைக் குற்றமாகக் கொண்டு, உலகோர் முறையிடும்படி, திருமகள் போன்ற இவளை நீ துன்புறுத்தலாமா?* 2564

### போலி கண்டு தலைவி இரங்குதல்

*மேருமலை திருமால் மேனியையும், ஒளிச் சூரியன் அவன் சக்கரத்தையும் ஒத்து உள்ளன. திருமால் நினைவைத் தூண்டும் இப்போலிப் பொருள்களைப் பார்த்தே நான் அவன் வடிவத்தையும் அடையாளத்தையும் நேரில் கண்டது போல் பிதற்றுகிறேன். அவன் பெயரைப் பிதற்றும் என் வேட்கை, தீராத தலைப்பாரமாக உள்ளதே! பிரிவுக்குக் காரணமான தீவினை எனக்கு எப்படி வரக்கூடும்?* 2565

### தலைவன் கலவிக்கு விரைகிற தலைவி இரங்குதல்

*அடியார்களின் பாவங்களுக்கு நஞ்சாகவும், அவர்களின் நல்வினைத் தொண்டுக்கு அமுதமாகவும் உள்ள திருமகள் கேள்வன், சிறுமை பாராமல் பசுமேய்க்கும் இடையன் ஆனான். உலகங்களைத் தன் திருவடிகளால் அளந்த அந்த உத்தமனை நான் எப்பொழுது அடையப் பெறுவேன்? அவனைக் கண்டு அவனுடன் கலப்பேனா?* 2566

### காலம் கடந்தமைக்குத் தலைவி வருந்துதல்

*அசுரரை அழித்த சக்கரப் பெருமானே! நான் உம் திருவடித் தாமரைகளை தலைமேற் கொள்ளும்படி அடிமைத் தன்மை பெற்று நிலைப்பு அடைய, இவ்வுடம்பு என்ன தவம் செய்ததோ? இந்த ஆச்சரியம் ஒரு படியாக நிலை நின்று முடிவு பெறாத தன்மையை நினைக்கும் பொழுதெல்லாம் பழமையான காலம் சுருங்குவதில்லை.* 2567

**தலைவி தோழியிடம் தன் கற்பு உணர்த்தி அறத்தொடு நிற்றல்**

சுருங்கு உறி வெண்ணெய் தொடு உண்ட கள்வனை, வையம் முற்றும்
ஒருங்குற உண்ட பெரு வயிற்றாளனை மாவலிமாட்டு
இருங் குறள் ஆகி இசைய ஓர் மூவடி வேண்டிச் சென்ற
பெருங் கிறியானை அல்லால், அடியேன் நெஞ்சம் பேணலதே. 2568

**தலைவனைக் குறித்துத் தலைவி இரங்குதல்**

பேண நலம் இல்லா அரக்கர் முந்நீர பெரும் பதிவாய்
நீள் நகர் நீள் எரி வைத்தருளாய் என்று நின்னை விண்ணோர்,
தாள் நிலம் தோய்ந்து தொழுவர்-நின் மூர்த்தி பல் கூற்றில் ஒன்று
காணலும் ஆம்கொல்? என்றே வைகல் மாலையும் காலையுமே. 2569

**இருளைக் கண்ட தலைவி, தோழி முதலியோரை வெறுத்தல்**

காலை, வெய்யோற்கு முன் ஓட்டுக் கொடுத்த கங்குல் குறும்பர்
மாலை, வெய்யோன் பட வையகம் பாவுவர்; அன்ன கண்டும்,
காலை நல் ஞானத் துறைபடிந்து ஆடிக் கண் போது செய்து,
மாலை நல் நாவில் கொள்ளார்; நினையார் அவன் மைப்படியே. 2570

**தலைவியைப் பார்த்த தோழன் தலைவனிடம் வியந்து பேசல்**

மைப் படி மேனியும் செந்தாமரைக் கண்ணும் வைதிகரே
மெய்ப்படியால் உன் திருவடி சூடும் தகைமையினார்;
எப்படி ஊர் ஆ மிலைக்கக் குருட்டு ஆ மிலைக்கும் என்னும்
அப்படி யானும் சொன்னேன்; அடியேன் மற்று யாது என்பனே? 2571

**தலைவி அறத்தொடு நிற்கத் துணிதல்**

யாதானும் ஓர் ஆக்கையில் புக்கு அங்கு ஆப்புண்டும் ஆப்பு அவிழ்ந்தும்,
மூது ஆவியில் தடுமாறும் உயிர், முன்னமே; அதனால்
யாதானும் பற்றி நீங்கும் விரதத்தை நல் வீடு செய்யும்
மாதாவினை, பிதுவை, திருமாலை வணங்குவனே. 2572





**தலைவி தோழியிடம் தன் கற்பு உணர்த்தி அறத்தொடு நிற்றல்**

*என் நாயகன் சுருக்கிக் கட்டப்பட்ட உறிவெண்ணையை உண்ட கள்வன் ஆவான். உலகை வயிற்றில் வைத்துக் காத்த அப்பெருமான் மாவலியிடம் மூவடி மண்ணைத் தந்திரமாகக் கொண்டான். இவனை அல்லால் வேறு யாருக்கும் என் இதயம் அடிமை ஆகவில்லை; ஆகவிரும்பாது.* 2568

**தலைவனைக் குறித்துத் தலைவி இரங்குதல்**

*எம்பெருமானே! கடலை அரணாகக் கொண்டு இலங்கையில் வாழ்ந்த அரக்கர்கள் உன்னிடம் பக்தி அற்றவர். தேவர்களோ, உன்னை வணங்கி,'இலங்கையில் நெருப்பு வைத்து அழித்து எங்களைக் காக்க வேண்டும்' என்று வேண்டினார். உன் வடிவத்தின் பல பாகங்களில் ஒன்றையாவது காணும் ஆசையாலா, அல்லது தங்கள் பகையை அழிக்கவா, அவர்கள் வேண்டியது? அவர்களுக் காகவா என்னை நீ பிரிந்தாய்?* 2569

**இருளைக் கண்ட தலைவி, தோழி முதலியோரை வெறுத்தல்**

*காலையில் இருள் என்னும் சிற்றரசர்கள், சூரியப் பேரரசன் முன் நிற்க முடியாமல் ஓடுகிறார்கள். சூரியன் மறைந்தபின் உலகில் பரவுவார்கள். இத்தகைய காலை மாலையின் தன்மை யாலும், நாளின் நிலையாமை யையும் பலர் அறிவதில்லை. ஞானத் துறையில் மூழ்கி, புறச்செய்திகளைப் பாராமல் திருமாலை எண்ணி நாவால் துதித்துப் பொழுதைக் கழிக்காதவர் அவன் அழகைப் பற்றி நினைப்பதில்லை.* 2570

**தலைவியைப் பார்த்த தோழன் தலைவனிடம் வியந்து பேசல்**

*எம்பெருமானே! நீலமேனியும் தாமரைக் கண்ணும் உடைய உன் திருவடிகளை வைதிகர்களே மெய்ந்நெறியால் தம் தலையில் சூடுகிறார்கள். உயர்வில்லாத அடியேனும் உன்னைத் துதிக்கிறேன். ஊர் வந்து சேர்கிற பொழுது கண்தெரிகிற பசுக்கள் கனைப்பதைக் கேட்கும் குருட்டுப் பசுவும் கனைப்பது போல, வைதிகர்களைப் பின்பற்றி நானும் உன்னைத் துதிக்கிறேன். அடியேனால் வேறு எவ்வகையில் உன்னை வர்ணிக்க முடியும்?* 2571

**தலைவி அறத்தொடு நிற்கத் துணிதல்**

*உயிர் என்பது, பழைமையான நுட்ப உடலுடன் கூடிப் பல பிறவிகளில் உடம்புகளில் புகுந்து, கட்டுப்பட்டுப் பிறகு தொடர்பு அறுந்து, நிலைமாறி அடையும் தன்மை கொண்டது. ஆகவே நான் என் தலைவனை விட்டு விலகாதிருக்க விரும்புகிறேன். தாயும் தந்தையும் ஆன அத்திருமாலே, என்னைக் காக்கும் பொறுப்பு உடையவன். அவனே எனக்கு அடைக்கலம் என்று இருப்பேன்.* 2572

## தலைவி வெறி விலக்குவிக்க நினைத்தல்

வணங்கும் துறைகள் பல பல ஆக்கி மதி விகற்பால்
பிணங்கும் சமயம் பல பல ஆக்கி, அவைஅவை தோறு
அணங்கும் பல பல ஆக்கி நின் மூர்த்தி பரப்பி வைத்தாய்
இணங்கும் நின்னோரை இல்லாய்! நின்கண்வேட்கை எழுவிப்பனே. 2573

## தூக்கமில்லாமல் தலைவி வருந்துதல்

எழுவதும், மீண்டே படுவதும், பட்டு எனை ஊழிகள் போய்க்
கழிவதும் கண்டு கண்டு எள்கல் அல்லால் இமையோர்கள் குழாம்
தொழுவதும் சூழ்வதும் செய் தொல்லை மாலைக் கண்ணாரக் கண்டு
கழிவது ஓர் காதல் உற்றார்க்கும் உண்டோ கண்கள் துஞ்சுதலே? 2574

## தலைவனது அருமையைத் தோழி கூறல்

துஞ்சா முனிவரும் அல்லாதவரும் தொடர நின்ற,
எஞ்சாப்பிறவி இடர் கடிவான், இமையோர் தமக்கும்,
தன் சார்வு இலாத தனிப் பெரு மூர்த்தி தன் மாயம் செவ்வே,
நெஞ்சால் நினைப்பு அரிதால் வெண்ணெய் ஊண் என்னும் ஈனச் சொல்லே. 2575

## தலைவி தன் அன்புறுதியைத் தோழிக்குக் கூறல்

ஈனச் சொல் ஆயினும் ஆக: எறி திரை வையம் முற்றும்
ஏனத்து உருவாய் இடந்த பிரான், இருங் கற்பகம் சேர்
வானத்தவர்க்கும் அல்லாதவர்க்கும், மற்று எல்லா எவர்க்கும்
ஞானப் பிரானை அல்லால், இல்லை நான் கண்ட நல்லதுவே. 2576

## நூற்பயன்

நல்லார் நவில் குருகூர் நகரான், திருமால் திருப் பேர்
வல்லார் அடிக் கண்ணி சூடிய மாறன், விண்ணப்பம் செய்த
சொல் ஆர் தொடையல் இந் நூறும் வல்லார் அழுந்தார் பிறப்பு ஆம்
பொல்லா அருவினை மாய வன்சேற்று அள்ளல் பொய்ந் நிலத்தே. 2577

## திருவிருத்தம் முற்றிற்று





## தலைவி வெறி விலக்குவிக்க நினைத்தல்

*எம்பெருமானே! வெறியாடுதல் முதலிய வணங்கும் துறைகளையும், பலபல சமயங்களையும், உன் ஆணை செலுத்தும் சிறு தெய்வங்களையும் நீயே ஏற்படுத்தினாய். ஒப்பற்ற முழு முதலான உன்னைத் தலைவனாகக் கொண்ட என் கற்புக்குக் குறை வராதபடியாக நான் வெறியாடுதலைத் தவிர்ப்பேன். உன்னிடம் என் காதல் வளர்கிறது.* **2573**

## தூக்கமில்லாமல் தலைவி வருந்துதல்

*சூரியன் உதிப்பதையும் மறைவதையும் பார்த்து நாள்கள் ஊழி போன்று நீள்கின்றன. கண்ணுறக்கமோ இல்லை. நித்திய சூரிகள் சூழ்ந்து வணங்கிக் கண்ணாரக் கண்டு களிக்கும் படி எழுந்தருளிய திருமாலிடம் தீராத காதல் கொண்ட நான், அவன் அழகைக் கண்களால் கண்ட பிறகு எவ்வாறு உறங்கமுடியும்?* **2574**

## தலைவனது அருமையைத் தோழி கூறல்

*உறங்காத முனிவரும் தேவர்கள் முதலியோரும் பின்பற்றி வழிபடும்படி நிற்பவன் எம்பெருமான். அடியவரின் பிறவித் துன்பங்களைப் போக்கும் அவனுக்கு ஒப்பாக யாரும் இல்லை. தனிப்பெரு மூர்த்தியான அப்பெருமான் வெண்ணெய் திருடி உண்டான் என்னும் இழி சொல்லுக்கு இடமானான். இந்த ஆச்சரியம், மேல் உலகத்தவர்க்கும் நன்றாய் மனத்தால் நினைப்பதற்கு மிக அரியதாகும்.* **2575**

## தலைவி தன் அன்புறுதியைத் தோழிக்குக் கூறல்

*என் கொள்கை சிலர்க்குத் தாழ்ந்ததாக இருந்தாலும் சரி. பிரளய வெள்ளத்தில் பூமியை எடுத்துக் காத்த வராகப் பெருமான், கற்பக மரங்கள் உள்ள சுவர்க்க உலகத் தேவர்களுக்கும், அல்லாத மனிதர்களுக்கும் மற்றுமுள்ள, நாகர் முதலியோருக்கும், ஞானத்தை அருள்பவன். இந்த எம்பெருமானை அன்றி நான் அறிந்த நற்பொருள் வேறு இல்லை.* **2576**

## நூற்பயன்

*நல்லவர்களால் புகழப்படும் திருக்குருகூரில் அவதரித்த நம்மாழ்வார் திருமால் திருநாமங்களைப் பயிலும் பாகவதர்களின் திருவடிகளைச் சூடியபடி இந்நூறு பாசுரங்களையும் அருளினார். இவற்றைக் கற்கவல்லவர், பிறப்பு என்னும் பொல்லாத ஊழி வினையில் அழுந்த மாட்டார்கள். சகதி போன்ற பொய்யுலகில் பிறவி பெறாது முக்தியை அடையப் பெறுவர்.* **2577**

## திருவிருத்தம் முற்றிற்று



ஸ்ரீ :

# இயற்பா

நம்மாழ்வார் அருளிய

திருவாசிரியம்

# நாலாயிர திவ்யப் பிரபந்தம்

ஸ்ரீ:

# நாலாயிர திவ்வியப் பிரபந்தம்

## இயற்பா

நம்மாழ்வார் அருளிய

திருவாசிரியம் – தனியன்

காசினியோர் தாம் வாழக் கலியுகத்தே வந்து உதித்து
ஆசிரியப் பா அதனால் அருமறைநூல் விரித்தானைத்
தேசிகனைப் பராங்குசனைத் திகழ்வகுளத் தாரானை
மாசு அடையா மனத்து வைத்து மறவாமல் வாழ்த்துதுமே.

**- அருளாளப்பெருமாள் எம்பெருமானார் அருளியது.**



ஸ்ரீ:

# நாலாயிர திவ்வியப் பிரபந்தம்

## இயற்பா

நம்மாழ்வார் அருளிய

திருவாசிரியம் – தனியன் உரை

பராங்குசன் என்னும் திருநாமம் உடைய நம்மாழ்வார் உலகத்தவர் உய்வு பெறுவதற்காக இக் கலியுகத்தில் அவதாரம் செய்து, திருவாசிரியம் என்னும் பிரபந்தத்தை அருளினார். அதனால் தெரிவதற்கு அரிய வேத நூல்களையே விவரித்தார். அவரே நம்முடைய ஆச்சாரியர் ஆவார். அழகு விளங்கும் மகிழ மாலையை அணிந்துள்ள அந்த நம்மாழ்வாரைக் குற்றமற்ற நம் மனத்தில் வைத்து ஒரு பொழுதும் மறவாமல் வாழ்த்துவோம்.

**- அருளாளப்பெருமாள் எம்பெருமானார் அருளியது.**

## நம்மாழ்வார் அருளிச்செய்த திருவாசிரியம்

செக்கர் மா முகில் உடுத்து மிக்க
செஞ் சுடர்ப் பரிதி சூடி
அம் சுடர் மதியம் பூண்டு,
பல சுடர் புனைந்த பவளச் செவ்வாய்
திகழ் பசுஞ் சோதி மரகதக் குன்றம்
கடலோன் கைம்மிசைக் கண்வளர்வது போல்,
பீதக ஆடை முடி பூண் முதலா
மேதகு பல் கலன் அணிந்து சோதி
வாயவும் கண்ணவும் சிவப்ப, மீதிட்டுப்
பச்சை மேனி மிகப் பகைப்ப,
நச்சு வினைக் கவர்தலை அரவின் அமளி ஏறி,
எறி கடல் நடுவுள் அறிதுயில் அமர்ந்து,
சிவன், அயன், இந்திரன் இவர் முதல்அனைத்தோர்
தெய்வக் குழாங்கள் கைதொழக் கிடந்த
தாமரை உந்தித் தனிப் பெரு நாயக
மூவுலகு அளந்த சேவடியோயே! 2578

உலகு படைத்து உண்ட எந்தை அறை கழல்
சுடர்ப் பூந் தாமரை சூடுதற்கு அவாவு
ஆர் உயிர் உருகி உக்கநேரிய
காதல் அன்பில் இன்பு ஈன் தேறல்
அமுத வெள்ளத்தான் ஆம் சிறப்பு விட்டு,
ஒரு பொருட்கு அசைவோர் அசைக;
திருவொடு மருவிய
இயற்கை மாயாப் பெருவிறல் உலகம்
மூன்றினொடு நல் வீடு பெறினும்
கொள்வது எண்ணுமோ-தெள்ளியோர் குறிப்பே? 2579

குறிப்பில் கொண்டு நெறிப்பட உலகம்
மூன்று உடன் வணங்கு தோன்று புகழ் ஆணை
மெய் பெற நடாய தெய்வம் மூவரில்
முதல்வன் ஆகி, சுடர் விளங்கு அகலத்து
வரை புரை திரை பொர பெரு வரை வெருவர,
உரும் முரல் ஒலி மலி நளிர் கடல் பட அரவு
அரசு உடல் தட வரை சுழற்றிய
தனி மாத் தெய்வத்து அடியவர்க்கு இனி நாம்
ஆளாகவே.
இசையுங்கொல் ஊழிதோறு, ஊழி ஓவாதே? 2580





நம்மாழ்வார் அருளிச்செய்த திருவாசிரியம்

*எம்பெருமானே! பச்சையான மரகதமலை கடல் அரசன் கைமீது படுத்திருப்பது போல, நீ பள்ளி கொண்டுள்ளாய். பவளத் தடங்கள் உள்ள பச்சை மலை சிவந்த மேகத்தை அரையில் உடுத்திக் கொண்டது போல், பீதக வாடை அணிந்துள்ளாய். சிவந்த சூரியனைத் தலையில் சூடிச் சந்திரனைக் கழுத்தில் கண்டிகையாகப் பெற்றுள்ளாய். உன் வாயும் கண்களும் பச்சை மேனியும் ஒளியோங்கிக் காண, கடலில் நஞ்சைக் கக்கும் ஆதிசேஷன் மீது படுத்துள்ளாய். உன்னை, சிவன், பிரமன், இந்திரன் முதலியோர் சேவிக்கின்றனர். இவ்வாறு காட்சி தரும் தனி நாயகனே! மூன்றுலகங்களையும் அளந்த திருவடிகளை உடையவன் நீ அன்றோ.* **2578**

*உலகங்களைப் படைத்துப் பிரளயத்தில் உண்டு காத்த எம் தந்தையின் திருவடித் தாமரைகளைத் தம் தலையில் சூட ஞானிகள் ஆசைப்படுகிறார்கள். இவர்கள் பகவானைப் பக்திப் பெருக்கால் தியானித்து, தேன் போன்ற அமுத வெள்ளத்தில் மூழ்கி இன்பம் அடைவதை விட்டு விட்டு வேறு நினையார்கள். ஆனால் உலகினர் பொருளைத் தேடி அலைவது பற்றி நமக்கு வேலை இல்லை. எம்பெருமான் பக்தியில் திளைப்பவர் செல்வம், வலிமை, அரசு, வீடு ஆகிய இவற்றைப் பெற எண்ணார். தெளிந்த ஞானிகள் ஆதலால் பக்தியிலே திளைப்பது தான் இவர்கள் குறிப்பாகும்.* **2579**

*மூவுலகங்களும் நல்வழி பட்டுய்ய எம்பெருமான் திருவுள்ளம் பற்றுகிறான். உலகங்கள் ஒன்றுபட்டு வணங்கும் புகழுடைய அவன் தன் ஆணையைத் தடையின்றிச் செலுத்து கிறான். மும்மூர்த்திகளில் முதல்வனான அவன், அணிகலன்கள் அணிந்த மார்புடன் மலைகளும் அஞ்சும் ஆரவாரம் உண்டாகும் கடலில், படங்களுடைய வாசுகியின் உடலை மந்தரமலையில் சுற்றிக் கடைந்தான். அந்தத் தேவாதி தேவனுக்கு ஆட்பட்ட அடியார்களுக்கு நாம் எக்காலங்களிலும் இடை விடாமல் தொண்டு பூண வேண்டாமோ?* **2580**

ஊழிதோறு ஊழி ஓவாது வாழிய
என்று யாம் தொழ இசையுங்கொல் யாவகை
உலகமும் யாவரும் இல்லாமேல் வரும்
பெரும்பாழ்க் காலத்து இரும் பொருட்கு எல்லாம்
அரும் பெறல் தனி வித்து ஒரு தான் ஆகி,
தெய்வ நான்முகக் கொழு முளை ஈன்று
முக்கண் ஈசனொடு தேவுபல நுதலி,
மூவுலகம் விளைத்த உந்தி
மாயக் கடவுள் மா முதல் அடியே? 2581

மா முதல் அடிப் போது ஒன்று கவிழ்த்து அலர்த்தி,
மண் முழுதும் அகப்படுத்து,
ஒண் சுடர் அடிப் போது ஒன்று விண் செலீஇ
நான்முகப் புத்தேள் நாடு வியந்து உவப்ப,
வானவர் முறைமுறை வழிபட நெறீஇ
தாமரைக் காடு மலர்க் கண்ணொடு
கனி வாய் உடையதும் ஆய், இரு நாயிறு
ஆயிரம் மலர்ந்தன்ன,
கற்பகக் காவு பற்பல அன்ன,
முடி தோள் ஆயிரம் தழைத்த
நெடியோய்க்கு அல்லது அடியதோ உலகே? 2582

ஓஒ! உலகினது இயல்வே
ஈன்றோள் இருக்க மணை நீராட்டி
படைத்து,இடந்து,
உண்டு, உமிழ்ந்து அளந்து தேர்ந்து உலகு அளிக்கும்
முதல் பெருங் கடவுள் நிற்ப, புடைப் பல
தான் அறி தெய்வம் பேணுதல்; தனாது
புல்லறிவாண்மை பொருந்தக் காட்டி
கொல்வன முதலா அல்லன முயலும்
இனைய செய்கை;இன்பு துன்பு அளி
தொல் மா மாயப் பிறவியுள் நீங்காப்
பல் மா மாயத்து அழுந்துமா நளிர்ந்தே! 2583

நளிர் மதிச் சடையனும் நான்முகக் கடவுளும்
தளிர் ஒளி இமையவர் தலைவனும் முதலா
யாவகை உலகமும் யாவரும் அகப்பட;
நிலம், நீர், தீ, கால், சுடர் இரு விசும்பும்
மலர் சுடர் பிறவும் சிறிது உடன் மயங்க;
ஒரு பொருள் புறப்பாடுஇன்றி முழுவதும்
அகப்படக் கரந்து ஓர் ஆல் இலைச் சேர்ந்த எம்
பெரு மா மாயனை அல்லது
ஒரு மா தெய்வம் மற்று உடையமோ யாமே? 2584

**திருவாசிரியம் முற்றிற்று.**

.7 இ -பா





எல்லா உலகங்களும் பிராணிகளும் இல்லாத பிரளய காலத்தில், எண்ணற்ற ஆத்மாக்களுக்கு உரிய மூவகைக் காரணமும் தானே ஆகக் கொண்ட எம் பெருமான், நான்முகன் என்னும் தெய்வ முளையைப் படைத்தான். அவன் மூலம் முகக்கண்ணன் முதலிய தேவதைகளை உண்டாக்கினான். இவ்வாறு மூவுலகங்களையும் தன் கொப்பூழியில் தோற்றுவித்த ஆச்சரிய மான இறைவன், நாராயணன் திருவடிகளையே ஊழி தோறும் ஊழி, ஓவாமல் வாழிய என்று கூறி நாம் வணங்குவோம். **2581**

பெருமானே! உன் மூலாதாரத் திருவடி ஒன்றைப் பூமியில் பரப்பி அடக்கினாய். அழகிய ஒளி மிகுந்த மற்றொரு திருவடியை, பிரமன் உலகு மகிழ்ச்சி அடையும்படி தேவர்கள் முறையாக பூசைசெய்ய ஏதுவாய், ஆகாயத்தில் நிறுத்தினாய். தாமரைக் காடே பூத்தது போன்ற கண்களும், கனி உதடும் உடைய நீ, ஆயிரம் சூரியர்கள் உதித்தது போன்ற ஒளி முடி உடையவன். பற்பல கற்பகச் சோலைகள் போன்ற ஆயிரம் தோள்கள் பெற்ற பரம புருஷனான உன்னைத் தவிர, யார்க்கு இவ்வுலகம் அடிமைப்படும்? **2582**

உலகங்களைப் படைத்து, எடுத்து, உண்டு உமிழ்ந்து அளந்து, பலவகையில் காப்பாற்றி அருளும் முதற்பெருங்கடவுளான ஸ்ரீமந் நாராயணன் இருக்கிறபொழுது, மூலைத் தேவதைகளைத் தான் தோன்றித்தனமாக ஆராதிக்கலாமா? தாழ்ந்த புத்தியால் சிலர், பெற்ற தாய்க்கு உபசாரம் செய்யாமல், மணைக் கட்டையை நீராட்டி உபசரிப்பது போல், கொன்று பலி இடும் தாழ்ந்த வழிபாட்டில் ஈடுபடுகிறார்களே! இதுதான் இன்பமா? தொன்மையான பிறவியில் மூழ்கி, நீங்காத மாயத்தில் அமுந்துவதே இச்செயல். ஐயோ! இதுவா உலக இயல்பு? **2583**

ஸ்ரீமந் நாராயணன் சந்திரனைச் சடையில் பெற்ற சிவனையும், பிரமனையும், ஒளி உடைய இந்திரன் முதலான தெய்வங்களையும், எல்லா உலகங்களையும் பிரளயத்தில் தன் சிறிய வயிற்றில் அடக்கினான். நிலம், நீர், காற்று, வானம், சந்திரன், சூரியன் யாவும் மயங்கி அடங்க எல்லாவற்றையும் உள்ளே மறைத்து, ஒப்பற்ற ஆலந்தளிரில் எம் சுவாமி பள்ளி கொண்டான். இந்த மகத்தான ஆச்சரியங்களை உடைய ஸ்ரீமந் நாராயணனைத் தவிர வேறு ஒரு தாழ்ந்த தெய்வத்தை நாம் ஆண்டவனாகக் கொள்வோமோ? மாட்டோம். **2584**

**திருவாசிரியம் முற்றிற்று.**



ஸ்ரீ :

# இயற்பா

நம்மாழ்வார் அருளிய
பெரிய திருவந்தாதி

## நாலாயிர திவ்யப் பிரபந்தம்

ஸ்ரீ:

# நாலாயிர திவ்வியப் பிரபந்தம்

## இயற்பா

நம்மாழ்வார் அருளிய
பெரிய திருவந்தாதித் தனியன்

முந்துற்ற நெஞ்சே! முயற்றித் தரித்துரைத்து
வந்தித்து வாயார வாழ்த்தியே- சந்த
முருகூரும் சோலை சூழ் மொய்ம்பூம் பொருநல்
குருகூரன் மாறன் பேர் கூறு.

- எம்பெருமானார் அருளியது.



ஸ்ரீ:

# நாலாயிர திவ்வியப் பிரபந்தம்

## இயற்பா

நம்மாழ்வார் அருளிய
பெரிய திருவந்தாதித் தனியன் உரை

நன்மையை விழையும் மனமே! ஊக்கம் கொண்டு நீ என் நிலையை நம்மாழ்வாரிடம் சொல். அவரை வணங்கி வாய்விட்டுப் புகழ்ந்து வாழ்த்துவாய். தேன் வழியும் பூக்கள் நிறைந்த அழகான சோலைகள் சூழ்ந்த திருநகரிக்கு அவர் தலைவர். அவ்வூர் குருகூர், அழகிய தாமிரபருணிக் கரையில் உள்ளது. மாறன் என்னும் திருநாமம் உடைய அந்த நம்மாழ்வாரின் திருநாமங்களை நீ சொல்வாயாக.

- எம்பெருமானார் அருளியது.

ஸ்ரீ:

# நம்மாழ்வார் அருளிச்செய்த

## பெரிய திருவந்தாதி

முயற்றி சுமந்து எழுந்துமுந்துற்ற நெஞ்சே!
இயற்றுவாய் எம்மொடு நீ கூடி; -நயப்பு உடைய
நா ஈன் தொடைக் கிளவியுள் பொதிவோம் நல் பூவைப்
பூஈன்ற வண்ணன் புகழ். 2585

புகழ்வோம் பழிப்போம்; புகழோம் பழியோம்;
இகழ்வோம் மதிப்போம்; மதியோம் -இகழோம்; மற்று
எங்கள்மால்! செங்கண்மால்! சீறல் நீ ; தீவினையோம்
எங்கள்மால் கண்டாய் இவை. 2586

இவை அன்றே நல்ல; இவை அன்றே தீய;
இவை என்று இவை அறிவனேலும் -இவை எல்லாம்
என்னால் அடைப்பு, நீக்கு ஒண்ணாது; இறையவனே!
என்னால் செயற்பாலது என்? 2587

என்னின் மிகு புகழார் யவரே? பின்னையும் மற்று
எண் இல் மிகு புகழேன் யான் அல்லால் -என்ன
கருஞ் சோதிக் கண்ணன் கடல் புரையும் சீலப்
பெருஞ்சோதிக்கு என் நெஞ்சு ஆட்பெற்று. 2588

பெற்ற தாய்நீயே, பிறப்பித்த தந்தை நீ
மற்றையார் ஆவாரும் நீ பேசில்; -எற்றேயோ
மாய! மா மாயவளை மாய,முலை வாய் வைத்த
நீ அம்மா! காட்டும் நெறி? 2589

நெறி காட்டி நீக்குதியோ? நின்பால் கரு மா
முறி மேனி காட்டுதியோ? மேல் நாள் -அறியோமை
என் செய்வான் எண்ணினாய்? கண்ணனே! ஈது உரையாய்
என் செய்தால், என் படோம் யாம்? 2590






# நம்மாழ்வார் அருளிச்செய்த

## பெரிய திருவந்தாதி


என்னை விடவும் ஊக்கமும் எழுச்சியும் கொண்டுள்ள மனமே! நாம் இருவரும் சேர்ந்து, காயாம்பூ நிறமுடைய பகவானின் திருக்குணங்களை நாவால் தொடுக்கப்பட்ட பொருத்தமான வார்த்தைகளில் பொதிந்து புகழ்வோம். 2585

எம்மிடத்தில் தீராத ஆசை வைத்துள்ள சிவந்த கண்கள் கொண்ட திருமாலே! ஒருவராலும் புகழ்ந்து முடிவு காண முடியாத உன்னைப் புகழ்ந்தால், பழித்தவன் ஆவேன். புகழா விடில் பழிக்காதவன் ஆகி விடுகிறேன். மனத்தால் உன்னைச் சிறந்தவனாக நினைத்தால் உன்னை இகழ்ந்தவன் ஆவேன். நெஞ்சால் நினையாதிருந்தால் உன்னை அவமதித்தவன் ஆக மாட்டேன். என் மேல் நீ சினம் கொள்ளாதே. 2586

பெருமானே! உன்னைப் புகழாமல் சிந்திக்காமல் இருப்பதே நல்லது. உன்னைப் புகழ்ந்தும் சிந்தித்தும் முடிவு செய்ய முயல்வது அன்றோ தீமை. இச் செயல்கள் யாவையும் என் ஆட்சிக்கு உட்பட்டவை அல்ல. என்னாலே இவைகளைப் பற்றவோ அல்லது விட்டு விடவோ நான் சக்தி உடையவனா? 2587

கடல் போன்ற கம்பீரம் உடைய கரிய நிறக் கண்ணன் என்னுடையவன். சோதி வடிவான அவனுக்கு ஆட்பட்டது என்நெஞ்சம். ஆகவே என்னை விடப் பேறு பெற்றவர் யார்? என்னை விடப் புகழுடையவர் யார்! பகவானுக்கு அடிமைப்பட்ட பேறுடைய நான் மிக்கபுகழுடையவன் ஆனேன். 2588

மாயனாகிய என் தலைவனே! எனக்கு நீ காட்டிய அருளைப் பேசினால் எல்லாருமே நீ தான் என்பேன். என்னைப் பெற்ற தாய் நீயே. நன்மை செய்யும் தந்தையும் நீயே. மற்றும் ஞானத்தைக் கொடுக்கும் குருவும் நீயே. பூதனைப் பேயின் நஞ்சு முலையில் வாய் வைத்து அவளை வதைத்தாய். அதுபோலவே என்னைப் பொருளாக ஏற்றது ஆச்சரியமே. 2589

கண்ணா! கர்ம ஞான வழிகளைக் காட்டி என்னை நீ கைவிட்டு விடுவாயோ? கருத்த தளிர் போன்ற திருமேனி அழகைக் காட்டி என்னை ஆட்கொள்வாயோ? மிக நெடுங்காலமாக அறியாமையில் உழலும் என்னை என்ன செய்வாயோ? நான் உனக்கு ஆட்படுவதல்லால் வேறு தீயவற்றைச் செய்ய வல்லேன் அல்லேன். 2590

யாமே அருவினையோம் சேயோம்; என் நெஞ்சினார்
தாமே அணுக்கராய்ச் சார்ந்தொழிந்தார் - பூமேய
செம்மாதை நின் மார்வில் சேர்வித்துப் பார் இடந்த
அம்மா! நின் பாதத்து அருகு. 2591

அருகும் சுவடும் தெரிவு உணரோம்; அன்பே
பெருகும் மிக; இது என் ? பேசீர் - பருகலாம்
பண்புடையீர்! பார் அளந்தீர்! பாவியெம் கண் காண்பு அரிய
நுண்பு உடையீர்! நும்மை நுமக்கு. 2592

நுமக்கு அடியோம் என்று என்று நொந்து உரைத்து என்? மாலார்
தமக்கு அவர் தாம் சார்வு அரியர் ஆனால் -எமக்கு இனி
யாதானும் ஆகிடு காண், நெஞ்சே! அவர் திறத்தே
யாதானும் சிந்தித்து இரு. 2593

இரு நால்வர் ஈரைந்தின் மேல் ஒருவர்; எட்டோடு
ஒரு நால்வர்; ஓர் இருவர் அல்லால், -திருமாற்கு
யாம் ஆர்? வணக்கம் ஆர்? ஏ பாவம்! நல் நெஞ்சே!
நாமா மிக உடையோம் நாழ். 2594

நாழால் அமர் முயன்ற வல் அரக்கன் இன் உயிரை
வாழாவகை வலிதல் நின் வலியே?- ஆழாத
பாரும் நீ; வானும் நீ;காலும் நீ; தீயும் நீ;
நீரும் நீ; ஆய் நின்ற நீ. 2595

நீ அன்றே ஆழ் துயரில் வீழ்விப்பான் நின்று உழன்றாய்;
போய் ஒன்று சொல்லி என்? போ நெஞ்சே! -நீ என்றும்
காழ்த்து உபதேசம் தரினும் கைக் கொள்ளாய் கண்ணன்தான்
வாழ்த்துவதே கண்டாய் வழக்கு. 2596

வழக்கொடு மாறுகொள் அன்று; அடியார் வேண்ட
இழக்கவும் காண்டும் இறைவ! -இழப்பு உண்டே?
எம் ஆட் கொண்டு ஆகிலும் யான் வேண்ட என் கண்கள்
தம்மால் காட்டு உன் மேனிச் சாய். 2597





*எம்பெருமானே! தாமரைப் பூ மேவிய, சிவந்த மேனி கொண்ட திருமகளை உம் மார்பிலே சேர்த்துக் கொண்டீர். பிரளயத்தில் பூமியை எடுத்துக் காத்தவர் நீரே. என் நெஞ்சு உம் திருவடிகளிடத்தே சேர்ந்து உமக்கு அந்தரங்கம் ஆகிவிட்டது என்றாலும், பாவங்களைச் செய்த நான் மட்டும உம்மிடத்தி விருந்து தூர உள்ளேன்.* 2591

*உலகளந்தவரே! வாயாரப் புகழ்ந்து பருகும் படியான குணங்கள் பெற்றவரே! பாவிகளான எங்களால் காண முடியாத திருவடிவம் பெற்றவரே! உம்மை அணுகுவதையும் அதற்கான வழியையும் தெளிவாக நாங்கள் தெரிந்து கொள்ளவில்லை. என்றாலும் கண்டவர்க்கு ஏற்படும் அன்பு போல, காணாத எமக்கும் உம்மிடம் அன்பு பெருகுகிறதே! இந்த ஆசையின் காரணத்தை நீரே கூற வேண்டும்.* 2592

*மனமே! திருமாலிடம், "நாங்கள் உமக்கு அடிமைப் பட்டவர்கள்" என்று பல தடவைகள் கூறினோம். அவன் திருவுள்ளம் நோவடையும் படி கூறிப் பலன் இல்லை. இனி நமக்கு எது நடந்தாலும் நடக்கட்டும். நீ மட்டும் எம் பெருமானைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டே இரு. அவர் நம்மை வேண்டாவிடிலும் நாம் சிந்தித்துத் தரிப்போம்.* 2593

*எட்டு வசுக்கள், பதினொரு உருத்திரர்கள், பன்னிரு சூரியர், அசுவினி தேவர் இருவர் ஆகிய கூட்டத்தைத் தவிர மற்றையோராகிய நாம் திருமாலைத் தொழ ஏற்றவரோ? நம்முடைய வணக்கமும் ஒரு வணக்கமோ! நெஞ்சே! நாம் மிகவும் குற்றமுடையவர் தாமே!* 2594

*எம்பெருமானே! தண்ணீரில் மூழ்காத பூமி நீ. நீரும் நீயே; காற்று, தீ, வானம் ஆகியனவும் நீயே. அகங்காரத்துடன் போரிட்ட இராவணன் உயிரைப் போக்கிய உன் வலிமையே பெரிது. உன் வீரத்தை என் என்பேன்.* 2595

*மனமே! நீ என்னை ஆழமான துயரக் கடலில் தள்ள முயன்று உழல்கிறாய். நீயும் நானும் இதுபற்றி வேறுபடுவதில் பயன் இல்லை. நான் கூறிய அறிவுரையை ஏற்பாயா? பகவானுக்கு நம் மேல் அன்பு உண்டு என்பதை உணர்ந்து கொள். என்மேல் உள்ள கோபத்தால் என் உபதேசத்தை விட்டு விடாதே! கண்ணன் திருவடிகளை வாழ்த்துவதே நம் கடன் என்று தெரிந்து கொள்.* 2596

*எம்பெருமானே! அடியேன் வேண்டுகோள் நியாயத்துடன் மாறுபட்டதன்று. சிறியோர் வேண்டுகோளுக்காகப் பெரியோர் தம் இழப்பைப் பொருட்படுத்தார். இறைவா! என் வேண்டுகோளை ஏற்பதால் உனக்கு எவ்விழப்பும் இல்லை. என்னை நீ அடிமையாக ஏற்றுக் கொண்டு, நான் காணுமாறு உன் திருமேனி ஒளியைக் காட்டி அருள வேண்டும்.* 2597

சாயால் கரியானை உன் அறியாராய், நெஞ்சே!
பேயார் முலைகொடுத்தார் பேயர் ஆய்; -நீ யார்? போய்த்
தேம்பு ஊண் சுவைத்து ஊன் அறிந்து அறிந்தும் தீவினை ஆம்
பாம்பார் வாய்க் கை நீட்டல் பார்த்தி. 2598

பார்த்து ஓர் எதிரிதா நெஞ்சே! படு துயரம்
பேர்த்து ஓதப் பீடு அழிவு ஆம் பேச்சு இல்லை; -ஆர்த்து ஓதம்
தம் மேனித் தாள் தடவ, தாம் கிடந்து தம்முடைய
செம்மேனிக் கண்வளர்வார் சீர். 2599

சீரால் பிறந்து சிறப்பால் வளராது
பேர் வாமன் ஆகாக்கால் பேராளா! -மார்புஆரப்
புல்கி நீ உண்டு உமிழ்ந்த பூமி நீர் ஏற்பு அரிதே?-
சொல்லு நீ யாம் அறிய, சூழ்ந்து. 2600

சூழ்ந்து அடியார் வேண்டினக்கால் தோன்றாது விட்டாலும்
வாழ்ந்திடுவர்; பின்னும் தம் வாய்திறவார்- சூழ்ந்து எங்கும்
வாள் வரைகள் போல், அரக்கன் வன் தலைகள் தாம் இடிய
தாள் வரை வில் ஏந்தினார் தாம். 2601

தாம்பால் ஆப்புண்டாலும் அத் தழும்பு தான் இளகப்
பாம்பால் ஆப்புண்டு பாடு உற்றாலும் -சோம்பாது இப்
பல் உருவை எல்லாம் படர்வித்த வித்தா! உன்
தொல் உருவை யார் அறிவார்? சொல்லு. 2602

சொல்லில் குறை இல்லை,சூது அறியா நெஞ்சமே!
எல்லி பகல் என்னாது எப்போதும் -தொல்லைக்கண்
மாத் தானைக்கு எல்லாம் ஓர் ஐவரையே மாறு ஆகக்
காத்தானைக் காண்டும்; நீ காண். 2603

காணப்புகில் அறிவு கைக் கொண்ட நல் நெஞ்சம்!
நாணப்படும் அன்றே? நாம் பேசில் - மாணி
உரு ஆகிக் கொண்டு உலகம் நீர் ஏற்ற சீரான்
திருஆகம் தீண்டிற்றுச் சென்று. 2604





*மனமே! பூதனைப் பேய் கரிய கண்ணனின் ஆத்ம தத்துவத்தை அறியாமல், அறிவின்மையுடன் நஞ்சுமுலையைக் கொடுத்து அழிந்தாள். உனக்கும் அவளுக்கும் பொருத்தம் உண்டோ? புலன்களால் ஊனம் அடைந்துள்ள நீ பகவானை அனுபவிக்க விழைகிறாயே! உன்முயற்சி பாம்பின் வாயில் கை நீட்டு வாரைப் போல உள்ளது.* 2598

*பாற்கடலின் அலைக்கரங்கள் வருடும் திருமேனியும் திருவடிகளும் உடைய எம்பெருமான், அதன் மீது பள்ளி கொண்டு கண் வளர்கிறான். மனமே! அவன் குணங்களை நீ பேசுவதால் உன் துயரங்கள் தீரும். அதனால் அவன் பெருமைக்கு ஒரு குறையும் இல்லை.* 2599

*பல திருநாமங்கள் கொண்டவனே! செல்வத்தில் பிறந்து சிறப்பாக வளராமல் வாமனன் என்னும் பெயருடன் நீ குள்ளனாக அவதரித்தாயே! இவ்வாறு வந்தால் தான் பூமியைத் தானமாகப் பெற முடியும் என்றோ! வராகமாய் நீ, பூமியைத் தழுவி எடுத்தாய். உண்டு உமிழ்ந்து காத்தாய். இப்படிப் பூமி உன்னுடையதாக இருந்தும், வாமனனாக நீர் ஏற்றதை நான் அறியும்படி சொல்லி அருள வேண்டும்.* 2600

*இராமபிரான் இராவணனுடன் போரிட்ட பொழுது, நாற்புறங்களிலும் சுற்றியபடி மலைகள் விழுவது போல, அவ்வரக்கன் தலைகளை இற்றுவிழச் செய்தான். இப்பெருமானை அடியார்கள் இடைவிடாமல் வழிபடும் பொழுது அவன் தோன்றாவிடினும் அவர்கள் நெஞ்சால் வெறுக்காமல் வாயால் இகழ்ந்து பேசாமல் பொறுமையாய் இருப்பார்.* 2601

*எம்பெருமானே! யசோதையின் கயிற்றால் கட்டுப் பட்டாலும், அத்தழும்பும் சிறிதாகத் தெரியும்படி காளியப் பாம்பால் கட்டுண்டாலும் பின்வாங்காமல், நீ தேவ மனித உயிர்களைத் தோற்றுவித்துப் பரவச் செய்கிறாய்! உலக காரணனே! பழைய உன் வடிவத்தை யார் அறியமுடியும்! நீயே கூறு.* 2602

*வழிவகை அறியாத நெஞ்சமே! அவன் குணங்களைப் பேசினால் அவற்றுக்குக் குறை இல்லை. பாரதப் போரில் பரந்த சேனையைப் பெற்ற துரியோதனாதியரின் எதிரிகளான பஞ்சபாண்டவர்க்கு இரவு, பகல் என்னாது எப்போதும் எம்பெருமான் காவலாக இருந்தான். அவனை நீ காணலாம். அதற்கு அவன் அருள் செய்வான்.* 2603

*ஞானமுடைய மேலான மனமே! பிரமசாரி வடிவில் உலகத்தை நீ தானம் ஆகப்பெற்ற சீர்மையனின் திருமேனியை உலகமெல்லாம் தீண்டியதை எண்ணிப் பார்த்தால், நம் பேச்சுக்கு நாம் வெட்கப்பட வேண்டும். அவனை நாம் கண்டுவிட்டதாகப் பேசுவது வெட்கத்துக்குரியது.* 2604

சென்று அங்கு வெம் நரகில் சேராமல் காப்பதற்கு
இன்று இங்கு என் நெஞ்சால் இடுக்குண்ட -அன்று அங்குப்
பார் உருவும் பார் வளைத்த நீர் உருவும் கண் புதையக்
கார் உருவன் தான் நிமிர்த்த கால். 2605

காலே பொதத் திரிந்து கத்துவராம் இனநாள்
மாலார் குடிபுகுந்தார் என் மனத்தே -மேலால்,
தருக்கும் இடம்பாட்டினொடும் வல்வினையார் தாம் வீற்று
இருக்கும் இடம் காணாது இளைத்து. 2606

இளைப்பாய் இளையாப்பாய்;நெஞ்சமே! சொன்னேன்;
இளைக்க நமன் தமர்கள் பற்றி -இளைப்பு எய்த
நாய் தந்து மோதாமல் நல்குவான் நல்காப்பான்
தாய் தந்தை எவ் உயிர்க்கும் தான். 2607

தானே தனித் தோன்றல்; தன் அளப்பு ஒன்று இல்லாதான்;
தானே பிறர்கட்கும் தன் தோன்றல்; -தானே
இளைக்கில் பார் கீழ் மேல் ஆம்; மீண்டு அமைப்பான் ஆனால்,
அளக்கிற்பார் பாரின்மேல் ஆர்? 2608

ஆரானும் ஆதானும் செய்ய; அகலிடத்தை
ஆராய்ந்து அது திருத்தல் ஆவதே? -சீர் ஆர்
மனத்தலை வன் துன்பத்தை மாற்றினேன் வானோர்
இனத் தலைவன் கண்ணனால், யான். 2609

யானும், என் நெஞ்சும் இசைந்தொழிந்தோம், வல்வினையைக்
கானும் மலையும் புகக் கடிவான் -தான் ஓர்
இருள் அன்ன மா மேனி எம் இறையார் தந்த
அருள் என்னும் தண்டால் அடித்து. 2610

அடியால் படி கடந்த முத்தோ? அது அன்றேல்
முடியால் விசும்பு அளந்த முத்தோ?- நெடியாய்!
செறி கழல்கள் தாள் நிமிர்த்துச் சென்று உலகம் எல்லாம்
அறிகிலமால், நீ அளந்த அன்று. 2611





மேகநிறத் திருமாலின் திருவடிகள்,உலகளந்த காலத்தே. பூமியையும் தண்ணீர்ப் பரப்பையும் மறையும்படி உள்ளடக்கி வளர்ந்தன. அத் திருவடிகளே இன்று என் நெஞ்சை நெருக்குகின்றன. கொடிய நரகில் நான் சேரா வண்ணம் காப்பன இவை. 2605

திருமால் என் நெஞ்சிற் புகுந்ததால், பாவங்கள் அகன்றன. முன்பெல்லாம் பெருமையுடன் ஆணை செலுத்திய அத் தீவினைகள் பகவான் புகுந்தபிறகு, தங்க இடம் கிடைக்காமல் கதறுகின்றன. தம் கால்கள் நோக, ஓடி இளைத்துக் கிடக்கின்றன. 2606

ஏ! மனமே! நம் முடிவு காலத்தில் யமதூதர்கள் ஏவும் நாய்களிடம் நாம் சிக்கித் துடிக்காதவாறு எம்பெருமான் அருள் செய்கிறான். அவன் நமக்குத் தாயும் தகப்பனும் ஆவான் என்னும் நம்பிக்கை குலையாமல் இரு. தளர்ச்சி அடையாதே. 2607

எல்லோர்க்கும் தலைவனான இறைவன் தனக்கு ஒப்புத் தானே அன்றி வேறில்லாதவன். எல்லாப் பொருள்களிலும் உள் உறைபவன்; காத்தல் தொழிலில் அவன் சிறிது தளர்ந்தாலும் உலகம் தலைகீழாகி விடும். சரிப்படுத்தும் வல்லமை உடைய அவன் ஆளுமையை யாரால் அளவிட்டுக் கூறமுடியும்! அவனைவிட வேறு காக்கும் தெய்வம் இல்லை. 2608

உலகோர் காரியங்களை ஆராய்ந்து நம்மால் அவரைத் திருத்த முடியுமோ? முடியாது. யார் எதைச் செய்தாலும் சரி; என்னைப் பொறுத்தவரையில் என் மனத் துன்பங்களை நீக்கிக் காப்பாற்றுபவன், நித்திய சூரிகள் தலைவனாகிய கண்ணனே ஆவான். அவனாலேயே என் வலிய துன்பங்களை அகற்றினேன். 2609

இருளே வடிவெடுத்த அழகான திருமேனி உடைய எம்பெருமானுக்கு நானும் என் மனமும் சேர்ந்து இசைந்து ஆட்பட்டோம். அவன் எனக்குக் கொடுத்த அருள் என்னும் தடியாலே என் கொடிய பாவங்களை அடித்துத் துரத்திக் காடுகளிலும் மலைகளிலும் செல்லும் படி செய்தோம். 2610

நெடிய பிரானே! வீரக்கழல் அணிந்த உன் திருவடிகளை நிமிர்த்தி நீ பூமியை அளந்த பொழுது உண்டான மகிழ்ச்சி இப்பொழுது திருவுள்ளத்தில் படர்கிறதோ? உன் திருமுடியால் விண்ணை அளந்த பொழுது உண்டான நிறைவே, இதயத்தில் நிரம்பிற்றோ? திருவடி அளந்த செயலோ? திருமுடி அளந்த விதமோ? எது உன் உள்ளத்தில் மகிழ்ச்சியை உண்டாக்கியது! இதுபற்றி அடியேனுக்குத் தெரியவில்லை. 2611

அன்றே, நம் கண் காணும் ஆழியான் கார் உருவம்;
இன்றே, நாம் காணாது இருப்பதுவும் -என்றேனும்,
கட்கண்ணால் காணாத அவ் உருவை நெஞ்சு என்னும்
உட்கண்ணேல் காணும் உணர்ந்து. 2612

உணர ஒருவர்க்கு எளியனே செவ்வே
இணரும் துழாய் அலங்கல் எந்தை? -உணரத்
தனக்கு எளியர் எவ் அளவர், அவ் அளவன் ஆனால்,
எனக்கு எளியன் எம் பெருமான், இங்கு. 2613

இங்கு, இல்லை பண்டுபோல் வீற்றிருத்தல்; என்னுடைய
செங்கண் மால் சீர்க்கும் சிறிது உள்ளம்! -அங்கே,
மடி அடக்கி நிற்பதனில் வல்வினையார் தாம் ஈண்டு
அடி எடுப்பது அன்றோ அழகு? 2614

அழகும் அறிவோமாய், வல்வினையைத் தீர்ப்பான்,
நிழலும் அடி தாறும் ஆனோம் -சுழலக்
குடங்கள் தலைமீது எடுத்துக் கொண்டு ஆடி அன்று அத்
தடங் கடலை மேயார் தமக்கு. 2615

தமக்கு அடிமை வேண்டுவார் தாமோதரனார்
தமக்கு அடிமை செய் என்றால் செய்யாது -எமக்கு என்று
தாம் செய்யும் தீவினைக்கே தாழ்வுறுவர் நெஞ்சினார்;
யாம் செய்வது இவ்விடத்து இங்கு யாது? 2616

யாதானும் ஒன்று அறியில், தன் உகக்கில் என் கொலோ
யாதானும் நேர்ந்து அணுகா ஆறு தான்-யாதானும்
தேறுமா செய்யா அசுரர்களை நேமியால்
பாறுபாறு ஆக்கினான்பால்? 2617

பால் ஆழி நீ கிடக்கும் பண்பை யாம் கேட்டேயும்,
கால் ஆழும்; நெஞ்சு அழியும்; கண் சுழலும் - நீல் ஆழிச்
சோதியாய்! ஆதியாய்! தொல்வினை எம்பால் கடியும்
நீதியாய்! நின் சார்ந்து நின்று. 2618





புறக் கண்ணால் காண இயலாத எம்பெருமானின் திருவுருவை, நெஞ்சம் ஆகிய அகக் கண்ணால் காணும் பரமபத்தி தலைப்பட்டால் சக்கரக் கையன் ஆன மேகவண்ணன் கண்முன் தோன்றுவான். அகக்கண் கொண்டு பாராததால் அவன் காணப்படவில்லை. எனவே உட்கண்ணே கண் ஆகும்; வெளியில் காணப்படுவது கண் அல்ல. 2612

திருத்துழாய் மாலை அணிந்துள்ள திருமால், எவராலும் தன் முயற்சியால் எளிதில் அறியப் படாதவன். சாதாரணமானவன் அல்ல. ஆயினும் அவனுக்கு ஆட்பட்டோரின் ஆழ்ந்த அன்பிற்காகத் தன்னை அவன் காட்டுவான். இங்கு எம்பெருமான் என்னால் உணரும்படி எளிமையாகத் தன்னைக் காட்டுவான். 2613

எம்பெருமானைப் பற்றிய எண்ணத்தால், கொடிய பாவங்கள் இனிமேல் பழைய நாள்களில் போலே, என் நெஞ்சில் தங்கா. செங்கண் மாலின் குணங்களைப் பயில்வதால் நெஞ்சில் அவை பரந்து வியாபித்தபின், பாவங்களுக்கு இடம் இல்லை. ஆகவே அவ்வினைகள் தங்கள் மடியை அடக்கிக் கொண்டு வெளிக் கிளம்பிப் போவதே நல்லது. 2614

முற்காலத்தில், எங்கும் சுழன்று குடக்கூத்தாடிய தளர்ச்சி நீங்குவதற்காக எம்பெருமான் பாற்கடலில் பள்ளி கொண்டான். இப்பெருமானின் திருவடி நிழலாகவும் திருவடிரேகையாகவும் நாம் ஆகி விட்டோம். ஆகவே நமது கொடிய பாவங்களைத் தீர்க்கும் வழியை அறிந்து கொண்டோம். 2615

கயிற்றுத் தழும்பு வயிற்றில் தெரியும் கண்ணன் அடியார்களுக்கு அடிமைப்பட ஆசைப்பட்டான். "நெஞ்சமே! இத்தகையவனுக்கு நீ அடிமைசெய்." என்றால் சுதந்திரம் பாராட்டும், மனம் பாவங்களுக்கே ஆட்பட விழைகிறது. இங்கு நான் செய்யத் தகுந்தது யாது? உடையவனான திருமால் வழிப்படுவேனா? என் உடைமையான நெஞ்சின் வழிப்படுவேனா! 2616

இறைவனுக்கு உகப்பை ஏற்படுத்தும் செயலைச் செய்யாத அசுரர்களைத் திருமால் சக்கராயுதத்தால் துண்டு துண்டாக்கி விடுவான். ஏதேனும் ஒன்றைக் கொடுத்தாவது அவனை அடையாமல் இருக்கலாமோ? நமக்கு எதையும் அறியும் ஞானமும் ஆனந்த குணமும் இருந்தும், ஆத்ம சமர்ப்பணம் செய்யத் தெரிய வேண்டாமோ? 2617

கருங்கடல் போன்ற ஒளிப் பெருமானே! உலக காரணனே! எம்மிடம் உள்ள பழைய வினைகளைப் போக்குவதையே குணமாகக் கொண்டவனே! உன்னைப் பற்றி, நீ பாற்கடலில் பள்ளி கொண்ட அழகைக் கேட்கும் பொழுது அடியேன் கால் தளரும்; நெஞ்சு கலங்கும்; கண்களோ கழன்று பிரமிக்கும். 2618

நின்றும், இருந்தும், கிடந்தும், திரிதந்தும்,
ஒன்றும் ஓவாற்றான்; என் நெஞ்சு அகலான்-அன்று அம் கை
வன் புடையால் பொன்பெயரோன் வாய் தகர்த்து, மார்வு இடந் தான்
அன்புடையன் அன்றே அவன்? 2619

அவன் ஆம் இவன் ஆம் உவன் ஆம் மற்று உம்பர்
அவன் ஆம் அவன் என்று இராதே, -அவன் ஆம்
அவனே எனத் தெளிந்து கண்ணனுக்கே தீர்ந்தால்,
அவனே எவனேலும் ஆம். 2620

ஆம் ஆறு அறிவுடையார் ஆவது அரிது அன்றே?
நாமே அது உடையோம் நல் நெஞ்சே -பூ மேய்
மதுகரமே தண் துழாய் மாலாரை வாழ்த்து ஆம்
அது கரமே அன்பால் அமை. 2621

அமைக்கும் பொழுது உண்டே -ஆராயில், நெஞ்சே!
இமைக்கும் பொழுதும்? இடைச்சி -குமைத்திறங்கள்
ஏசியே ஆயினும் ஈன் துழாய் மாயனையே
பேசியே போக்காய் பிழை. 2622

பிழைக்க முயன்றோமோ, நெஞ்சமே! பேசாய்?
தழைக்கும் துழாய் மார்வன் தன்னை -அழைத்து ஒருகால்
போய், உபகாரம் பொலியக் கொள்ளாது அவன் புகழே
வாய் உபகாரம் கொண்ட வாய்ப்பு. 2623

வாய்ப்போ இது ஒப்ப மற்று இல்லை; வா நெஞ்சே!
போய்ப் போஒய் வெம் நரகில் பூவியேல்; -தீப் பால
பேய்த் தாய் உயிர் கலாய்ப் பால் உண்டு, அவள் உயிரை
மாய்த்தானை வாழ்த்தே வலி. 2624

வலியம் என நினைந்து வந்து எதிர்ந்த மல்லர்
வலிய முடி இடிய வாங்கி -வலிய நின்
பொன் ஆழிக் கையால் புடைத்திடுதி; கீளாதே,
பல் நாளும் நிற்கும் இப் பார். 2625





எம்பெருமான் தன் அழகிய கரங்களால் இரணியன் வாயைத் தகர்த்து மார்பைக் கிழித்த செயல், அவன் தன் அடியார்களிடத்தில் அன்புடையவன் என்பதைக் காட்டுகிறது. என்னைப் பெற அப்பெருமான் திருப்பதிகளில் நின்றும், இருந்தும், பள்ளி கொண்டும், உலாவியும் திருப்தி உறாமல், என் இதயத்தில் புகுந்து நீங்காமல் அங்கு இருக்கிறான். 2619

இறைவன் எட்டாத தூரத்தில் எங்கோ உள்ள அவனா? இங்கேயே உள்ள இவனா? அங்கும் இங்கும் இல்லாமல் நடுவில் உள்ளவனா? மிகவும் தொலைவில் உயர்ந்தவனா? இப்படி எல்லாம் சந்தேகம் கொள்ளாமல் என்றும் எளிமையானவன் அவன் என்று அறிய வேண்டும். எளிமையின் வடிவான கண்ணபிரானுக்கு அடிமைப்பட்டால் அவனே எல்லா உறவுமுறைகளால் நமக்கு நன்மையே செய்வான். 2620

நல்ல நெஞ்சமே! ஆத்மாவின் உய்வுக்கான ஞானத்தை எம்பெருமான் அருளால் நாம் பெற்றதால் அவனை வாழ்த்துவதே தக்க செயல் ஆகும். வண்டு தங்கும் குளிர்ந்த திருத்துழாய் மாலை அணிந்தவனைப் பக்தி சிரத்தையுடன் வழிபடுவதே உன் தொழில் ஆகும். 2621

மனமே! ஆராய்ந்து பார்த்தால், நீ இமைப்பொழுதும் வீணாக்காமல் கண்ணனின் நீர்மைக் குணத்தையே பேச வேண்டும். வெண்ணெய் திருடி இடைச்சி கையில் அகப்பட்ட அவன் கதையை ஏசிப் பேசியாவது திருத்துழாய்மாலை அணிந்தவனைப் பேசு. உன் பாவங்களைப் போக்க வல்ல இப்பேச்சை விட்டுக் காலம் போக்குவது உன் பிழை ஆகும். 2622

மனமே! தழைத்து விளங்கும் திருத்துழாய் மாலை அணிந்துள்ள திருமாலைக் கூப்பிட்டுப் புகழ் பாடிக் கைங்கர்யம் செய்வதைப் பரமபதத்தில் சென்றல்லவா செய்ய வேண்டும்? இங்கிருந்தபடியே அவன் திருக்குணங்களை வாயால் பிதற்றுவது என்ன காரியம்! இவ்வுலகில் இருந்தே குணங்களைப் பாடுவது போதுமா? போதாதா! நீயே கூறு. 2623

நெஞ்சமே வா! மறுபடியும் பின் வாங்காமல் இப்போதே எம்பெருமான் புகழைப் பாடு. முடியாது முடியாது என்று பின்போனால் கொடிய நரகில் தள்ளி விடும். ஆகவே, பூதனைப் பேயின் உயிரை முலைப்பாலுடன் பருகிய கண்ணனின் குணங்களைக் கூறி வாழ்த்துவதே நமக்கு வலிமை தரவல்லது. மிடுக்கான செயலும் ஆகும். 2624

எம்பெருமானே! 'நாம் தாம் பலம் உடையவர்' என்று எதிர்த்த மல்லர்களை உன் சக்கரக் கையால் புடைத்துக் கொன்றதைக் கண்ணாலே இவ்வுலகம் கண்டும் அதற்காக அஞ்சி, வயிறு வெடிக்கவில்லையே! என்ன கல்நெஞ்சோ அதற்கு? பலநாட்களாய் நிற்கிறதே! மென்மையான கைகளால் முரட்டு மல்லரை அழித்த செயல் போல் உண்டோ? 2625

பார் உண்டான்; பார் உமிழ்ந்தான்; பார் இடந்தான்; பார் அளந்தான்;
பார் இடம் முன் படைத்தான் என்பரால்;- பார் இடம்
ஆவானும் தான் ஆனால் ஆர் இடமே? மற்றொருவர்க்கு
ஆவான் புகாவால் அவை. 2626

அவையம் என நினைந்து வந்த சுரர்பாலே
நவையை நளிர்விப்பான் தன்னை-, கவை இல்
மனத்து உயர வைத்திருந்து வாழ்த்தாதார்க்கு உண்டோ
மனத் துயரை மாய்க்கும் வகை? 2627

வகை சேர்ந்த நல் நெஞ்சும் நா உடைய வாயும்
மிக வாய்ந்து வீழா எனிலும் -மிக ஆய்ந்து
மாலைத் தாம் வாழ்த்தாது இருப்பர்; இது அன்றே
மேலைத் தாம் செய்யும் வினை? 2628

வினையார் தர முயலும் வெம்மையை அஞ்சி
தினையாம் சிறிதளவும் செல்ல -நினையாது
வாசகத்தால் ஏத்தினேன் வானோர் தொழுது இறைஞ்சும்
நாயகத்தான் பொன் அடிக்கள் நான். 2629

நான் கூறும் கூற்றாவது இத்தனையே நாள்நாளும்
தேங்கு ஓத நீர் உருவன், செங்கண் மால், -நீங்காத
மா கதி ஆம்; வெம் நரகில் சேராமல் காப்பதற்கு
நீ கதி ஆம், நெஞ்சே! நினை. 2630

நினைத்து இறைஞ்சி, மானிடவர் ஒன்று இரப்பர் என்றே
நினைத்திடவும் வேண்டா நீ; நேரே -நினைத்து இறைஞ்ச
எவ் அளவர்? எவ் இடத்தோர்? மாலே! அது தானும்
எவ் அளவும் உண்டோ எமக்கு? 2631

எமக்கு யாம் விண் நாட்டுக்கு உச்சமது ஆம் வீட்டை
அமைத்திருந்தோம்; அஃது அன்றே ஆம் ஆறு?- அமைப் பொலிந்த
மென் தோளி காரணமா, வெம் கோட்டு ஏறு ஏழ் உடனே
கொன்றானையே மனத்துக் கொண்டு. 2632





திருமாலே பிரளயத்தில் பூமியை உண்டு காத்துப் பின் உமிழ்ந்தான். வராக வடிவில் அதே பூமியை அண்டபித்தியிலிருந்து எடுத்துக் காப்பாற்றினான். உலகளந்த அவனே அதைப் படைத்தவன். இவ்வாறு கற்றோர் கூறுவர். அவன் உலகு முழுவதும் பரவியன் என்று வேதம் கூறும். அவனுக்கன்றி இவ்வுலகம் வேறு எவர்க்கும் அடிமைப்படாது. **2626**

அடைக்கலம் புகும் தேவர்களின் துன்பத்தை நீக்கும் எம் பெருமானை மனத்தில் தியானம் செய்து, மேலாக வாழாதவர்க்கு மனத் துயரை போக்க வேறு வழி இல்லை. அவனை வாழ்த்தி வணங்குவதே உய்யும் வகை ஆகும். **2627**

ஆத்ம ஞானம் பெற நெஞ்சும், எம்பெருமானைத் துதிக்க நாவும் இருந்தும் மனிதர்கள் அவற்றின் உண்மையான பயனைப் பெறாமல் அறிவு ஜீவிகளாய் மட்டுமே இருக்கலாமா? பகவானைத் துதித்து வாழ்த்தாத பொழுதெல்லாம் பாவங்களை வளர்க்கும். வருங்காலமும் வீணாகி வினைகள் தொடரும். **2628**

தீவினைகளால் ஏற்படும் துன்பத்திற்கு அஞ்சி அடியேன் தினை அளவு நேரத்தையும் வீணாக்காமல் எம்பெருமானைத் துதிக்கிறேன். அடியேனால் பேசமுடிந்தபடி வாசகத்தால், நித்திய சூரிகள் தொழுது வணங்கும் தலைவனின் திருவடிகளைத் தோத்திரம் செய்கிறேன். **2629**

தங்கிய படி கிடக்கும் கடல் நிறத் திருமேனியும், சிவந்த கண்களும் உடைய திருமால் என்னைப் பிரியாதவனாய் என் கதியாய் இருக்கிறான். கொடிய நரகமான பிறவியில் ஊன்றாத படி காத்தருளும் உபாயம் அவனே. நெஞ்சே! நீ இதனை நினை. உனக்குத் தினமும் நான் கூறும் விழுமிய சொல் இதுவே. **2630**

திருமாலே! மனிதர்கள் உம்மை நினைத்து வணங்கிப் பலனைக் கேட்டு யாசிப்பார் என்று நீ எண்ண வேண்டாம். அவர்களுக்கு இதற்கேற்ற ஞானம் இல்லை. அவர்கள் வாழும் இவ்வுலகில் இத்தகைய ஞானம் உண்டாக வாய்ப்பும் இல்லை. ஆனால் அடியேனுக்கோ உம் அருளின் காரணமாக நீரே வழியாகவும் முடிவாகவும் இருக்கிறீர் என்னும் ஞானம் கிட்டியது. **2631**

மென்மையான மூங்கிலைப் போன்ற தோள்களுடைய நப்பின்னையை அடைவதற்காக கண்ணன் வளைந்த கொம்புகளுடைய ஏழு காளைகளைச் சாடிக் கொன்றான். அடியேன் இக் கண்ணபிரானையே சிந்தையில் கொண்டு இருப்பதால் சுவர்க்கத்துக்கும் மேலான பரமபதமும் கூட வேண்டாம். எம்பெருமான் குணங்களில் ஈடுபடுவதே எல்லாவற்றுக்கும் மேலானதாகும். **2632**

கொண்டல் தான், மால் வரை தான், மாகடல்தான் கூர் இருள்தான்
வண்டு அறாப் பூவை தான் மற்றுத்தான்-கண்ட நாள்,
கார் உருவம் காண்தோறும் நெஞ்சு ஓடும் கண்ணனார்
பேர் உரு என்று எம்மைப் பிரிந்து. 2633

பிரிந்து, ஒன்று நோக்காது, தம்முடைய பின்னே
திரிந்து உழலும் சிந்தனையார் தம்மை-புரிந்து ஒருகால்,
ஆஆ! என இரங்கார்,அந்தோ! வலிதேகொல்
மா வாய் பிளந்தார் மனம்? 2634

மனம் ஆளும் ஓர் ஐவர் வன் குறும்பர்-தம்மைச்
சினம் மாள்வித்து ஓர் இடத்தே சேர்த்து -புனம் மேய
தண் துழாயான் அடியைத் தாம் காணும் அஃது அன்றே-
வண்துழாம் சீரார்க்கு மாண்பு? 2635

மாண் பாவித்து அந்நான்று மண் இரந்தான், மாயவள் நஞ்சு
ஊண் பாவித்து உண்டானது ஓர் உருவம் -காண்பான் நம்
கண் அவா; மற்று ஒன்று காண் உறா; சீர்பரவாது
உண்ண, வாய் தான் உறுமோ ஒன்று? 2636

ஒன்று உண்டு செங்கண்மால்!யான் உரைப்பது; உன் அடியார்க்கு
என் செய்வன் என்றே இருத்தி நீ; -நின் புகழில்
வைகும் தம் சிந்தையிலும் மற்று இனிதோ நீ அவர்க்கு
வைகுந்தம் என்று அருளும் வான்? 2637

வானோ மறி கடலோ, மாருதமோ, தீயகமோ,
கானோ ஒருங்கிற்றுக் கண்டிலமால் -ஆன் ஈன்ற
கன்று உயர, தாம் எறிந்து காய் உதிர்த்தார் தாள் பணிந்தோம்
வன் துயரை ஆஆ! மருங்கு. 2638

மருங்கு ஓதம் மோதும் மணி நாகணையார்
மருங்கே வர அரியரேலும் -ஒருங்கே
எமக்கு அவரைக் காணலாம் எப்பொழுதும்; உள்ளால்
மனக் கவலை தீர்ப்பார் வரவு. 2639





மேகங்கள், மலைகள், கருங்கடல், திரண்ட இருள் ஆகிய வற்றைக் காணும் பொழுது, என் மனம் இவை கண்ணனின் அழகிய வடிவம் என்று எண்ணும். வண்டமரும் காயாம்பூவையும் கறுத்த பொருள்களையும் பார்க்கும் பொழுது எல்லாம் எம்பெருமான் திருமேனியே என்று என் நெஞ்சம் அவனிடம் ஓடும். 2633

என் நெஞ்சமோ என்னைப் பிரிந்து எம்பெருமான் பின்பே அலைகிறது. தன் பின்னால் வரும் இந்த நெஞ்சிடம் அவன் அன்பு காட்டுகிறானோ? இல்லையே! ஐயோ பாவம்; என்றாவது அருள் செய்கிறானா? அதுவும் இல்லையே! கேசி என்னும் அரக்கன் வாயைக் கிழித்த அக்கண்ணனின் நெஞ்சம் வன்மையாக இருக்கிறதே! 2634

மனத்தையும் அடக்கி ஆளும் குறும்புடைய ஐம்புலன்களின் கோபத்தை அழித்து, பகவானிடம் ஒருமைப்படுத்தும் மாட்சி, வைணவர்களிடம் உள்ளது. குளிர்ச்சி உடைய திருத்துழாய் மாலை அணிந்த திருமால் கைங்கர்யத்தில், தங்களை ஈடுபடுத்திக் கொள்ளும் இவர்கள், அவன் திருவடி தொழுவதை மனத்தின் தொழிலாகவும், ஐம்புலன்களின் கடமையாகவும் கொள்வார்கள். 2635

வாமனனாகத் தன்னைப் பாவித்துக் கொண்டு பூமியை யாசித்த எம்பெருமான் பூதனைப் பேயின் நஞ்சுமுலையை உண்பதாகப் பாவித்து அவளைக் கொன்றான். இத்திருமாலை வணங்கவே என் கண்கள் ஆசைப்படும்; என் வாயோ அவன் குணங்களைப் பேசுவதைத் தவிர வேறு எதனையும் உண்பதற்கு விரும்புமோ? விரும்பாது. 2636

செங்கண் மாலே! உன்னிடம் நான் ஒன்று கூறுவேன். நீ எப்பொழுதும் உன் அடியார்க்கு நன்மை அருள்வதையே எண்ணுகிறாய். அவர்களிடத்தே நீ காட்டும் பிரிவு அவர்களுக்கு வைகுந்தத்தை அளிக்கிறது. ஆயினும் அந்தப் பரமபதத்தை நோக்க, உன் திருக்குணங்களிலே அடியேன் ஊன்றி இருப்பதே மேலாகும். 2637

கன்றாய் வந்த அசுரனை எடுத்து, விளாமரத்தின் மீதெறிந்து, அந்த அசுரர்களை அழித்த, கண்ணபிரான் திருவடிகளை வணங்கும் பேறு பெற்றோம். நம் கொடிய வினைகள் அதனால் போயின. அவை மறைந்த இடம் ஆகாயமோ? அலைகடலோ? காற்றோ? நெருப்போ? அல்லது காட்டில் மறைந்தனவோ! ஐயோ! பாவம். 2638

அலைகள் மோதும் பாற்கடலில் பாம்பணையில் பள்ளி கொண்ட பெருமான் என்னிடம் அருள் கொண்டு நெஞ்சிலே வாழ்கிறான். தன் முயற்சியால் அணுக முடியாத பகவானை அவன் அருளாலேயே மனத்தளவில் ஒரு தன்மையாய் எப்பொழுதும் அனுபவிக்க முடிகிறது. அவன் அருளே மனக் கவலையையும் தீர்க்கிறது. 2639

வரவு ஆறு ஒன்று இல்லையால்; வாழ்வு இனிதால்; எல்லே!
ஒரு ஆறு ஒருவன் புகாவாறு -உரு மாறும்
ஆயவர் தாம் சேயவர் தாம் அன்று உலகம் தாயவர்-தாம்,
மாயவர் தாம் காட்டும் வழி. 2640

வழித் தங்கு வல்வினையை மாற்றானோ? நெஞ்சே!
தழீ இக்கொண்டு போர் அவுணன் தன்னை,- சுழித்து எங்கும்
தாழ் வு இடங்கள் பற்றி புலால் வெள்ளம் தான் உகள,
வாழ்வு அடங்க மார்வு இடந்த மால். 2641

மாலே! படிச் சோதி! மாற்றேல் இனி; உனது
பாலே போல் சீரில் பழுத்தொழிந்தேன்; -மேலால்,
பிறப்பு இன்மை பெற்று அடிக்கீழ்க் குற்றேவல் அன்று;
மறப்பு இன்மை யான் வேண்டும் மாடு. 2642

மாடே வரப்பெறுவராம் என்றே வல்வினையார்
காடானும் ஆதானும் கைக்கொள்ளார்-ஊடே போய்ப்
பேர் ஓதம் சிந்து திரைக் கண்வளரும் பேராளன்
பேர் ஓதச் சிந்திக்கப் பேர்ந்து 2643

பேர்ந்து ஒன்று நோக்காது பின் நிற்பாய்,நில்லாப்பாய்
ஈர்ந் துழாய் மாயனையே ; என் நெஞ்சே! -பேர்ந்து எங்கும்
தொல்லை மா வெம் நரகில் சேராமல் காப்பதற்கு
இல்லை காண் மற்றோர் இறை. 2644

இறை முறையான் சேவடிமேல் மண் அளந்த அந் நாள்
மறை முறையால் வான் நாடர் கூடி -முறைமுறையின்
தாது இலகு பூத் தெளித்தால் ஒவ்வாதே தாழ் விசும்பின்,
மீது இலகித் தான் கிடக்கும் மீன்? 2645

மீன் என்னும் கம்பில் வெறி என்னும் வெள்ளி வேய்,
வான் என்னும் கேடு இலாவான் குடைக்குத் -தான் ஓர்
மணிக் காம்பு போல் நிமிர்ந்து மண் அளந்தான் நங்கள்
பிணிக்கு ஆம் பெரு மருந்து பின். 2646





*அசுரர்களால் அணுக முடியாத எம்பெருமான் உலகத்தைத் தாவி அளந்து ஆச்சரியமான மாயங்களைச் செய்தான். அவன் அருளுக்கு அடி என்ன என்று காண முடியாது. ஆனால் அவ்வருள் நம் வாழ்வுக்கு இனிமை தருகிறது. அக் கண்ணபிரான் தன் வடிவத்தையும் இயல்பையும் மாற்றிக் கொண்டு, எல்லோர்க்கும் அருள் செய்யத் தானே உபாயமாக இருக்கிறான் என்னே! இத் தன்மை!* **2640**

*நெஞ்சே! நரசிம்மப்பிரான் இரணியன் மார்பைப் பிளந்து இரத்த வெள்ளம் பள்ளங்களை நோக்கி ஓடச் செய்து, வதைத்தான். இவ்வாறு பிரகலாதனைக் காத்தவன் என் கொடிய பாவங்களை அழிக்க மாட்டானா? என் உய்வுக்குத் தடையாக வழியில் நிற்கும் வினைகளைப் போக்கி எம்பெருமான் அருள் செய்வான் அல்லவா!* **2641**

*திருமாலே! பாலினும் இனிய உன் குணங்களில் மனம் இழந்த அடியேன் உன் ஒளி வடிவத்தைக் காணுமாறு அருள வேண்டும். பிறப்பற்ற வீடுபேறு பெற்று உன் அடிக்கீழ் தொண்டு செய்வதை விடவும், உன்னை நான் எப்பொழுதும் மறவாமல் இருக்கவே ஆசைப்படுகிறேன். உன்னை மறவாமை ஆகிய செல்வமே நான் வேண்டுவது.* **2642**

*அலைகடல் மீது பள்ளி கொள்ளும் திருமால் திருநாமங்களைத் தியானித்து வாயால் உச்சரிப்பதால், கொடிய பாவங்கள் என்னை விட்டுக் கிளம்பிக் காடுகளிலோ மற்றைய இடங்களிலோ குடியேறி இருக்க வேண்டும். அப்படிப் போகாமல், என்னிடமே வாழ்ந்து விடலாம் என்று என்னையே சுற்றுகின்றனவோ?* **2643**

*நெஞ்சமே! இனிய திருத்துழாய் மாலை அணிந்துள்ள மாயனையே எண்ணி இரு. அதை விட்டு வேறெதையும் கவனிக்காதே. அவனை விட்டால் வேறு வழி இல்லை. தொன்று தொட்டுத் தொடரும் வினைகளால் வரும் நரகத்தில் சேராதபடி நம்மைக் காப்பதற்கு எம்பெருமானைத் தவிர வேறு சுவாமி இல்லை. உபாயமும் இல்லை.* **2644**

*'பரந்தவானில் விளங்கும் விண்மீன்கள் தாதுக்களுடன் கூடிய பூக்கள் வரிசையாகத் தூவித் தெளித்தாற் போல் உள்ளன அல்லவா! இவைகளைப் பார்த்தால், எம்பெருமான் உலகளந்த பொழுது தேவர்கள் கூடி வழிபடத் தூவிய பூக்களோ என்று தோன்றுகிறது.* **2645**

*ஆகாயம் என்னும் அழியாத குடைக்கு, விண்மீன்களே இலைக் கம்புகளாகவும், சந்திரனே குடைக் காம்பின் நுனியிலுள்ள வெள்ளிக் குண்டலமாகவும், காண்கின்றன. உலகளந்தவன் எடுத்த பெரிய வடிவம், வானமாகிய குடைக்கு ஏற்ற நீலமணிக் காம்பாக இருந்தது. இப்படி உயர்ந்து வளர்ந்த பகவானே நம் பிறவி வியாதிக்குத் தக்க மருந்தாவான்.* **2646**

பின் துரக்கும் காற்று இழந்த சூல் கொண்டல் பேர்ந்தும் போய்,
வன் திரைக்கண் வந்து அணைந்த வாய்மைத்தே-அன்று
திருச் செய்ய நேமியான் தீ அரக்கி மூக்கும்
பருச் செவியும் ஈர்ந்த பரன். 2647

பரன் ஆம் அவன் ஆதல் பாவிப்பர் ஆகில்,
உரனால் ஒரு மூன்று போதும் -மரம் ஏழ் அன்று
எய்தானை புள்ளின் வாய் கீண்டானையே அமரர்
கைதான் தொழாவே கலந்து? 2648

கலந்து நலியும் கடுந் துயரை, நெஞ்சே!
மலங்க அடித்து மடிப்பான்-விலங்கல் போல்
தொல் மாலைக் கேசவனை நாரணனை மாதவனை,
சொல் மாலை, எப்பொழுதும் சூட்டு. 2649

சூட்டாய நேமியான், தொல் அரக்கன் இன் உயிரை
மாட்டே துயர் இழைத்த மாயவனை, -ஈட்ட
வெறி கொண்ட தண் துழாய் வேதியனை, நெஞ்சே!
அறி கண்டாய்; சொன்னேன் அது. 2650

அதுவோ நன்று என்று அங்கு அமர் உலகோ வேண்டில்,
அதுவோ பொருள் இல்லை அன்றே? -அது ஒழிந்து
மண் இன்று ஆள்வேன் எனிலும் கூடும்;மட நெஞ்சே!
கண்ணன் தாள் வாழ்த்துவதே கல். 2651

கல்லும் கனை கடலும் வைகுந்த வான் நாடும்
புல் என்று ஒழிந்தனகொல்? ஏ பாவம் -வெல்ல
நெடியான் நிறம் கரியான் உள்புகுந்து நீங்கான்
அடியேனது உள்ளத்து அகம். 2652

அகம் சிவந்த கண்ணினர் ஆய், வல்வினையர் ஆவார்
முகம் சிதைவராம் அன்றே, முக்கி-மிகும் திருமால்
சீர்க் கடலை உள் பொதிந்த சிந்தனையேன் தன்னை
ஆர்க்கு அடல் ஆம்,செவ்வே அடர்த்து? 2653





வானில் பரவும் நீருண்ட மேகத்தைக் காற்று அடித்துத் தள்ளவும், அது கடலில் விழுந்து படிவது போல சக்கர கையினன் இராமபிரான் சூர்ப்பனகையின் மூக்கையும் காதுகளையும் அறுத்துத் தள்ளி, இராவணவதத்துக்குப் பின், திருப்பாற்கடல் அடைந்து பள்ளி கொண்டான். 2647

இராமபிரான் ஏழு மராமரங்களைத் தொளை செய்தான். கண்ணபிரான் பகாசுரப் பறவையின் வாயைக் கிழித்தான். இந்த இராமகிருஷ்ணனான திருமாலை நெஞ்சில் தியானித்து வழிபடும் தேவர்கள், இவனே பரம்பொருள் என்று உணர்ந்து முக்காலங்களிலும் கைகளைச் சேர்த்துக் கூப்புவார்கள் அன்றோ! 2648

நெஞ்சமே! மலை போன்ற திருமால் நம்மிடத்தே பழங்காலம் முதலாய் ஆசை கொண்டு நம்மைத் துன்புறுத்தும் துயரங்களை முகத்தில் அடித்துத் துரத்துவான். கேசவன், நாராயணன், மாதவன் என்னும் மூன்று திருநாமங்களைப் பெற்ற அவனைச் சொற்களாகிய பாமாலை கொண்டு சூட்டுவாய். 2649

நெஞ்சே! சக்கரத்தைத் தரித்துள்ள எம்பெருமான் இராமனாக அவதாரம் செய்து இராவணன் துயர் அடையும் படி கொன்று தீர்த்தான். மாயன் ஆன, திருத்துழாய் அணிந்தவனும் வேதங்களால் துதிக்கப்படுவனும், ஆகிய இப்பெருமானை நீ துதித்து வணங்கு. உனக்கு மட்டுமே இந்த அறிவுரையை நான் கூறுகிறேன். 2650

நெஞ்சே! நீ பரமபதத்தை விரும்பினால், பகவான் அதை அளிக்கிறான். அன்றி, நீ இவ்வுலகிலேயே செல்வம் பெற்று ஆட்சி செய்ய விரும்பினால் அதையும் அவன் தந்து அருள்கிறான். ஆகவே கண்ணபிரான் எதையும் தரவல்லவன் என்பது தெரிந்து நீ இவைகளைத் தவிர்த்து அவன் திருவடிகளை வாழ்த்துவதே மேல் என்பதைக் கற்றுக் கொள். 2651

கறுத்தநிறக் கண்ணன், நெஞ்சிற் புகுந்து நிலை கொண்டான். ஸ்ரீவைகுண்டம், ஆர்ப்பரிக்கும் திருப்பாற்கடல், இரண்டும் அவனுக்குச் சிறிய இடங்களாகி விட்டன. அற்பமான இவற்றைவிட்டு என் நெஞ்சமே பெரிதாகக் கொண்டு புகுந்தானே! 2652

யாவர்க்கும் மேலான திருமாலின் கல்யாண குணக்கடலை அடியேன் என்னுள் பொதிந்து வைத்துக் கொண்டு, அவன் அருள் பெற்றேன். எனவே என் வினைகள் கோபம் கொண்டு சிவந்த கண்களுடன் முகம் வாடி வருந்துகின்றன. என்னை இனித்தாக்கித் துன்புறுத்த யாருக்கும் தைரியம் இல்லை. 2653

அடர் பொன் முடியானை, ஆயிரம் பேரானை,
சுடர் கொள் சுடர் ஆழியானை, -இடர் கடியும்
மாதா பிதுவாக வைத்தேன் எனது உள்ளே
யாது ஆகில் யாதே இனி? 2654

இனி நின்று நின் பெருமையை யான் உரைப்பது என்னே?
தனி நின்ற சார்வு இலா மூர்த்தி -பனி நீர்
அகத்து உலவு செஞ்சடையான் ஆகத்தான்; நான்கு
முகத்தான் நின் உந்தி முதல். 2655

முதல் ஆம் திரு உருவம் மூன்று என்பர்; ஒன்றே
முதல் ஆகும் மூன்றுக்கும் என்பர்; -முதல்வா!
நிகர் இலகு கார் உருவா! நின் அகத்தது அன்றே
புகர் இலகு தாமரையின் பூ? 2656

பூவையும், காயாவும் நீலமும் பூக்கின்ற
காவி மலர் என்று காண்தோறும் -பாவியேன்
மெல் ஆவி, மெய் மிகவே பூரிக்கும் அவ்வவை
எல்லாம் பிரான் உருவே என்று. 2657

என்றும் ஒருநாள் ஒழியாமை யான் இரந்தால்
ஒன்றும் இரங்கார்; உருக் காட்டார்-குன்று
குடை ஆக ஆ காத்த கோவலனார்; நெஞ்சே!
புடை தான் பெரிதே புவி. 2658

புவியும் இரு விசும்பும் நின் அகத்த; நீ என்
செவியின் வழி புகுந்து என் உள்ளாய்; -அவிவு இன்றி
யான் பெரியன் நீபெரியை என்பதனை யார் அறிவார்?
ஊன் பருகு நேமியாய் உள்ளு. 2659

உள்ளிலும் உள்ளம் தடிக்கும்; வினைப் படலம்
விள்ள விழித்து உன்னை மெய் உற்றால் -உள்ள
உலகு அளவும் யானும்உளன் ஆவன்; என்கொலோ?
உலகு அளந்த மூர்த்தி! உரை. 2660





*ஆயிரம் திருநாமங்களுடைய எம்பெருமான் தங்க மயமான திருமுடி சூடியவன்; சந்திரனையும் சூரியனையும் தோற்கடிக்கும் ஒளி உடைய சக்கரத்தை ஏந்தியவன். இப்பெருமானே என் தாயும் தந்தையுமாய் நின்று, இதயத்தில் தங்கி என் துயரங்களை அகற்றுகிறான். ஆகவே எனக்கு எக் கவலையும் இல்லை.* **2654**

*எம்பெருமானே! உலகுக்குக் காரணமான முழு முதல் தெய்வம் நீயே. கங்கையைச் சடையில் கொண்டுள்ள சிவன் உன் மேனியின் வலப்பகுதியில் வாழ்கிறான். நான்முகனோ உன் கொப்பூழ்த் தாமரையில் உண்டானவன். இப்படிப்பட்ட மேன்மைகள் உள்ள உன் பெருமையை என்னால் எவ்வாறு கூற முடியும்?* **2655**

*மேகநிற மேனியனே! நீயே யாவற்றுக்கும் காரணமான மூல புருஷன். பிரமன், விஷ்ணு, சிவன் முன்று தெய்வங்கள் என்றும் இவர்க்கும் மேலான தத்துவம் என்றும் சிலர் கூறுவர். ஒளி உடைய தாமரையை உன் நாபியில் தோற்றுவித்து அதனின்றும் பிரமனையும் அவன் மூலம் சிவனையும் தோற்றுவித்த உன்னை அன்றி வேறு பரதத்வம் இல்லை.* **2656**

*பூவைப்பூ, காயாம்பூ, கருநெய்தல், செங்கழுநீர்ப் பூ ஆகிய பூக்களைக் காணும் பொழுது எம் பெருமான் திருவுருவமே நினைவில் வருகிறது. அடியேன் இவைகளை அவன் வடிவமாகவே எண்ணுவதால் உயிரும் உடம்பும் பூரிக்கின்றன.* **2657**

*ஒருநாள் கூடத் தவறாத படி பெருமான் காட்சியை வேண்டும் அடியேனுக்கு அவன் சிறிது கூட இரங்கவில்லையே! மலை தூக்கிப் பசுக்களைக் காத்த அக் கண்ணபிரானின் அருள் வெள்ளம் பாயாத ஒரு மூலையோ அடியேன்? இப்பூமி விசாலமான பரப்பு உடையதாயினும் அடியேனும் அதில் அடங்கேனோ?* **2658**

*ஊனைக் கவரும் சக்கரம் ஏந்திய பெருமானே! இவ்வுலகும் பரமபதமும் உனக்குள்ளே அடங்கி உள்ளன. இத்தகைய நீ என் காது வழியே புகுந்து என்னை விட்டு நீங்காமல் எப்பொழுதும் என்னிடமே உள்ளாய். இவ்வாறு நீ எனக்குள் அடங்கிய பிறகு, நான் பெரியவனா, நீ தான் பெரியவனா என்பதை யார் அறிவார்? தடை அற்ற வல்லமை உடைய நீ அறிந்தால் கூறு.* **2659**

*உலகளந்தவனே! என் தீவினைகள் அகலும்படி, நீ அருள் பார்வை செய்து விட்டால், நான் பரமபதம் பெற்று உன்னை அணுகுவேன். நீ பரந்துள்ள உலகம் எல்லாம் உன்னைப் போல் நானும் வியாபித்து விடுவேன். என் இதயம் மகிழ்ச்சியில் பூரிக்கிறது. இப்படி நான் கூறுவது ஏற்புடையதோ! நீயே கூறு.* **2660**

உரைக்கில் ஓர் சுற்றத்தார் உற்றார் என்று ஆரே?
இரைக்கும் கடல் கிடந்த எந்தாய்! -உரைப்பு எல்லாம்
நின் அன்றி மற்று இலேன் கண்டாய், எனது உயிர்க்கு ஓர்
சொல் நன்றி ஆகும் துணை. 2661

துணை, நாள், பெருங் கிளையும் தொல் குலமும் சுற்றத்து
இணை, நாளும் இன்பு உடைத்தாமேலும் -கணை நாணில்
ஓவாத் தொழில் சார்ங்கன் தொல் சீரை, நல் நெஞ்சே!
ஓவாத ஊணாக உண். 2662

உள் நாட்டுத் தேசு அன்றே? ஊழ்வினையை அஞ்சுமே!
விண் நாட்டை ஒன்று ஆக மெச்சுமே? -மண் நாட்டில்
ஆர் ஆகி எவ் இழிவிற்று ஆனாலும் ஆழி அங்கைப்
பேர் ஆயற்கு ஆள்ஆம் பிறப்பு. 2663

பிறப்பு, இறப்பு மூப்புப் பிணி துறந்து பின்னும்
இறக்கவும் இன்பு உடைத்தாமேலும் -மறப்பு எல்லாம்
ஏதமே என்று அல்லால் எண்ணுவனே மண் அளந்தான்
பாதமே ஏத்தாப் பகல்? 2664

பகல் இரா என்பதுவும் பாவியாது எம்மை
இகல்செய்து இரு பொழுதும் ஆள்வர்; -தகவாத்
தொழும்பர் இவர், சீர்க்கும் துணை இலர் என்று ஓரார்
செழும் பரவை மேயார், தெரிந்து. 2665

தெரிந்துணர்வு ஒன்று இன்மையால் தீவினையேன் வாளா
இருந்தொழிந்தேன் கீழ் நாள்கள் எல்லாம்-கரந்துருவின்
அம் மானை அந்நான்று பின் தொடர்ந்த ஆழி அங்கை
அம்மானை ஏத்தாது அயர்த்து. 2666

அயர்ப்பாய் அயராப்பாய் நெஞ்சமே சொன்னேன்
உயப்போம் நெறி இதுவே கண்டாய்; -செயற்பால
அல்லவே செய்கிறுதி நெஞ்சமே அஞ்சினேன்;
மல்லர் நாள் வல்வினனை வாழ்த்து. 2667





*ஒலிக்கும் பாற்கடலில் பள்ளி கொண்ட என் இறைவனே! நன்றாக ஆராய்ந்தால் யார் சுற்றத்தார்? என் ஆத்மாவுக்கு உற்ற துணையாகிய சுற்றம் நீயே தான். நானே உனக்குத் துணை என்று கூறும் உன் சொல் அன்றோ எனக்குத் துணை. உன்னைத் தவிர வேறு உறவினர் இல்லவே இல்லை.* **2661**

*நல்ல மனமே! நண்பர்கள், வாழ்நாள், கிளையாகப் பரந்த குடும்பத்தினர், குடிப்பிறப்பு, சுற்றத்தார் கூட்டம் ஆகிய இவை நாளும் மகிழ்ச்சியை உண்டு பண்ணுவதாகக் கூறுவாய். இவைகளில் நீ ஆசை கொள்ளாதே. சார்ங்கம் என்னும் வில் வளைத்து அம்பெய்த பெருமானின் குணங்களையே உணவாகக் கொள்.* **2662**

*எப்பிறவியில் தோன்றியவரும் எந்தஇழி தொழிலைச் செய்பவர் ஆயினும், சக்கரக்கையனான கண்ணனுக்கு ஆட்பட்டு விட்டால், அவர்கள் பெறும் ஒளி, பரமபத ஒளியை விட மேலானது. பகவானுக்கு ஆட்பட்டு விட்டால் தீவினைகளைப் பற்றி அஞ்ச வேண்டாம். சுவர்க்கமும் ஒரு பொருளாகிப் பாராட்டப்படுவதோ!* **2663**

*பிறப்பு, இறப்பு , முதுமை, வியாதிகள் ஆகியவற்றைப் போக்கியபின், ஆத்ம இன்பமாகிய கைவல்யம் அடைந்தாலும் வேண்டாம் என்பேன். உலகளந்த பெருமானின் திருவடிகளைத் துதிக்க மறந்த பொழுதுகள் துன்பமே என்று கொள்வேன். வேறு வகையாய் நான் எண்ண மாட்டேன்.* **2664**

*எம்பெருமான் என்னை ஆள்வதற்குக் காட்டும் அருள் என்னே! “இவன் சிறியவன்; நம் அருளுக்கு ஏற்றவன் அல்லன்” என்று என்னை நோக்காமல். என்னையும் ஒரு பொருளாகக் கொண்டு, பகல் இரவு வேறுபாடின்றி என்னை ஆட்கொண்டானே!* **2665**

*தன் சுய உருவத்தை மறைத்து இராமனாக வந்த எம்பெருமான் மாரீச மான் பின்னே தொடர்ந்தான். அழகிய மோதிரம் அணிந்த அப் பெருமானைத் துதிக்காமல் நான் கெட்டேன். நல்லுணர்வாகிய ஞானம் இல்லாததால், கீழ்க்கழிந்த நாள்களில் அயர்த்துப் போய், பகவான் நாமங்களைக் கூறாமல் வீண்பொழுது கழித்தேனே!* **2666**

*நெஞ்சமே! செய்யத் தகாதவைகளைச் செய்ய முயல்கிறாயே என்று அஞ்சுகிறேன். மல்லருடன் போரிட்ட ஆற்றல் மிகுந்த கண்ணபிரானை வாழ்த்தித் துதிப்பதே நீ உய்வடையச் சிறந்த வழியாகும். என் அறிவுரை கேட்காமல், பெருமானை மறந்து கெட்டுப் போனால் போ; அல்லது பகவானை மறவாமல் துதித்து வணங்கு. நான் உனக்குக் கூறவேண்டிய நல்லதைக் கூறி விட்டேன். உன்பாடு இனி.* **2667**

வாழ்த்தி, அவன் அடியைப் பூப் புனைந்து நின் தலையைத்
தாழ்த்து, இரு கை கூப்பு என்றால் கூப்பாத-பாழ்த்த விதி
எங்கு உற்றாய் என்று அவனை ஏத்தாது என் நெஞ்சமே!
தங்கத்தான் ஆமேலும் தங்கு. 2668

தங்கா முயற்றிய ஆய், தாழ்விசும்பின் மீது பாய்ந்து,
எங்கே புக்கு எத் தவம் செய்திட்டனகொல்-பொங்கு ஓதத்
தண் அம் பால் வேலைவாய்க் கண்வளரும் என்னுடைய
கண்ணன்பால் நல் நிறம் கொள் கார்? 2669

கார் கலந்த மேனியான், கை கலந்த ஆழியான்
பார் கலந்த வல் வயிற்றான், பாம்பு அணையான்- சீர் கலந்த
சொல் நினைந்து போக்காரேல் சூழ்வினையின் ஆழ் துயரை
என் நினைந்து போக்குவர் இப்போது? 2670

இப்போதும் இன்னும் இனிச் சிறிது நின்றாலும்,
எப்போதும் ஈதே சொல், என் நெஞ்சே! -எப்போதும்
கை கழலா நேமியான் நம்மேல் வினை கடிவான்,
மொய் கழலே ஏத்த முயல். 2671

## பெரிய திருவந்தாதி முற்றிற்று





*பாழாய்ப் போன விதியால் அலைக்கழிக்கப்பட்ட மனமே! எம்பெருமான் திருவடிகளை வாழ்த்தித் துதித்துப் பூக்கள் கொண்டு புனைந்து தலையாலே வணங்கு. உன் இரு கைகளையும் கூப்பு என்று உனக்குக் கூறியும் நீ என் பேச்சைக் கேட்காமல் இருக்கலாமா? எங்கு உற்றாய் அப்பா என்று கதறி அழைக்க முடியாதா?* 2668

*அலைபொங்கும் பாற்கடலில் திருக்கண் வளரும் பெருமானின் திருமேனி நிறத்தை மேகங்கள் பெற்றது, அவை முயன்று தவம் செய்ததாலோ? அவை அகன்ற வானில் எங்கு போய் எவ்வகைத் தவங்களைச் செய்தனவோ? அந்தக் கண்ணன் என் சுவாமி அன்றோ!* 2669

*மேகநிறத் திருமால் தம் திருக்கையில் சக்கரம் ஏந்தி உள்ளார். பிரளயத்தில் உலகங்களை வயிற்றில் வைத்துக் காத்த பெருமான், திருவனந்தாழ்வானைப் படுக்கையாகக் கொண்டு கண்வளர்கிறார். இந்த இறைவனின் திருக்குணங்களைக் கூறித் துதித்துப் பாவங்களைப் போக்கிக் கொள்ளாமல் உலகோர் வீணே பொழுது கழிக்கின்றாரே! பகவான் குணத்தைப் பற்றிப் பேசாத பொழுது என்ன பொழுதோ?* 2670

*என் மனமே! நமது கொடிய பாவங்களைப் போக்கிக் கொள்ள எம்பெருமான் திருவடிகளையே துதி செய். நீங்காமல் என்றும் கூடி நிற்கும் சக்கரத்தை ஏந்திய கையை உடைய பகவானின் திருவடிகளைத் தொழ, நீ உற்சாகம் கொள்வாய். நிகழ்காலத்திலும் வருங்காலத்திலும் எக்காலத்திலும் உனக்கு நன்மை தரும் உபதேசத்தைக் கூறினேன்.* 2671

## பெரிய திருவந்தாதி முற்றிற்று



ஸ்ரீ:

# இயற்பா

திருமங்கை ஆழ்வார் அருளிய
திருஎழுகூற்றிருக்கை

## நாலாயிர திவ்யப் பிரபந்தம்

ஸ்ரீ:

# நாலாயிர திவ்வியப் பிரபந்தம்

## இயற்பா

### திருமங்கை ஆழ்வார் அருளிய
### திருஎழுகூற்றிருக்கைத் தனியன்

வாழி பரகாலன் வாழி கலிகன்றி
வாழி குறையலூர் வாழ்வேந்தன் - வாழியரோ
மாயோனை வாள் வலியால் மந்திரங் கொள் மங்கையர் கோன்
தூயோன் சுடர் மான வேல்.

சீரார் திருவெழு கூற்றிருக்கை என்னும் செந்தமிழால்
ஆராவமுதன் குடந்தைப் பிரான் தன் அடியிணைக் கீழ்
ஏரார் மறைப் பொருளெல்லாம் எடுத்து இவ் வுலகு உய்யவே
சோராமற் சொன்ன அருள் மாரி பாதம் துணை நமக்கே.

**- எம்பெருமானார் அருளியது.**



ஸ்ரீ:

# நாலாயிர திவ்வியப் பிரபந்தம்

## இயற்பா

### திருமங்கை ஆழ்வார் அருளிய
### திருஎழுகூற்றிருக்கைத் தனியன் உரை

*புறச் சமயங்களுக்கு யமன் போன்ற திருமங்கை ஆழ்வார் வாழ்க. கலியைக் கெடுத்தவர் வாழ்க. திருக்குறையலூர் வாழும்படி அரசாண்ட திருமங்கை மன்னர் வாழ்க. மாயவனான திருமாலிடத்தினின்று தமது வாள்வலிமையால், திருமந்திரத்தைப் பெற்ற, பரிசுத்தரான திருமங்கை ஆழ்வாரின் ஒளியும் மானமும் பொருந்திய வேலாயுதம் வாழ்ந்திடுக.*

*சீர்மை நிறைந்த திருஎழு கூற்றிருக்கை என்னும் செந்தமிழ் நூலால் ஆராவமுதன் என்னும் திருக்குடந்தைப் பெருமானுடைய திருவடிகளைப் பற்றி, வேதப் பொருள்களுடன் விளங்க வைத்து, இவ்வுலகம் உய்வு பெற ஒன்று விடாமல் கூறிய, அருள் மழையாகிய திருமங்கை ஆழ்வாருடைய பாதங்களே நமக்கு அடைக்கலம் ஆகும்.*

**- எம்பெருமானார் அருளியது.**

# திருமங்கைஆழ்வார் அருளிச்செய்த

## திருஎழுகூற்றிருக்கை

ஒரு பேர் உந்தி இரு மலர்த் தவிசில்
ஒரு முறை அயனை ஈன்றனை; ஒரு முறை
இரு சுடர் மீதினில் இயங்கா மும் மதிள்
இலங்கை இரு கால் வளைய ஒரு சிலை
ஒன்றிய ஈர் எயிற்று அழல் வாய் வாளியில்
அட்டனை;மூவடி நானிலம் வேண்டி
முப்புரி நூலொடு மான் உரி இலங்கு
மார்வினில் இரு பிறப்பு ஒரு மாண் ஆகி
ஒருமுறை ஈர் அடி மூவுலகு அளந்தனை;

நால் திசை நடுங்க அம் சிறைப் பறவை
ஏறி, நால் வாய் மும் மதத்து இரு செவி
ஒரு தனி வேழத்து அரந்தையை ஒருநாள்
இரு நீர்மடுவுள் தீர்த்தனை;மூத் தீ
நான்மறை, ஐ வகை வேள்வி, அறு தொழில்
அந்தணர் வணங்கும் தன்மையை; ஐம் புலன்
அகத்தினுள் செறுத்து நான்கு உடன் அடக்கி
முக்குணத்து இரண்டு அவை அகற்றி, ஒன்றினில்
ஒன்றி நின்று ஆங்கு இரு பிறப்பு அறுப்போர்
அறியும் தன்மையை; முக் கண், நால் தோள்,
ஐ வாய் அரவோடு ஆறு பொதி சடையோன்
அறிவு அரும் தன்மைப் பெருமையுள் நின்றனை;
ஏழ் உலகு எயிற்றினில் கொண்டனை; கூறிய
அறு சுவைப் பயனும் ஆயினை; சுடர் விடும்
ஐம் படை அங்கையுள் அமர்ந்தனை; சுந்தர
நால் தோள் முந்நீர் வண்ண! நின் ஈர் அடி
ஒன்றிய மனத்தால் ஒரு மதி முகத்து
மங்கையர் இருவரும் மலர் அன அங்கையில்
முப்பொழுதும் வருட அறிதுயில் அமர்ந்தனை;
நெறி முறை நால் வகை வருணமும் ஆயினை;






# திருமங்கைஆழ்வார் அருளிச்செய்த

## திருஎழுகூற்றிருக்கை


எம்பெருமானே! ஒப்பற்றதும் அகன்றதும் ஆன உன் கொப்பூழில் தோன்றிய பெரிய தாமரைப் பூ ஆகிய ஆசனத்தில், ஒரு கால், பிரமனைப் படைத்தாய். இராமனாக நீ அவதரித்த பொழுது, சந்திர சூரியர் நடை ஆடாத, மூன்று வகை மதிள்களை உடைய இலங்கையை, நுனி வளைந்த உன் வில்லை வளைத்து தீ கக்கும் அம்புகளால் அழித்தாய். முன் ஒரு காலத்தில் பூணூலும் மான்தோலும் உன் மார்பில் விளங்க, ஓர் அந்தணப் பிரமசாரி ஆகி, மாவலியிடம் சென்று பூமியிலே மூவடி மண்ணை யாசித்து உன் இரண்டு திருவடிகளாலே மூவுலகங்களையும் அளந்து கொண்டாய்.

ஒரு காலத்தில் நான்கு திசைகளில் உள்ளோர் நடுங்கும்படி அழகிய சிறகுடைய கருடன் மீதேறி ஆழமான பொய்கைக் கரை எழுந்தருளி, தொங்கும் துதிக்கையும் மும்மதமும் உடைய ஒப்பற்ற கஜேந்திரன் துயரத்தை நீக்கி அருளினாய். நீயே, மூவகைத் தீயையும் நான்கு வேதங்களையும் ஐவகை வேள்வி களையும் ஆறு கருமங்களையும் உடைய அந்தணர்களால் வணங்கப்படும் தெய்வம் ஆவாய்.

ஐம்புலன்களை மனத்தால் அடக்கி, உண்ணல், உறங்கல், அஞ்சுதல், புணர்தல் ஆகிய நான்கையும் தவிர்த்து, இராசசம் தாமசம் இரண்டையும் விலக்கி, சாத்துவிகத்தில் நின்று பிறவித் துயரைப் போக்கவல்ல மேலோர்களால் அறியத் தக்கவன் நீயே. முக்கண்கள், நான்கு தோள்களுடன், ஐந்து வாய்கள் உடைய பாம்பையும் கங்கையையும் சடையில் தாங்கிய சிவனாலும் அறிய முடியாத பெருமை உடையவன் நீயே.

மேதகும் ஐம் பெரும் பூதமும் நீயே
அறுபதம் முரலும் கூந்தல் காரணம்
ஏழ் விடை அடங்கச் செற்றனை;
அறு வகைச் சமயமும் அறிவு அரு நிலையினை
ஐம்பால் ஓதியை ஆகத்து இருத்தினை;
அறம் முதல் நான்கு அவை ஆய்,
மூர்த்தி மூன்று ஆய், இரு வகைப் பயன் ஆய்,
ஒன்று ஆய் விரிந்து நின்றனை;

குன்றா மது மலர்ச் சோலை வண் கொடிப் படப்பை
வரு புனல் பொன்னி மா மணி அலைக்கும்
செந்நெல் ஒண் கழனித் திகழ் வனம் உடுத்த
கற்போர் புரிசைக் கனக மாளிகை
நிமிர் கொடி விசும்பில் இளம் பிறை துவக்கும்
செல்வம் மல்கு தென் திருக் குடந்தை
அந்தணர் மந்திர மொழியுடன் வணங்க,
ஆடு அரவு அமளியில் அறிதுயில் அமர்ந்த
பரம! நின் அடி இணை பணிவன்,
வரும் இடர் அகல-மாற்றோ வினையே. 2672

**திருஎழுகூற்றிருக்கை முற்றிற்று.**





ஏழுலகங்களை வராகவடிவில் கொம்பில் எடுத்து வந்தாய். அறுசுவைப் பயனும் நீயே. அழகிய கையில் ஒளி பொருந்திய சக்கரம் ஏந்தி உள்ளாய். நான்கு தோள்களுடைய கடல் நிற வண்ணனே! உன் இரு திருவடிகளையும் ஒன்றிய பக்தி மனத்துடன், சந்திரனை ஒத்த முகமுடைய திருமகளும் பூமிதேவியும் தங்கள் பூக்கரங்களால் எப்பொழுதும் வருட, யோக நித்திரை கொண்டாய். சாத்திர முறைப்படியான நான்கு வகை வருணங்களுக்கும் தலைவன் நீயே.

ஆத்மாக்கள் பொருந்தும் படியான ஐம்பூதங்களும் நீயே ஆவாய். வண்டொலிக்கும் கூந்தலை உடைய நப்பின்னைப் பிராட்டியைப் பெறுவதற்காக ஏழு எருதுகளின் வலிமை கெட, அடக்கி நெரித்தாய். ஆறுவகைச் சமயத்தாராலும் அறிந்து கொள்ள முடியாத நிலைமைவுடையவன் நீயே. ஐவகைக் கூந்தலை உடைய பெரிய பிராட்டியாரை உன் மார்பில் இருத்திக் கொண்டுள்ளாய். அறம், பொருள், வீடு, இன்பம் ஆகியவற்றைத் தருபவன் நீயே. பிரமன், விஷ்ணு, சிவன் ஆகிய மூன்று தெய்வங்களும் சுக துக்கங்கள் ஆகிய இரண்டுமாய் நீ ஒருவனே உலக முழுவதிலும் வியாபித்து நின்றாய்.

குறையாமல் தேன் துளிர்க்கும் பூஞ்சோலைகள் உள்ள திருக்குடந்தையில் வெற்றிலைத் தோட்டங்கள் உள்ளன. நீர் நிறைந்த காவிரி ஆறு, மணிகளைக் கொழித்தபடி நெல் வயல்களில் பாயும். ஊரின் நாற்புறங்களிலும் வனங்கள் உள்ளன. கல்வி சிறந்தோர் வாழும் பொன் மாளிகைகள் நிமிர்ந்து நிற்கும். சந்திரனைத் தொடும்படி விண்ணை நோக்கிக் கொடிகள் உலர்ந்திருக்கும். செல்வம் நிறைந்த இந்தத் தென் திருக்குடந்தை நகரில், அந்தணர்கள் வேத மந்திரங்களை ஓதியபடி வணங்கும் பெருமை உடையவனாய், படமுடைய ஆதி சேஷன் ஆகிற படுக்கை மீது யோக நித்திரை செய்யும் பரம புருஷனே! இந்தப் பிறவி வாழ்க்கையில் உண்டாகும் துயரங்கள் நீங்கும்படி, அடியேன் உம் இருதிருவடிகளிலும் பணிகின்றேன். தேவரீரே, அடியேன் பிறவித் துன்பங்களை நீக்கி அருள் செய்ய வேண்டும். 2672

**திருஎழுகூற்றிருக்கை முற்றிற்று.**

ஸ்ரீ :

# இயற்பா



திருமங்கை ஆழ்வார் அருளிய சிறிய திருமடல்

# நாலாயிர திவ்யப் பிரபந்தம்

ஸ்ரீ :

# நாலாயிர திவ்வியப் பிரபந்தம்

## இயற்பா

திருமங்கை ஆழ்வார் அருளிய

சிறிய திருமடல் – தனியன்

முள்ளிச் செழு மலரோ தாரான் முளை மதியம்
கொள்ளிக்கு என் உள்ளம் கொதியாமே- வள்ளல்
திருவாளன் சீர்க்கலியன் கார்க் கலியை வெட்டி
மருவாளன் தந்தான் மடல்.

**- பிள்ளை திருநறையூர் அரையர் அருளியது**



ஸ்ரீ :

# நாலாயிர திவ்வியப் பிரபந்தம்

## இயற்பா

திருமங்கை ஆழ்வார் அருளிய

சிறிய திருமடல் – தனியன் உரை

*கொடை வள்ளலான கலிகன்றி என்னும் திருமங்கை ஆழ்வார் கைங்கர்யச் செல்வமுடையவர்; செழித்த முள்ளிப் பூ மாலை அணிந்தவர்; கையில் வாள் ஏந்தியவர்; கல்யாண குணங்கள் உடையவர். பகவானை அடையாத என் நெஞ்சம் பிரிவில் துன்புற்று, உதிக்கும் அழகிய சந்திரனை நெருப்பாகக் கொண்டு கொதிக்காதபடி, சிறிய திருமடல் என்னும் இந்நூலை ஆழ்வார் அருளினார். கறுத்த கலியின் கொடுமையை வெட்டி வீழ்த்தினார்.*

**- பிள்ளை திருநறையூர் அரையர் அருளியது**

ஸ்ரீ:

# திருமங்கை ஆழ்வார் அருளிச்செய்த

## *சிறிய திருமடல்*

கார் ஆர் வரைக் கொங்கை, கண் ஆர் கடல் உடுக்கை
சீர் ஆர் சுடர்ச் சுட்டி செங்கலுழிப் பேர் ஆற்றுப்
பேர் ஆர மார்வில் பெரு மா மழைக் கூந்தல்,
நீர் ஆர வேலி நிலமங்கை என்னும் இப்
பாரோர் சொலப்பட்ட மூன்று அன்றே-அம் மூன்றும் 2673
ஆராயில் தானே அறம், பொருள் இன்பம் என்று;
ஆர் ஆர் இவற்றினிடை அதனை எய்துவார்
சீர் ஆர் இரு கலையும் எய்துவர்-சிக்கென மற்று
ஆரானும் உண்டு என்பார்; என்பது தான் அதுவும்
ஓராமை அன்றே உலகத்தார் சொல்லும் சொல்;
ஓராமை ஆம் ஆறு அது உரைக்கேன்; கேளாமே;
கார் ஆர் புரவி ஏழ் பூண்ட தனி ஆழி
தேர் ஆர் நிறை கதிரோன் மண்டலத்தைக் கீண்டு புக்கு
ஆரா அமுதம் அங்கு எய்தி-அதில் நின்றும்
வாராது ஒழிவது ஒன்று உண்டோ? அது நிற்க
ஏர் ஆர் முயல் விட்டுக் காக்கைப் பின் போவதே!
ஏர் ஆர் இளை முலையீர்! என் தனக்கு உற்றது தான்
கார் ஆர் குழல் எடுத்துக் கட்டி-கதிர் முலையை
வார் ஆர வீக்கி மணி மேகலை திருத்தி,
ஆர் ஆர் அயில் வேல் கண் அஞ்சனத்தின் நீறு அணிந்து
சீர் ஆர் செழும் பந்து கொண்டு அடியா நின்றேன் நான்;
நீர் ஆர் கமலம் போல் செங்கண் மால் என்று ஒருவன்
பாரோர்கள் எல்லாம் மகிழப் பறை கறங்க
சீர் ஆர் குடம் இரண்டு ஏந்தி-செழுந் தெருவே
ஆர், ஆர் எனச் சொல்லி ஆடும் அது கண்டு,
ஏர் ஆர் இளமுலையார், அன்னையரும் எல்லாரும்
வாராயோ என்றார்க்குச் சென்றேன், என் வல்வினையால்;
கார் ஆர் மணி நிறமும் கை வளையும் காணேன் நான்;
ஆரானும் சொல்லிற்றும் கொள்ளேன்-அறிவு அழிந்து. 2678



ஸ்ரீ:

# திருமங்கை ஆழ்வார் அருளிச்செய்த

## *சிறிய திருமடல்*

மேகங்கள் படியும் திருமலைகளே பூமிப் பிராட்டியின் இருமுலைகளாகும். பரந்த கடலே அவள் சேலை. சூரியனே அவள் திலகம். சிவந்து கலங்கி ஓடும் காவிரியே அவள் மார்பு ஆரம். கறுத்த மேகங்களே அவள் கூந்தல். ஆபரணமே அவள் காப்பு. இத்தகைய நில உலகில் கூறப்படும் உறுதிப்பொருள்கள், அறம், பொருள், இன்பம் ஆகும். **2673**

இம்மூன்றினுள் இன்பத்தை அடைந்தவர் சீர்மை உடைய அறம், பொருள் இரண்டையும் அடைந்தவரே ஆவர். குறைந்த அறிவுடைய சிலர் வீடு என்னும் நான்காவது உறுதிப் பொருள் உண்டெனன்பர். இது ஆராய்ச்சி இல்லாத பேச்சு என்பதைக் கூறுகிறேன் கேளுங்கள்.

மேக மண்டலத்தில், ஏழு குதிரைகளும் ஒற்றைச் சக்கரமும் உடைய தேரில் செல்லும் சூரியனின் மண்டலத்தைப் பிளந்து கொண்டு, பரமபதம் சென்று, அமுதமயமான பரம்பொருளை அடைந்து, அங்கிருந்து திரும்ப வராமல், இருத்தல் என்னும் ஒன்றுண்டு, என்பது பொருத்தம் அற்றதே. அது நிற்க. அழகிய முயலை விட்டு யாராவது காக்கை பின்னே போவார் உண்டோ? இள மார்புகளுடைய மாதர்களே! எனக்கு ஏற்பட்டதைக் கூறுகிறேன். கேளுங்கள்

கரிய கூந்தலை எடுத்து கட்டி முடித்த நான், கச்சைக் கட்டிய பிறகு, மேகலாபரணம் அணிந்து, வேல் போன்ற கண்களில் மை இட்டுக் கொண்டு, அழகிய பந்தைக் கையால் அடித்துக் கொண்டிருந்தேன். அப்பொழுது நீர் நிலையில் உள்ள தாமரை போன்ற கண்களை உடைய திருமால் ஆகிய நம்பி உலகோர் மகிழப் பறை கறங்க, இரு குடங்களைக் கையில் ஏந்திக் கொண்டு, "இவ்வீதியில் உள்ள பெண்களே! உங்கள் பெண்மையைக் காத்துக் கொள்ளுங்கள்" என்று கூறிக் கொண்டே ஆடினான். அதைக் கண்டு தாய்மாரும் மற்றவரும் 'நீயும் அவனைக் காண வாராய்' என்று என்னை அழைத்தனர். என்ன பாவம் செய்ததன் காரணமாகவோ, நானும் அங்கே சென்றேன். சென்றதும் காதல் மீதூர்ந்து என் நீல மணி நிறத்தை இழந்தேன். என் கை வளையல்கள் கழன்று விழுந்து, அவற்றைக் காணாமல் இழந்தேன். என்னைத் தேற்றிய தாய்மாரும் தோழியரும் கூறியவற்றையும் கேட்க முடியவில்லை. **2678**

தீரா உடம்பொடு பேதுறுவேன் கண்டு இரங்கி,
ஏர் ஆர் கிளிக் கிளவி எம் அனை தான் வந்து என்னைச்
சீர் ஆர் செழும் புழுதிக் காப்பிட்டு-செங் குறிஞ்சித்
தார் ஆர் நறு மாலைச் சாத்தற்குத் தான் பின்னும்
நேராதன ஒன்று நேர்ந்தாள்-அதனாலும்
தீராதுஎன் சிந்தை நோய்; தீராது என் பேதுறவு;
வாராது மாமை; அது கண்டு மற்று ஆங்கே
ஆரானும் மூது அறியும் அம்மனைமார் சொல்லுவார்:
பாரோர் சொலப்படும் கட்டுப்படுத்திரேல்,
ஆரானும் மெய்ப்படுவன் என்றார்-அது கேட்டுக்
கார் ஆர் குழல் கொண்டை கட்டுவிச்சி கட்டேறி,
சீர் ஆர் சுளகில் சில நெல் பிடித்து எறியா,
வேரா விதிர்விதிரா மெய் சிலிரா கை மோவா,
பேர் ஆயிரம் உடையான் என்றாள்-பேர்த்தேயும்
கார் ஆர் திருமேனி காட்டினாள்; கையதுவும்
சீர் ஆர் வலம்புரியே என்றாள்-திருத் துழாய்த்
தார் ஆர் நறு மாலை கட்டுரைத்தாள்; கட்டுரையா,
நீர் ஏதும் அஞ்சேல்மின்; நும் மகளை நோய் செய்தான்
ஆரானும் அல்லன்; அறிந்தேன் அவனை நான்;
கூர் ஆர் வேல் கண்ணீர்! உமக்கு அறியக் கூறுகெனோ?
ஆரால் இவ் வையம் அடி அளப்பதுண்டது தான்;
ஆரால் இலங்கை பொடி பொடியா வீழ்ந்தது? மற்று
ஆராலே கல் மாரி காத்தது தான் -ஆழி நீர் 2684
ஆரால் கடைந்திடப்பட்டது? அவன் காண்மின்
ஊர் ஆ நிரை மேய்த்து உலகு எல்லாம் உண்டு உமிழ்ந்தும்
ஆராத தன்மையனாய் ஆங்கு ஒருநாள் ஆய்ப்பாடி
சீர் ஆர் கலை அல்குல் சீர் அடிச் செந்துவர் வாய்
வார் ஆர் வனமுலையாள் மத்து ஆரப் பற்றிக்கொண்டு
ஏர் ஆர் இடை நோவ, எத்தனையோர் போதும் ஆய்,





*அறிவு அழியப் பெற்றுத் தீராத உடம்புடன் பித்துப் பிடித்தது போன்று இருந்த என்னைக் கண்டு, கிளிப்பேச்சுடைய என் தாயார் இரங்கினாள். தானே வந்து பாகவதர்களின் திருவடித் துகள்களை எனக்குக் காப்பாக இட்டாள். செங்குறிஞ்சி மாலையை அணிவித்துச் சாத்தன் தேவதையை வழிபட்டாள். இதனால் என் மன நோய் தீரவில்லை; பித்தான தன்மையும் மாறவில்லை. மாமை நிறமும் மீளவில்லை. இதைக் கண்ட மூதறிவு மிக்க அன்னைமார் "உலகவழக்கப்படி நோய் யாரால் வந்தது என அறியக் குறி கேட்கலாம்" என்றனர்.*

*இதனைக் கேட்ட அங்கிருந்த குறத்தி ஒருத்தி தானாகவே வந்து, தெய்வ ஆவேசம் கொண்டாள். அழகிய முறத்தில் நெல்லை எடுத்து வீசி எறிந்து வியர்த்து மெய் சிலிர்த்தாள். தன் கையை மோந்து பார்த்து, 'ஆயிரம் பெயர்கள் உடையவன் அல்லவா வந்துள்ளான்!' என்று கூறிக் கொண்டாள். மேலும் கருமேகத்தைச் சுட்டித் திருமால் வடிவத்தைக் காட்டினாள். அவன் கையில் வலம்புரிச் சங்கு என்றாள். திருத்துழாய் மாலை அணிந்த திருமாலே இவன் என்று குறி கூறினாள்.*

*இதன் பின் அவள் "நீங்கள் அஞ்சவேண்டாம். உங்கள் பெண்ணை நோவு செய்தவன் தாழ்ந்த தேவதை அல்ல. அவன் யார் என்று அறிந்தேன். கூரிய வேல் போன்ற கண்களை உடைய பெண்களே! நீங்கள் அறியும்படி அவன் யார் என்று கூறுகிறேன். கேளுங்கள்" என்றாள். அவள் கூறியதாவது:-*

*"இவ்வுலகம் யாருடைய திருவடிகளால் அளக்கப்பட்டது? யாரால் இலங்கை பொடிப் பொடி ஆயிற்று? கல் மழை யாரால் தடுக்கப்பட்டது? கடல் நீர் யாரால் கடையப்பட்டது, அவன் யார் தெரியுமா? ஆய்ப்பாடிப் பசுக்களை மேய்த்தவன் அவனே! பிரளயத்தில் உலகை உண்டு காத்தவன் அவனே! உலகை உண்டு திருப்தி பெறாத அவன் வெண்ணெய் உண்பதில் ஆசை கொண்டான்.* **2684**

*அழகிய சேலை உடுத்திய யசோதை தன் இடை நோவ, மத்தைக் கையிலே பிடித்து, நெற்றி வியர்க்கத் தயிர் கடைந்து திரண்ட வெண்ணெயை வேறு ஒரு பாத்திரத்தில் இட்டு, நார் உறியின் மேல் ஏற்றிக் காப்பாக வைத்திருந்தாள்.*

சீர் ஆர் தயிர் கடைந்து வெண்ணெய் திரண்டதனை
வேர் ஆர் நுதல் மடவாள் வேறு ஓர் கலத்து இட்டு,
நார் ஆர் உறி ஏற்றி, நன்கு அமைய வைத்ததனைப்
போர் ஆர் வேல் கண் மடவாள் போந்தனையும் பொய் உறக்கம்
ஓராதவன் போல் உறங்கி அறிவு உற்று
தார் ஆர் தடம் தோள்கள் உள் அளவும் கை நீட்டி
ஆராத வெண்ணெய் விழுங்கி-அருகு இருந்த
மோர் ஆர் குடம் உருட்டி முன் கிடந்த தானத்தே
ஓராதவன் போல் கிடந்தானைக் கண்டு அவளும்
வாராத் தான் வைத்தது காணாள்-வயிறு அடித்து இங்கு
ஆர் ஆர் புகுதுவார் ஐயர் இவர் அல்லால்,
நீர் ஆம்இது செய்தீர் என்று ஓர் நெடுங் கயிற்றால்
ஊரார்கள் எல்லாரும் காண, உரலோடே
தீரா வெ்குளியள் ஆய், சிக்கென ஆர்த்து அடிப்ப
ஆரா வயிற்றினோடு ஆற்றாதான்- அன்றியும்.
நீர் ஆர் நெடுங் கயத்தைச் சென்று அலைக்க நின்று உரப்பி
ஓர் ஆயிரம் பண வெம் கோ இயல் நாகத்தை
வாராய் எனக்கு என்று மற்று அதன் மத்தகத்து
சீர் ஆர் திருவடியால் பாய்ந்தான்-தன் சீதைக்கு
நேராவன் என்று ஓர் நிசாசரிதான் வந்தாளை
கூர் ஆர்ந்த வாளால் கொடி மூக்கும் காது இரண்டும்
ஈரா விடுத்து அவட்கு மூத்தோனை -வெந்நரகம்.
சேரா வகையே சிலை குனித்தான்; செந்துவர் வாய்
வார் ஆர் வனமுலையாள் வைதேவி காரணமா,
ஏர் ஆர் தடந் தோள் இராவணனை-ஈர் ஐந்து
சீர் ஆர் சிரம் அறுத்து செற்று உகந்த செங்கண் மால்,
போர் ஆர் நெடு வேலோன் பொன்பெயரோன் ஆகத்தை
கூர் ஆர்ந்த வள் உகிரால் கீண்டு-குடல் மாலை 2691





போர் வேல் போன்ற கண்களை உடைய யசோதை கண்ணன் திருட வருவானோ எனப் பார்த்திருந்தாள். அவள் வெளியே போகும் வரை ஒன்றும் அறியாதவன் போல் திருட்டுத் தூக்கம் தூங்கிய கண்ணன் கண்விழித்தான். மாலை அணிந்த தோள்களுடன் கூடிய கைகளைத் தாழியின் அடிவரை துழாவி வெண்ணெய் எடுத்து உண்டான். திருப்தி அடையாமல் அங்கிருந்த மோர்க் குடத்தை உருட்டினாள். ஒன்றும் தெரியாதவன் போல் படுத்துக் கிடந்தான்.

தான் வைத்த வெண்ணெயைக் காணாத யசோதை 'இத்தனை தின்றால் ஜீரணமாகுமா?' என்று வயிற்றில் அடித்துக் கொண்டாள். இதைச் செய்த பெரிய மனிதர் இவனைத் தவிர வேறு யார்? இங்கே யார் புக வல்லார்? என்று எண்ணிக் கண்ணனிடம் வந்தாள். இத் திருட்டுச் செய்தது நீதானே? என்று கேட்ட படி கையில் அகப்பட்ட குறுங் கயிற்றால் ஊரார்கள் எல்லோரும் காணும்படி அவனை உரலுடன் அழுந்தக் கட்டினாள். கோபத்துடன் அடித்தாள். அவனோ திருப்தி அடையாததால் வயிறு எரிந்து வருந்தி நின்றான்.

மேலும் பொய்கைக்குச் சென்று கலக்கி, ஆயிரம் படங்கள் கொண்டது போன்று தோன்றிய காளிய நாகத்திடம் என்னிடம் வா! என்று அழைத்த கண்ணன் அதன் தலையிலே தன் திருவடிகளை வைத்து நடனம் ஆடினான்.

ஸ்ரீ ராமன் தன் தேவியான சீதைக்குச் சமம் ஆவதாக வந்த அரக்கி சூர்ப்பனகையின் கொடி போன்ற மூக்கையும் இரு காதுகளையும், தன் கூர்மையான கத்தியால் அறுத்துத் துரத்தினான். அவ்வரக்கியின் மூத்தவனான கரனுடன் போர் செய்து தன் வில்லால், இராமன் அவனுக்கு நரக வேதனை அளித்தான். மேலும் சிவந்த வாயும் கச்சணிந்த மார்புகளும் உடைய வைதேகியை மீட்பதற்காக இராவணனுடன் போர் செய்து அவன் தோள்களையும் பத்துத் தலைகளையும் அறுத்து உகந்தான்.

செந்தாமரைக் கண்ணனான திருமால் நரசிம்ம வடிவம் கொண்டு, போரிட வந்த வேல் ஏந்திய இரணியன் மார்பைப் பிளந்து இரத்தம் பெருகச் செய்து அவன் குடலை மாலையாகக் கட்டிக் கொண்டான். பின்பு குங்குமப் பூச்சுடைய தன் தோள்களைக் கொட்டி முழக்கமிட்டு எழுந்தான். 2691

சீர் ஆர் திரு மார்பின்மேல் கட்டி செங் குருதி
சோராக் கிடந்தானைக் குங்குமத் தோள் கொட்டி
ஆரா எழுந்தான் அரி உருவாய்-அன்றியும்
பேர் வாமனன் ஆகிய காலத்து மூவடி மண்
தாராய் எனக்கு என்று வேண்டிச் சலத்தினால்
நீர் ஏற்று உலகு எல்லாம் நின்று அளந்தான் மாவலியை;-
ஆராத போரில் அசுரர்களும் தானுமாய்
கார் ஆர் வரை நட்டு நாகம் கயிறு ஆக,
பேராமல் தாங்கிக் கடைந்தான்-திருத் துழாய்த்
தார் ஆர்ந்த மார்வன் தடமால் வரைபோலும்
போர் ஆனை பொய்கைவாய்க் கோட்பட்டு நின்று அலறி,
நீர் ஆர் மலர்க் கமலம் கொண்டு ஓர் நெடுங் கையால்
நாராயணா! ஓ! மணிவண்ணா! நாகணையாய்!
வாராய்; என் ஆர் இடரை நீக்காய்-என வெகுண்டு
தீராத சீற்றத்தால் சென்று இரண்டு கூறுஆக
ஈரா அதனை இடர் கடிந்தான், எம் பெருமான்
பேர் ஆயிரம் உடையான், பேய்ப் பெண்டீர்! நும் மகளைத்
தீரா நோய் செய்தான் என உரைத்தாள்-சிக்கென மற்று
ஆரானும் அல்லாமை கேட்டு எங்கள் அம்மனையும்
போர் ஆர் வேல் கண்ணீர்! அவன் ஆகில் பூந் துழாய்
தாராது ஒழியுமே; தன் அடிச்சி அல்லளே; மற்று
ஆரானும் அல்லனே என்று ஒழிந்தாள்-நான்அவனைக்
கார் ஆர் திருமேனி கண்டதுவே காரணமா,
பேரா பிதற்றா, திரிதருவன்-பின்னையும்
ஈராப் புகுதலும், இவ் உடலைத் தண் வாடை
சோரா மறுக்கும் வகை அறியேன்-சூழ் குழலார் 2698





அன்றியும் வாமனனாக வந்த பொழுது மூவடி மண் தாராய் எனக்கு என்று மாவலியிடத்தே யாசித்து அவன் தான நீரை ஏற்று உலகங்களை அளந்தான்.

தேவாசுர யுத்தத்தில். அசுரர்களும் தானுமாய்த் திருத்துழாய் மாலை அணிந்த திருமால், மேகம் படிந்த மந்தர மலையை மத்தாக நட்டு, வாசுகிப் பாம்பைக் கயிறாகச் சுற்றி, மலை ஆடாதபடி தாங்கிக் கடல் கடைந்தான்.

மதநீருடைய மலை போன்ற கஜேந்திரன் பொய்கையில் தன் துதிக்கையால் தாமரைப் பூவை எடுத்ததும் முதலை வாய்ப்பட்டு அலறி, "நாராயணா! மணிவண்ணா! அனந்த சயனா! என் இடரைப் போக்குவாய். " என்று கூறிற்று. உடனே அடங்காத கோபத்துடன் அங்கே சென்று முதலையைச் சினந்து இரு கூறாகப் பிளந்து யானையின் துன்பத்தை எம்பெருமான் போக்கினான்.

"இப்பெருமானுக்கு ஆயிரம் பெயர்கள் உண்டு. அறிவற்ற பெண்களே! உம் மகளுக்குத் தீராத நோய் உண்டாக்கியவன் இத் திருமாலே!" என்று கட்டுவிச்சி கூறி முடித்தாள்.

அதற்கு மேல் என் தாயும் வேறு எத்தெய்வமும் இந் நோய்க்குக் காரணமில்லை என்று தெளிவு பெற்றாள். அவள், "போர் செய்யும் வேல் போன்ற கண்களுடைய தோழிகளே! இந் நோய் செய்தவன் எம்பெருமான் ஆகில், இவளுக்குத் திருத்துழாய் மாலையைத் தராது போவானோ? இவள் அவன் அடிமை அன்றோ?" என்று கூறிக் கவலை தீர்ந்தாள்.

நானோ என்றால் அவனது கரிய திருமேனியைச் சேவித்த காரணமாய், வாயால் பிதற்றிக் கொண்டு திரிகிறேன். குளிர்ந்த வாடையோ இவ்வுடலின் உள்ளே புகுந்து பிளந்து, எனக்குச் சோர்வை உண்டாக்கித் துன்புறுத்துகிறது. அதைச் சொல்ல அறியேன். 2698

ஆரானும் ஏசுவர் என்னும் அதன் பழியை
வாராமல் காப்பதற்கு வாளா இருந்தொழிந்தேன்;
வாராய் மட நெஞ்சே! வந்து-மணிவண்ணன்
சீர் ஆர் திருத் துழாய் மாலை நமக்கு அருளி
தாரான் தரும் என்று இரண்டத்தில் ஒன்று அதனை,
ஆரானும் ஒன்னாதார் கேளாமே, சொன்னக்கால்
ஆராயுமேலும்; பணி கேட்டு அது அன்று எனிலும்;
போராது ஒழியாதே போந்திடு நீ என்றேற்கு
கார் ஆர் கடல் வண்ணன் பின் போன நெஞ்சமும்
வாராதே என்னை மறந்தது தான்-வல்வினையேன்
ஊரார் உகப்பதே ஆயினேன்-மற்று எனக்கு இங்கு
ஆராய்வார் இல்லை; அழல்வாய் மெழுகு போல்,
நீராய் உருகும் என ஆவி-நெடுங் கண்கள்.
ஊரார் உறங்கிலும் தான் உறங்கா; உத்தமன் தன்
பேர் ஆயினவே பிதற்றுவன்-பின்னையும்
கார் ஆர் கடல் போலும் காமத்தர் ஆயினார்
ஆரே பொல்லாமை அறிவார்? அது நிற்க-
ஆரானும் ஆதானும் அல்லள் அவள் காணீர்;
வார் ஆர் வனமுலை வாசவதத்தை என்று
ஆரானும் சொல்லப்படுவாள் -அவளும் தன்
பேர் ஆயம் எல்லாம் ஒழியப் பெருந் தெருவே
தார் ஆர் தடந்தோள் தளைக் காலன் பின் போனாள்;
ஊரார் இகழ்ந்திடப்பட்டாளே?-மற்று எனக்கு இங்கு 2705





அடர்ந்த கூந்தலுடைய பெண்கள் என்னைப் பழிப்பரே என்று அப்பழி வராமல் தடுப்பதற்காகவே இதுவரை சும்மா இருந்தேன்.

"மடநெஞ்சமே! நீலமணி நிறப் பெருமானிடம் தூது செல்ல எழுந்திரு. அவன் நமக்கு அருள் செய்து திருத்துழாய் மாலையைத் தருவானா, தரமாட்டானா என்பதைக் கேட்டுத் தெரிந்து கொள். அவனை விரும்பாதவர் கேளாதபடி நீ சொன்னாயாகில் அவனும் விசாரிப்பான். அல்லது அவன் என்னைத் தெரியாது என்று மறுத்தாலும் சரி. நீ அங்கே தங்காமல் இங்கே வந்து விடு" என்று நெஞ்சிடம் நான் கூறினேன். என் பேச்சுக்கு உடன்பட்ட நெஞ்சம் கடல் வண்ணனிடம் சென்று, மீளாமல் என்னை மறந்து விட்டது.

கொடிய பாவங்கள் செய்த நான் ஊரார் இது பற்றி மகிழும்படி நிலை குலைந்தேன். எனக்கோ இங்கு பேச்சுக்குத் துணையாரும் இல்லை. தீயில் இட்ட மெழுகு போல நீர்ப் பண்டமாய் உருகுகிறேன். ஊரில் உள்ளார் உறங்கினாலும் என் கண்கள் உறங்கவில்லை. உத்தமனான எம்பெருமான் திருநாமங்களையே அலற்றுகிறேன்.

ஆழ்ந்த கடல் போன்ற காமத்தை உடையவர்கள் எவர் தாம் உலகோர் பழியை விசாரிப்பார்? அது நிற்க

அவள் சாமானியமானவள் அல்லள். கச்சணிந்த அழகிய முலைகளை உடைய வாசவதத்தை என்று புகழப்படுபவள். தனது தோழிகளை விட்டுப் பிரிந்து பெரிய தெரு வழியே தன் காதலன் வத்சராயன் பின்னே சென்றாள். அவனோ மாலை அணிந்த தோள்களுடன் கால்களில் விலங்கிடப் பெற்றிருந்தான். அதனால் அவள் ஊர் மக்களால் பழிக்கப்பட்டாளோ? இல்லையே. 2705

ஆரானும் கற்பிப்பார் நாயகரே? நான் அவனைக்
கார் ஆர் திருமேனி காணும் அளவும் போய்,
சீர் ஆர் திருவேங்கடமே திருக்கோவ-
லூரே மதிள் கச்சி ஊரகமே பேரகமே
பேரா மருது இறுத்தான் வெள்ளறையே வெஃகாவே,
பேர் ஆலி தண்கால் நறையூர் திருப்புலியூர்
ஆராமம் சூழ்ந்த அரங்கம் -கணமங்கை
கார் ஆர் மணி நிறக் கண்ணனூர் விண்ணகரம்
சீர் ஆர் கணபுரம் சேறை திருவழுந்தூர்
கார் ஆர் குடந்தை கடிகை கடல்மல்லை,
ஏர் ஆர் பொழில் சூழ் இடவெந்தை நீர்மலை
சீர் ஆரும் மாலிருஞ்சோலை திருமோகூர்-
பாரோர் புகழும் வதரி வடமதுரை,
ஊர் ஆய எல்லாம் ஒழியாமே நான் அவனை
ஓர் ஆனை கொம்பு ஒசித்து ஓர் ஆனை கோள்விடுத்த
சீரானை செங்கண் நெடியானைத் தேன் துழாய்த்
தாரானை தாமரை போல் கண்ணானை-எண் அருஞ் சீர்
பேர் ஆயிரமும் பிதற்றி-பெருந் தெருவே
ஊரார் இகழிலும் ஊராது ஒழியேன் நான்,
வார் ஆர் பூம் பெண்ணை மடல். 2710

## சிறிய திருமடல் முற்றிற்று





இப்படிப்பட்ட என் நிலையில், என் துணிவுக்கு எதிராக அறிவுறுத்துபவர் எவரேனும் இருந்தால் அவர்கள் எனக்கு நாயகர் ஆவரோ? இல்லை; நான் அவனுடைய காள மேகத் திருவடிவத்தைக் கண்டு களிக்கும் வரை ஊர் ஊராகப் போவேன்.

சீர்மை மிக்க திருவேங்கட மலை; திருக்கோவலூர், மதிள் சூழ்ந்த காஞ்சியில் உள்ள ஊரகம், திருப்பேரகம், மருதமரங்களை முறித்த கண்ணனின் திருவெள்ளறை, திருவெஃகா, பெயர் பெற்ற திருவாலி, திருத்தண்கால், திருநறையூர், குட்ட நாட்டுத் திருப்புலியூர், அழகிய தோட்டங்கள் சூழ்ந்த திருவரங்கம், திருக்கண்ணமங்கை, நீலநிறக் கண்ணனின் திருவிண்ணகர், சீர்மை உடைய திருக்கண்ணபுரம், திருச்சேறை, திருவழுந்தூர், நீர்வளம் உடைய திருக்குடந்தை, திருக்கடிகைத் தடங்குன்றம், திருக்கடல் மல்லை, சோலைகள் சூழ்ந்த திருவிடவெந்தை, திருநீர் மலை, அழகிய திருமாலிருஞ்சோலைமலை, திருமோகூர், உலகோர் புகழும் வதரியாசிரமம், வடமதுரை முதலிய திவ்விய தேசங்கள் ஒன்றும் தப்பாமல் செல்வேன்.

குவலயாபீட யானையின் கொம்பை ஒடித்து, கஜேந்திரன் துன்பத்தைப் போக்கியவன் பெருமையைப் பாடுவேன். சிவந்த கண்கள் உடையவனாய் எனக்கு எட்டாதவனாய், தேன் துளிர்க்கும் திருத்துழாய் மாலை அணிந்தவனாய்த் தாமரைக் கண்கள் உடையவனாய்த் திகழும் எம்பெருமானைப் பற்றிய, எண்ண முடியாத குணங்களுடைய ஆயிரம் திருப்பெயர்களையும் பிதற்றியவாறு, பெரிய வீதி வழியே ஊரார் பழித்தாலும் நான் நீண்ட பனை மடல் ஊர்வதை நிறுத்த மாட்டேன். மடல் ஊர்வேன். 2710

## சிறிய திருமடல் முற்றிற்று

ஸ்ரீ:

# இயற்பா



திருமங்கை ஆழ்வார் அருளிய பெரிய திருமடல்

## நாலாயிர திவ்யப் பிரபந்தம்

ஸ்ரீ :

# நாலாயிர திவ்வியப் பிரபந்தம்

## இயற்பா

திருமங்கை ஆழ்வார் அருளிய

பெரிய திருமடல் – தனியன்

பொன்னுலகில் வானவரும் பூ மகளும் போற்றி செயும்
நன்னுதலீர் நம்பி நறையூரர் - மன்னுலகில்
என்னிலைமை கண்டும் இரங்காரே யாமாகில்
மன்னு மடலூர்வன் வந்து.

**- பிள்ளை திருநறையூர் அரையர் அருளியது.**



ஸ்ரீ :

# நாலாயிர திவ்வியப் பிரபந்தம்

## இயற்பா

திருமங்கை ஆழ்வார் அருளிய

பெரிய திருமடல் – தனியன் உரை

*அழகிய நெற்றி உடையவரே! பரமபதத்தில் நித்திய சூரிகளும் திருமகளும் வாழ்த்திப் பாடும் நம்பியான திருநறையூர்ப் பெருமான், இம்மண்ணுலகில் என் நிலைமையைக் கண்டு இரங்க வில்லை ஆனால், அவன் இருக்கும் இடமெல்லாம் வந்து நான் மடல் ஊர்வேன்.*

**- பிள்ளை திருநறையூர் அரையர் அருளியது.**

ஸ்ரீ:

# திருமங்கை ஆழ்வார் அருளிச்செய்த

## பெரிய திருமடல்

மன்னிய பல் பொறி சேர் ஆயிர வாய் வாள் அரவின்
சென்னி மணிக் குடுமித் தெய்வச் சுடர் நடுவுள்,
மன்னிய நாகத்து அணைமேல் ஓர் மாமலை போல்,
மின்னும் மணி மகர குண்டலங்கள் வில் வீச,
துன்னிய தாரகையின் பேர் ஒளி சேர் ஆகாசம்
என்னும் விதானத்தின் கீழால்-இரு சுடரை 2711
மன்னும் விளக்கு ஆக ஏற்றி மறி கடலும்
பன்னு திரைக் கவரி வீச -நிலமங்கை
தன்னை முன நாள் அளவிட்ட தாமரை போல்
மன்னிய சேவடியை; வான் இயங்கு தாரகை மீன்
என்னும் மலர்ப் பிணையல் ஏய்ந்த -மழைக் கூந்தல்
தென்னன் உயர் பொருப்பும் தெய்வ வடமலையும்
என்னும் இவையே முலையா வடிவு அமைந்த
அன்ன நடைய அணங்கே-அடி இணையைத்
தன்னுடைய அங்கைகளால் தான் தடவ, தான் கிடந்து ஓர்
உன்னிய யோகத்து உறக்கம் தலைக்கொண்ட
பின்னை தன் நாபி வலயத்துப் பேர் ஒளி சேர்
மன்னிய தாமரை மா மலர்ப் பூத்து அம் மலர்மேல்
முன்னம் திசைமுகனைத் தான் படைக்க -மற்றுஅவனும்
முன்னம் படைத்தனன் நான்மறைகள் அம் மறை தான்
மன்னும் அறம், பொருள், இன்பம், வீடு என்று உலகில்
நல் நெறி மேம்பட்டன நான்கு அன்றே - நான்கினிலும்
பின்னையது பின்னைப் பெயர்தரும் என்பது; ஓர்
தொல் நெறியை வேண்டுவார் வீழ் கனியும் ஊழ் இலையும்
என்னும் இவையே நுகர்ந்து உடலம் தாம் வருந்தி
துன்னும் இலைக் குரம்பைத் துஞ்சியும் -வெம் சுடரோன் 2717



ஸ்ரீ:

# திருமங்கை ஆழ்வார் அருளிச்செய்த

## பெரிய திருமடல்

*நன்மையே நிலை பெறுக. ஆயிரம் வாய்களும் பல பொறிகளும் உடைய ஆதிசேஷனின் படங்களில் உள்ள மணிகள் ஒளி வீசிப் பரவ, அப்படுக்கையின் மீது, பெரிய மலை போல, எம்பெருமான் பள்ளி கொண்டான். விண்மீன்கள் ஒளி வீசும் வானமே விதானமாக விளங்க, அவன் அணிந்த மணிமய மகர குண்டலங்கள் ஒளி வீசுகின்றன.* 2711

*சந்திர சூரியரே விளக்குகளாகக் கடல் அலைகள் சாமரம் வீசப் பள்ளி கொண்ட திருமாலின் திருவடித் தாமரைகளே, முன்னாளில் நிலமாகிய மங்கையை அளந்தவை. இவற்றைத் திருமகள் வருடுகிறாள். இவள் அணிந்துள்ள மலர் மாலை விண்மீன்கள் ஆவன. மேகங்களோ இவள் கூந்தல். திருமாலிருஞ் சோலை மலையும் திருவேங்கடமும் இவள் இரு மார்பகங்கள் . இத்தகைய திருமகள் பெருமான் திருவடிகளைத் தடவ, அவன் யோக நித்திரை செய்கிறான். அறிதுயில் நீங்கிய பின் பெருமான் படைத்தல் தொழிலில் ஈடுபட்டான்.*

*தன் கொப்பூழ் வட்டத்துள் எம்பெருமான் ஒளியுடன் கூடிய தாமரைப் பூவை உண்டாக்கி அதில் நான்முகனைத் தோற்றுவித்தான். தோன்றிய பிரமன் நான்கு வேதங்களைத் திருமாவிடம் கற்றான். அவ்வேதங்கள் வெளியிடும் உறுதிப் பொருள்கள் அறம், பொருள், இன்பம், வீடு என்பவை.*

*இந்நான்கு உறுதிப் பொருள்களில் கடைசியான வீடு என்பது உடல் அழிந்த பின் உண்டாவது. இதனைப் பெற விரும்புவோர் தவநெறியே மேற் கொள்ள வேண்டியது. பழங்களையும் சருகுகளையும் உண்டு, உடலை ஒடுக்கி, இலைகளால் வேயப்பட்ட குடிசைகளில் தூங்கி, வெளியில் காய்ந்து, குளங்களில் முழுகி நீராடித் தவம் செய்பவர்கள் உடல் அழிந்த பிறகு வீடு பெறுகிறார்கள் என்று கேட்ட துண்டு. ஆனால், இன்னகாலத்தில் இன்னார் பெற்றார் என்று அறிந்தது இல்லை.* 2717

மன்னும் அழல் நுகர்ந்தும், வண் தடத்தினுள் கிடந்தும்,
இன்னது ஓர் தன்மையராய், ஈங்கு உடலம் விட்டு எழுந்து
தொல் நெறிக்கண் சென்றார் எனப்படும் சொல் அல்லால்,
இன்னது ஓர் காலத்து இனையார் இது பெற்றார்
என்னவும் கேட்டு அறிவது இல்லை-உளது என்னில்
மன்னும் கடுங் கதிரோன் மண்டலத்தின்நல் நடுவுள்
அன்னது ஓர் இல்லியின் ஊடு போய் -வீடு என்னும்
தொல் நெறிக்கண் சென்றாரைச் சொல்லுமின்கள்; சொல்லாதே
அன்னதே பேசும் அறிவு இல் சிறு மனத்து ஆங்கு
அன்னவரைக் கற்பிப்போம் யாமே-அது நிற்க
முன்னம் நான் சொன்ன அறத்தின் வழி முயன்ற
அன்னவர் தாம் கண்டீர்கள் ஆயிரக் கண் வானவர் கோன்
பொன் நகரம் புக்கு அமரர் போற்றி இசைப்ப-பொங்கு ஒளி சேர்
கொல் நவிலும் கோள் அரிமாத் தான் சுமந்த கோலம் சேர்
மன்னிய சிங்காசனத்தின்மேல் -வாள் நெடுங் கண்
கன்னியரால் இட்ட கவரிப் பொதி அவிழ்ந்து ஆங்கு
இன் இளம் பூந்தென்றல் இயங்க-மருங்கு இருந்த
மின் அனைய நுண் மருங்குல் மெல் இயலார் வெண் முறுவல்
முன்னம் முகிழ்த்த முகில் நிலா வந்து அரும்ப,
அன்னவர் தம் மான் நோக்கம் உண்டு ஆங்கு அணி மலர் சேர்
பொன் இயல் கற்பகத்தின் காடு உடுத்த மாடு எல்லாம்
மன்னிய மந்தாரம் பூத்த மதுத் திவலை
இன் இசை வண்டு அமரும் சோலைவாய் மாலை சேர்
மன்னிய மா மயில் போல் கூந்தல் -மழைத் தடங் கண் 2724





மோக்ஷம் உண்டென்றால், என்றும் வெப்பமான கதிர்களுடைய சூரிய மண்டலத்தின் நடுவே சென்று நுட்பமான ஓட்டை வழியே, மோட்சம் என்று சொல்லப்படுகிற இடத்துக்குச் சென்றாரைக் காட்ட முடியுமா? அப்படிக் காட்டாமல் மோட்சம் உண்டென்னும் பழைய பேச்சையே கூறும் அறிவற்றவர்களுக்கு நாம் என்ன கற்பிக்க முடியும்?

மேலும் முன்னே நான் கூறிய அறத்தைச் சாத்திர முறைப்படி பின்பற்றி நின்றவர் பெறும் பயன்பற்றிக் கூறுவோம். இவர்கள் ஆயிரம் கண்களுடைய இந்திரனின் உலகம் புகுவார்கள். தேவர்கள் வாழ்த்த, கொல்லவல்ல சிங்கங்கள் சுமக்கும் ஆசனத்தில் அமரப் பெறுவார்கள். வாள் போன்ற கூரிய கண்களுடைய தேவமாதர் சாமரை வீசுவார்கள். இனிய தென்றல் மணத்துடன் வீச, மின்னல் போலும் இடை உடைய மென்மையான பெண்கள் புன்முறுவலுடன் உபசரிப்பார்கள். அவர்களின் மான் போன்ற பார்வையை அனுபவிக்கலாம்.

இன்னும் தாம் செய்த புண்ணியத்தின் பலனால், இவர்கள் பொன் மயமான கற்பகக் காட்டின் வளத்தைக் காணலாம். அங்கே எல்லாப் பக்கங்களிலும் நிலை பெற்ற பாரிஜாத மரங்களின் பூக்களில் உள்ள தேன் துளிகளைப் பருகியபடி, இனிய இசைபாடும் வண்டுகள் அமரும். இத்தகைய பூஞ்சோலையில் மலர்களைச் சூடிய மயில் போன்ற மங்கையர், கூந்தல் அழகும், மேகங்கள் போல் கறுத்த கண்ணழகும், மின்னல் போல் இடை அழகும், உடையவர், வருவர். அவர்கள் தங்கள் விருப்பத்துக்கு ஏற்ப, வேண்டிய இடங்களில் விளையாடி மகிழ்ந்து திரிவார்கள். **2724**

மின் இடையாரோடும் விளையாடி வேண்டு இடத்து
மன்னும் மணித் தலத்து, மாணிக்க மஞ்சரியின்
மின்னின் ஒளி சேர் பனிங்கு விளிம்பு அடுத்த,
மன்னும் பவளக் கால் செம் பொன் செய் மண்டபத்துள்
அன்ன நடைய அரம்பையர் தம் கை வளர்த்த
இன் இசை யாழ்ப் பாடல் கேட்டு, இன்புற்று-இரு விசும்பில்
மன்னும் மழை தவழும் வாள் நிலா நீள் மதி தோய்,
மின்னின் ஒளி சேர், விசும்பு ஊரும் மாளிகைமேல்
மன்னும் மணி விளக்கை மாட்டி-மழைக் கண்ணார்
பன்னு விசித்திரமாப் பாப்படுத்த பள்ளிமேல்
துன்னிய சாலேகம் சூழ் கதவம் தாள் திறப்ப
அன்னம் உழக்க நெரிந்து உக்க வாள் நீலச்
சின்ன நறுந் தாது சூடி-ஓர் மந்தாரம்
துன்னு நறு மலரால் தோள் கொட்டி கற்பகத்தின்
மன்னு மலர்வாய் மணி வண்டு பின் தொடர
இன் இளம் பூந் தென்றல் புகுந்து, ஈங்கு இள முலைமேல்
நல் நறும் சந்தனச் சேறு புலர்த்த-தாங்கு அரும் சீர்
மின் இடைமேல் கை வைத்து இருந்து, ஏந்து இள முலைமேல்
பொன் அரும்பு ஆரம் புலம்ப-அகம் குழைந்து ஆங்கு
இன்ன உருவின் இமையாத் தடங் கண்ணார்
அன்னவர் தம் மான் நோக்கம் உண்டு ஆங்கு அணி முறுவல்
இன் அமுதம் மாந்தி இருப்பர்-இது அன்றே
அன்ன அறத்தின் பயன் ஆவது ; ஒண் பொருளும்
அன்ன திறத்ததே; ஆதலால் -காமத்தின் 2731





அங்குள்ள மண்டபத் தரையில் ரத்தினங்கள் பதிக்கப்பட்டிருக்கும், மாணிக்கத் தோரணங்கள் காணப்படும். மின்னல் ஒளிவிடும் பளிங்குக் கற்களால் விளிம்புகள் உள்ளன. பவளத் தூண்களும் பொன் வேலைப்பாடுகளும் காணப்படும். அங்கே அன்ன நடை கொண்ட தேவ மாதர்கள் வீணையில் இன்னிசை வாசிப்பர். இத்தகைய இன்பத்தை அங்கும் பெறலாம்.

அகன்ற வானில் மேகக் கூட்டம் உலாவ, ஒளி வீசும் நிலவுடைய சந்திரன் விளங்குவான். வானில் திரியும் விமானங்களில் மாணிக்க விளக்குகள் தொங்கவிடப்பட்டு ஒளி வீசும். மேகம் போன்ற குளிர்ந்த கண்களுடைய பெண்கள் அகன்ற படுக்கைகளை விரிப்பார்கள். அங்கு நான்கு பக்கங்களிலும் சுற்றி உள்ள ஜன்னல்கள் தாமே திறந்து கொள்ளும்.

அன்னங்கள் மிதிப்பதால் பொடியாகி, ஒளிவிடும் நீலப் பூக்களின் மணம் மிகுந்த சிறிய தாதுக்களை மாதர் சூடிக் கொள்வார்கள். சிறந்த மந்தார மரத்தில் நெருங்கிப் பூத்த மலர்களால் ஆன மாலையைத் தோள்களிலே அவர்கள் அணிந்து கொள்வார்கள். கற்பக மரப் பூக்களில் படிந்த அழகிய வண்டுகள் பின்னால் தொடர்ந்து வர, இனிய மணமுடைய தென்றல் வீசும். இத்தென்றல் தெய்வப் பெண்களின் மார்பகங்களில் பட்டு அவர்கள் பூசியுள்ள சந்தனக் குழம்பை உலர்த்தும். அம் மாதர்களின் தாங்குவதற்கரிய நுட்பமான இடையின் மீது கை வைக்கும் பேறு, புண்ணியம் செய்தோர்க்கு உண்டு. இம் மாதர்களுடன் இவர்களுக்குக் கலவியும் கிட்டும். பெரிய கண்களுடைய அம் மாதர்களின் மான் பார்வையை அனுபவித்து அழகிய புன்முறுவலாகிய இனிய அமுதத்தையும் பருகுவர்.

இவ்வாறு தேவர் உலகில் எல்லா வகையான இன்பங்களைப் பெறுவதே அறத்தின் பயன் ஆகும். சிறந்த பொருளின் பயனும் இதுவே ஆகும். 2731

மன்னும் வழிமுறையே நிற்றும் நாம்; மான்நோக்கின்

அன்ன நடையார் அலர் ஏச, ஆடவர்மேல்

மன்னும் மடல் ஊரார் என்பது ஓர் வாசகமும்

தென் உரையில் கேட்டு அறிவது உண்டு -அதனை யாம் தெளியோம்;

மன்னும் வட நெறியே வேண்டினோம்; வேண்டாதார்

தென்னன் பொதியில் செழுஞ் சந்தனக் குழம்பின்

அன்னது ஓர் தன்மை அறியாதார்-ஆயன் வேய்

இன் இசை ஓசைக்கு இரங்காதார் மால் விடையின்

மன்னும் மணி புலம்ப வாடாதார்-பெண்ணைமேல்

பின்னும் அவ் அன்றில் பெடை வாய்ச் சிறு குரலுக்கு

உன்னி உடல் உருகி நையாதார்-உம்பர்வாய்த்

துன்னும் மதி உகுத்த தூ நிலா நீள் நெருப்பில்

தம் உடலம் வேவத் தளராதார்-காமவேள்

மன்னும் சிலைவாய் மலர் வாளி கோத்து எய்ய,

பொன் நெடு வீதி புகாதார்-தம் பூ அணைமேல்

சின்ன மலர்க் குழலும் அல்குலும் மென் முலையும்

இன் இளவாடை தடவ, தாம் கண் துயிலும்

பொன் அனையார் பின்னும் திரு உறுக-போர் வேந்தன்

தன்னுடைய தாதை பணியால் அரசு ஒழிந்து

பொன் நகரம் பின்னே புலம்ப வலம் கொண்டு

மன்னும் வளநாடு கைவிட்டு -மாதிரங்கள் 2739





*அறத்தின் பயன் அற்பமானதும், நிலை இல்லாததும், ஆதலால் நிலையான இறைக் காமமே நாம் வேண்டும் வழிமுறை ஆகும்.*

*மான்பார்வையும் அன்ன நடையும் உடைய பெண்கள் ஆண்கள் மேல் மடல் ஊரார்கள் என்பதும் அவர்கள் அவ்வாறு செய்தால் பழிக்கு ஆளாவர் என்பதும் தமிழ்நெறி ஆகும். பெண்கள் மடல் ஊராத தமிழ் மரபை நாம் ஏற்றுக் கொள்ளோம். ஆகவே வட நூலார் மரபையே இங்குப் பின்பற்றுகிறோம்.*

*வடமொழி நூலார் மரபின் படி, காம வரம்பை மீற விரும்பாதவர்கள் அதன் வலிமையை நன்கு உணராதவர்கள் ஆவர். பாண்டிய நாட்டுப் பொதிய மலைச் சந்தனக் குழம்பின் தன்மை அறியாதவர். இடையன் புல்லாங்குழலின் இனிய இசை ஒலியைக் கேட்டு மனம் தளராதவர் ஆவர். பசுவின் மேல் ஆசையுற்று வரும் காளையின் கழுத்தில் கட்டப்பட்ட மணிஓசை கேட்டு மனம் தளர்ந்து புலம்பாதவர். பனைமரத்தின் மீது, ஆண் அன்றிலுடன் தன் வாயலகைச் சேர்த்துக் கொண்டுள்ள பெண் அன்றிலின் குரலைக் கேட்டு உடல் உருகிக் குலையாதவர். வானில் சந்திரன் சொரிந்த தூய நிலவாகிற பெரிய நெருப்பில் தம் உடல் வெந்து போம்படி உருகிக் குலையாதவர். மன்மதன் தன் வில்லில் பூக்களாகிய அம்புகளைத் தொடுத்து எய்யவும், அதன் காரணமாக அழகிய நீண்ட வீதிகளில் கையும் மடலுமாய்ப் புறப்படாதவர்கள்.*

*இப்படிப்பட்ட பெண்கள் தங்கள் பூப்படுக்கையில் படுத்துக் கிடக்கையில் வாடைக் காற்று வந்து வீசி, பூ அணிந்த கூந்தலிலும், இடை மருங்கிலும் மெல்லிய முலைகளிலும் பட்டுத் தடவும் பொழுது, காம வேதனைப் பட்டுத் துன்புறாமல், மகிழ்ச்சியுடன் தூங்கினால் தூங்கட்டும். இவர்கள் பாக்கியம் உடையவர்களே. மேன்மேலும் இவர்கள் தங்கள் மேனி அழகை மேம்படச் செய்து கொள்ளட்டும். இவர்களைப் பற்றிய கவலை நமக்கு இல்லை.*

*போர் செய்வதில் சிறந்த இராமபிரான் தன் தந்தை சொல்லால் அரசிழந்து அயோத்தி நகரமே புலம்பி வேண்டியும், கேளாமல் கடுமையான நெஞ்சுடன் வள நாட்டைக் கைவிட்டுக் காடு சென்றான்.* **2739**

மின் உருவில் விண் தேர் திரிந்து வெளிப்பட்டு
கல் நிரைந்து, தீய்ந்து கழை உடைந்து கால் சுழன்று
பின்னும் திரை வயிற்றுப் பேயே திரிந்து உலவா,
கொல் நவிலும் வெம் கானத்தூடு -கொடும் கதிரோன்
துன்னு வெயில் வறுத்த வெம் பரல்மேல் பஞ்சு அடியால்
மன்னன் இராமன் பின் வைதேகி என்று உரைக்கும்
அன்ன நடைய அணங்கு நடந்திலளே?-
பின்னும் கரு நெடுங் கண் செவ்வாய்ப் பிணை நோக்கின்,
மின் அனைய நுண் மருங்குல் வேகவதி என்று உரைக்கும்
கன்னி தன் இன் உயிராம் காதலனைக் காணாது,
தன்னுடைய முன் தோன்றல் கொண்டு ஏக, தான் சென்று அங்கு
அன்னவனை நோக்காது அழித்து உரப்பி -வாள் அமருள்
கல் நவில் தோள் காளையைக் கைப்பிடித்து மீண்டும்போய்
பொன் நவிலும் ஆகம் புணர்ந்திலளே?- பூங் கங்கை
முன்னம் புனல் பரக்கும் நல் நாடன்; மின் ஆடும்
கொல் நவிலும் நீள் வேல் குருக்கள் குல மதலை;
தன் நிகர் ஒன்று இல்லாத வென்றித் தனஞ்சயனை
பன்னாகராயன் மடப் பாவை -பாவை தன்
மன்னிய நாண், அச்சம், மடம் என்று இவை அகல,
தன்னுடைய கொங்கை முகம் நெரிய -தான் அவன் தன்
பொன் வரை ஆகம் தழீஇக் கொண்டு போய்த் தனது
நல் நகரம் புக்கு நயந்து, இனிது வாழ்ந்ததுவும்,
முன் உரையில் கேட்டு அறிவது இல்லையே?-சூழ் கடலுள்
பொன் நகரம் செற்ற புரந்தரனோடு ஏர் ஒக்கும்
மன்னவன் வாணன், அவுணர்க்கு வாள் வேந்தன்
தன்னுடைய பாவை, உலகத்துத் தன் ஒக்கும்
கன்னியரை இல்லாத காட்சியாள் -தன்னுடைய 2747





இராமன் சென்ற காட்டில் எங்கும் மின்னல் போன்ற கானலே பரவி இருந்தது. கற்கள் நிறைந்து மூங்கில்கள் வெடித்துச் சுழல காற்று வீசியது. உலர்ந்த வயிறுடைய பேய்கள் ஓயாமல் அலையும். கொலையைப் பற்றிய ஒலியே எங்கும் கேட்கும் கொடுமையான காடு அது. சூரிய வெப்பத்தால் வறுக்கப்பட்ட பரற்கற்கள் மேலே, இக் காட்டில் இராமன் நடந்த பொழுது அவன் பின்னே வைதேகி என்னும் அன்னநடைப் பிராட்டி, தன் பஞ்சு போன்ற மெல்லிய அடிகளை இட்டுத் தொடர்ந்து நடக்க வில்லையா?

அதற்கு மேலேயும் கூறுகிறேன். கறுத்து நீண்ட கண்களையும், சிவந்த வாயையும், மான் பார்வையும், மின்னல் போல் இடையையும் பெற்ற வேகவதி என்னும் பெண் செய்தது தெரியுமா? தன்னுடைய இன்னுயிர்க் காதலனைக் காணாமல் தவிக்கையில், தன் தமையன் தடுத்துக் கொண்டு போன பொழுது, அவனை இழிவான சொற்களால் பழித்துப் பலாத்காரமாய் அவனிடமிருந்து புறப்பட்டுத் தன் காதலனை அடைந்தாள். போரில் வல்ல மலை போலும் தோள்களுடைய காளை போன்ற தன் காதலனின் கரங்களைப் பற்றி அவன் பொன் போன்ற மார்பைத் தழுவிக் கொண்டாளே!

அழகிய கங்கை நதி ஓடும் நாட்டுக்குத் தலைவனான அர்ஜுனன், மின்னல் ஒளி போலும் வேல் ஏந்திய பெரிய வீரன் ஆவான். குருகுல மன்னர்களில் சிறந்த ஒப்பில்லாத அவ் வெற்றி வீரனை நாக கன்னியான உலூபி தழுவினாளே! நாக வேந்தன் கௌரவ்யனின் மகளான அவள் பெண்மைக்குரிய நாணம், அச்சம், மடம் முதலிய குணங்கள் நீங்கப் பெற்றவளாய்த் தன்னுடைய முலை முகம் நெறியும்படியாக, பொன்மலை போன்ற அர்ஜுனன் மார்பைத் தழுவியவாறு தன்னுடைய நகரில் புகுந்து, அவனுடன் இடையறாது மகிழ்ந்து வாழ்ந்தாளே! இக் கதையை மகாபாரதத்தில் நீங்கள் கேட்டறிந்தது இல்லையோ?

பாணாசுரன் என்னும் வேந்தன், பரந்த கடலில் இரணியனின் நகரங்களை அழித்த தேவேந்திரனை ஒத்த பெருமை உடையவன். அசுரர்களின் ஒப்பற்ற மன்னன் ஆன இந்த பாணாசுரனின் மகள் உஷை என்பவள் உலகத்தில் தன்னை ஒத்த அழகுடையவள் இல்லை என்னும் சிறப்புடையவள் ஆவாள். 2747

இன் உயிர்த் தோழியால் எம் பெருமான் ஈன் துழாய்
மன்னு மணி வரைத் தோள் மாயவன்-பாவியேன்
என்னை இது விளைத்த ஈர் இரண்டு மால் வரைத் தோள்
மன்னவன் தன் காதலனை மாயத்தால் கொண்டுபோய்,
கன்னி தன்பால்வைக்க, மற்றவனோடு எத்தனை யோ
மன்னிய பேர் இன்பம் எய்தினாள்-மற்று இவை தான்
என்னாலே கேட்டீரே, ஏழைகாள்! என் உரைக்கேன்?
மன்னு மலை அரையன் பொன் பாவை -வாள் நிலா
மின்னும் அணிமுறுவல் செவ்வாய் உமை என்னும்
அன்ன நடைய அணங்கு நுடங்கு இடை சேர்
பொன் உடம்பு வாட, புலன் ஐந்தும் நொந்து அகல,
தன்னுடைய கூழைச் சடாபாரம் தான் தரித்து ஆங்கு
அன்ன அருந் தவத்தின் ஊடு போய் -ஆயிரம் தோள்
மன்னு கரதலங்கள் மட்டித்து மாதிரங்கள்
மின்னி எரி வீச, மேல் எடுத்த சூழ் கழல் கால்
பொன் உலகம் ஏழும் கடந்து உம்பர் மேல் சிலும்ப,
மன்னு குல வரையும் மாருதமும் தாரகையும்
தன்னின் உடனே சுழலச் சுழன்று ஆடும்
கொல்நவிலும் மூவிலை வேல் கூத்தன் பொடி ஆடி
அன்னவன் தன் பொன் அகலம் சென்று ஆங்கு அணைந்திலளே?
பன்னி உரைக்குங்கால் பாரதம் ஆம்-பாவியேற்கு;
என் உறு நோய் யான் உரைப்பக் கேள்மின்; இரும் பொழில் சூழ்
மன்னு மறையோர் திருநறையூர் மாமலை போல்,
பொன் இயலும் மாடக் கவாடம் கடந்து புக்கு
என்னுடைய கண் களிப்ப, நோக்கினேன்-நோக்குதலும்
மன்னன் திரு மார்பும் வாயும் அடி இணையும்
பன்னு கரதலமும் கண்களும்-பங்கயத்தின் 2754





இனிய திருத்துழாய் மாலை அணிந்தவனும், மணிமலைகள் போன்ற நான்கு தோள்களை உடையவனும், என்னை இப்படித் துன்புறுத்துபவனும் ஆன கண்ணபிரானின் அன்புப் பேரன் அநிருத்தனை இந்த உஷை தன் உயிர்த் தோழி, சித்திரலேகையின் மாயத்தால் பெற்றாள். அவனுடன் பல விதமான நிலை நின்ற இன்பத்தை அனுபவித்தாள்.

அறிவிலிகளே! இன்னும் இத்தகைய உதாரணங்களை என்னாலேயே கேட்க விரும்புகிறீர்களா? என் சொல்வேன்?

நிலை நின்ற மலையான இமவானின் மகள், ஒளி நிலாப் போல் புன்முறுவலுடன் சிவந்த வாயை உடைய 'உமை' என்னும் அன்ன நடைத் தெய்வப் பெண், தன் கூழை மயிர் முடியைச் சடை ஆக்கித் தவம் செய்தாள். துவண்ட இடையுடன் கூடிய தன் உடம்பு வாடவும் ஐம்புலன்களையும் வருத்தித் தவம் செய்து முடித்துச் சிவனைப் பெற்றாள். இப்பெருமான் தன் ஆயிரம் கைகள் திசைகளில் வியாபிக்க எங்கும் நெருப்புக் கிளம்ப மேற்புறமாகத் தூக்கிய தன் வீரக் கழல் பாதம் மேல் உலகங்களைத் தாண்டி நீள, குலமலைகளும் விண்மீன்களும் காற்றும் கூடவே சுழலும்படி தான் வட்டமாக நடனம் ஆடினான். கொல்லும் மூவிலை வடிவான சூலத்தை உடையவனும், கூத்தாடுபவனும், சாம்பல் பூசியவனும் ஆன இந்தச் சிவனை உமாதேவி தன் அழகிய மார்புடன் தழுவிக் கொள்ளவில்லையா?

பாவியான நான் இப்படிப்பட்டவற்றை விரிவாகச் சொன்னால் அதுவே ஒரு மகா பாரதமாய் முடியும். எனக்கு நேர்ந்த நோயை நானே கூறக் கேளுங்கள்.

பெரிய சோலைகள் சூழ்ந்ததும் வேதியர்கள் வாழ்ந்து வருவதுமான திருநறையூரில் பெரிய பொன் மலை போன்ற மாடக் கோவிலின் திருக்கதவை ஒருவாறு தாண்டிச் சென்று, என் கண்கள் களிக்கும்படி கண்டேன். அங்கே நின்ற மன்னனான நம்பியின் புன்முறுவல் வாயையும் திருமகள், தங்கும் மார்பையும், இரு திருவடிகளையும், கைகளையும், கண்களையும் பார்த்தேன். 2754

பொன் இயல் காடு ஓர் மணிவரைமேல் பூத்ததுபோல்,
மின்னி ஒளி படைப்ப, வீழ் நாணும் தோள் வளையும்
மன்னிய குண்டலமும் ஆரமும் நீள் முடியும்
துன்னு வெயில் விரித்த சூளாமணி இமைப்ப,
மன்னு மரதகக் குன்றின் மருங்கே-ஓர்
இன் இள வஞ்சிக்கொடி ஒன்று நின்றதுதான்;
அன்னம் ஆய், மான் ஆய், அணி மயில் ஆய், ஆங்கு இடையே
மின் ஆய், இள வேய் இரண்டு ஆய் இணைச் செப்பு ஆய்,
முன் ஆய தொண்டை ஆய் கெண்டைக் குலம் இரண்டு ஆய்,
அன்ன திரு உருவம் நின்றது அறியாதே.
என்னுடைய நெஞ்சும் அறிவும் இன வளையும்
பொன் இயலும் மேகலையும் ஆங்குஒழியப் போந்தேற்கு
மன்னு மறி கடலும் ஆர்க்கும்-மதி உகுத்த
இன் நிலாவின் கதிரும் என் தனக்கே வெய்து ஆகும்;
தன்னுடைய தன்மை தவிர, தான் என்கொலோ?
தென்னன் பொதியில் செழும் சந்தின் தாது அளைந்து
மன் இவ் உலகை மனம் களிப்ப வந்து இயங்கும்
இன் இளம் பூந் தென்றலும் வீசும் எரி எனக்கே;
முன்னிய பெண்ணைமேல் முள் முளரிக் கூட்டகத்து
பின்னும் அவ் அன்றில் பெடை வாய்ச் சிறு குரலும்
என்னுடைய நெஞ்சுக்கு ஓர் ஈர் வாளாம்; என் செய்கேன்?
கல் நவில் தோள் காமன் கருப்புச் சிலை வளைய
கொல் நவிலும் பூங் கணைகள் கோத்து பொத அணைந்து
தன்னுடைய தோள் கழிய வாங்கி-தமியேன் மேல்
என்னுடைய நெஞ்சே இலக்காக எய்கின்றான்;
பின் இதனைக் காப்பீர் தாம் இல்லையே-பேதையேன்
கல் நவிலும் காட்டகத்து ஓர் வல்லிக் கடி மலரின்
நல் நறு வாசம் மற்று ஆரானும் எய்தாமே.
மன்னும் வறு நிலத்து வாளாங்கு உகுத்தது போல்,
என்னுடைய பெண்மையும் என் நலனும், என் முலையும்
மன்னும் மலர் மங்கை மைந்தன் கணபுரத்து. 2759





ஒரு நீல மணி மலை மேல், பொன் மயமான தாமரைக் காடு மலர்ந்தது போல், திருமேனியில் திருமார்பு, வாய், திருவடி, கைகள், கண்கள் ஆகியவை விளங்கின. திருவரை நாண் மின்னல் போல் ஒளி வீசிற்று. மன்னிய திருக்குண்டலங்களும், மார்பில் ஆரமும், பெரிய திருமுடியும், வெயில் போல் ஒளி வீசும் முடியிற் பதித்த மணிகளும் விளங்கின. இந்த மரகத மலையான எம்பெருமான் பக்கம், இனிமையும் இளமையும் தவழும் வஞ்சிக் கொடி போன்ற பெரிய பிராட்டியார் நின்றாள். நடையில் அன்னத்தையும், பார்வையில் மானையும், மயில் தோகை போன்ற கூந்தலைப் பெற்ற அவள் ஒத்திருந்தாள். இடை அழகில் மின்னலையும், இளைய தோள்கள் மூங்கிலாயும், மார்பகங்கள் கலசங்களாகவும், உதடுகள் கொவ்வைப் பழமாகவும், கண்கள் கெண்டை மீன்களாகவும் காணப்பட்ட திருமகள் உருவம் பக்கத்தில் நின்றதை நான் கவனிக்க வில்லை. என் நெஞ்சும் அறிவும் எம்பெருமானிடம் செல்லவே, என் கைவளைகள் மேகலை ஆகியவை கழலும்டி அவற்றை இழந்தேன்.

அலைகடலின் ஒலி துன்பத்தைத் தந்தது. சந்திரனின் நிலவொளி எனக்கு மட்டும் வெப்பம் வீசிற்று. குளிர்ச்சியான நிலா, வெப்பம் வீசும்படி செய்தவன் யாரோ? பாண்டிய அரசனின் பொதிய மலையிலிருந்து வரும் தென்றல் காற்று சந்தனப் பூந் தாதுக்களை அளைந்தபடி உலகோர் மனம் மகிழும்படி வீசுவது, எனக்கு மட்டும் நெருப்பை அள்ளி வீசுவதாயிற்று. முன்னே உள்ள பனைமரத்தில் முள் தாமரைக் கூட்டில் அன்றில் பறவை தன் ஆண்பறவையின் அலகோடு பின்னிக் கூவுகிற ஓசை, என் நெஞ்சைப் பிளக்கும் வாள் ஆயிற்றே! நான் என் செய்வேன்?

திண்ணிய தோள்களுடைய மன்மதன், தன் கையிலுள்ள கரும்பு வில்லால் பூக்களைத் தொடுத்து என் நெஞ்சைத் தன் இலக்காகக் கொண்டு எய்தானே? பெண்களைத் துன்புறுத்தலே இவன் இயல்பன்றோ! இப்பொழுது என்னை இதிலிருந்து காப்பாற்றுவார் ஒருவரும் இல்லையோ?

கல்லென்னும் ஓசை கேட்கும் காட்டில், உள்ள பூங்கொடியின் மணம் வீசும் மலர், யாராலும் அனுபவிக்கப்படாமல் வீணாக நிலத்தில் உதிர்வது போல, என் பெண்மையும் முலைகளும் எம் பெருமானுக்குப் பயன்படாமல் போயிற்றே! அப் பெருமான் திருக் கண்ணபுரத்தில் பொன் மலை போல் நிற்கிறான். 2759

பொன்மலை போல், நின்றவன் தன் பொன் அகலம் தோயாவேல்
என் இவைதான்? வாளா எனக்கே பொறை ஆகி
முன் இருந்து மூக்கின்று: மூவாமைக் காப்பது ஓர்
மன்னு மருந்து அறிவீர் இல்லையே?-மால் விடையின்
துன்னு பிடர் எருத்துத் தூக்குண்டு வன் தொடரால்
கன்னியர் கண்மிளிரக் கட்டுண்டு -மாலைவாய்த்
தன்னுடைய நா ஒழியாது ஆடும் தனி மணியின்
இன் இசை ஓசையும் வந்து, என் செவி தனக்கே
கொல் நவிலும் எஃகில் கொடிது ஆய், நெடிது ஆகும்;
என் இதனைக் காக்குமா? சொல்லீர்-இது விளைத்த
மன்னன் நறும் துழாய் வாழ் மார்பன் மா மதிகோள்
முன்னம் விடுத்த முகில் வண்ணன்-காயாவின்
சின்ன நறும் பூந் திகழ் வண்ணன், வண்ணம் போல்
அன்ன கடலை மலை இட்டு அணை கட்டி
மன்னன் இராவணனை மா மண்டு வெம் சமத்துப்
பொன் முடிகள் பத்தும் புரள, சரம் துரந்து
தென் உலகம் ஏற்றுவித்த சேவகனை-ஆயிரக்கண்
மன்னவன் வானமும் வானவர் தம் பொன் உலகும்
தன்னுடைய தோள் வலியால் கைக்கொண்ட தானவனை,
பின் ஓர் அரி உருவம் ஆகி எரி விழித்து
கொல் நவிலும் வெம் சமத்துக் கொல்லாதே -வல்லாளன்
மன்னு மணிக் குஞ்சி பற்றி வர ஈர்த்து
தன்னுடைய தாள்மேல் கிடாத்தி -அவனுடைய 2766
பொன் அகலம் வள் உகிரால் போழ்ந்து புகழ் படைத்த
மின் இலங்கும் ஆழிப் படைத் தடக் கை வீரனை,
மன்னு இவ் அகல் இடத்தை மா முது நீர் தான் விழுங்க
பின்னும் ஓர் ஏனமாய்ப் புக்கு வளை மருப்பில்
கொல் நவிலும் கூர் நுதி மேல் வைத்து எடுத்த கூத்தனை.





திருக்கண்ணபுரத்தில் பொன் மலை போல் நிற்பவனின் அழகிய மார்பில் என் முலைகள் தோயவில்லை ஆகில் எனக்குப் பாரமாக இருந்து பயன் என்ன? இவை கண்ணெதிரேயே மூப்பு அடைகின்றன. அப்படி மூப்படையாமல் தடுக்க மருந்து கண்டறிவார் இல்லை.

காளையின் கழுத்தில் கட்டப்பட்ட சங்கிலியின் பிணைந்த மணி, அக்காளை தன் பசுவைச் சேர விரும்பி ஓடும் பொழுது உண்டாக்கும் ஓசை என் செவிக்கு வேலினும் கொடுமையாய்த் துன்புறுத்துகிறது. இதைப் போக்கிக் காக்கும் வகை கூறுவீர்.

இவ்வாறு என்னைக் காதல் பிரிவில் துன்புறுத்துபவன் யார் தெரியுமா? மணம் வீசும் திருத் துழாய் மாலை மார்பினன்; சந்திரன் துயரை நீக்கியவன்; காயாம் பூ நிறத்தான். இவனே இராமபிரான். தன்னுடைய நிறம் கொண்ட கடலின் மீது மலைகளை இட்டு அணைகட்டி இராவணனுடன் போர் செய்து அவன் தலைகள் பத்தும் மண்ணில் புரண்டு விழச் செய்து அவனை யமன் உலகுக்கு அனுப்பிய வீரனே இவன்.

இரணியன், ஆயிரம் கண்கள் பெற்ற இந்திரனின் உலகத்தையும் தேவர்கள் இடங்களையும் தன் தோள்வலிமையால் கைப்பற்றிய பொழுது, இந்த எம்பெருமான், நரசிம்மாவதாரம் எடுத்து, நெருப்புப் பறக்க விழித்தான். கொலை நடக்கும் போர்க்களத்தில் உடனேயே கொல்லாமல் அவ்வசுரனின் மணி மயமான முடி பொருந்திய தலை மயிரைப் பிடித்து இழுத்து அவனைத் தன் மடி மேல் கிடத்தினான். அவ்வசுரனின் அழகிய மார்பைத் தன் கூர்மையான நகங்களால் பிளந்து பிரகலாதனைக் காத்தான். இவ்வாறு புகழ் பெற்றான்.

மின்னல் போல் விளங்கும் சக்கரப் படையைத் தன் திண்மையான கரத்தில் ஏந்திய இத் திருமாலே, வராக அவதாரம் செய்தான். உயிர்க்கூட்டங்கள் உள்ள இந்த அகன்ற நீல உலகைப் பெரிய கடல் விழுங்கிய பிரளய காலத்தில், வராகமாகிய பெருமான் தன் வளைந்த கொம்பின் நுனியால் பூமியை மேலே எடுத்து வந்து காப்பாற்றினான். 2766

மன்னும் வட மலையை மத்தாக, மாசுணத்தால்
மின்னும் இரு சுடரும் விண்ணும் பிறங்கு ஒளியும்
தன்னினுடனே சுழல,மலை திரித்து ஆங்கு
இன் அமுதம் வானவரை ஊட்டி அவருடைய
மன்னும் துயர் கடிந்த வள்ளலை-மற்று அன்றியும்
தன் உருவம் ஆரும் அறியாமல், தான் அங்கு ஓர்
மன்னும் குறள் உருவில் மாணியாய் -மாவலி தன்
பொன் இயலும் வேள்விக்கண் புக்கு இருந்து போர் வேந்தர்
மன்னை மனம் கொள்ள வஞ்சித்து நெஞ்சு உருக்கி,
என்னுடைய பாதத்தால் யான் அளப்ப மூவடி மண்
மன்னா, தருக! என்று வாய் திறப்ப -மற்று அவனும்
என்னால் தரப்பட்டது என்றலுமே அத்துணைக்கண்
மின் ஆர் மணி முடி போய் விண் தடவ -மேல் எடுத்த
பொன் ஆர் கனை கழல் கால் ஏழ் உலகும் போய்க் கடந்து அங்கு
ஒன்னா அசுரர் துளங்கச் செல நீட்டி
மன் இவ் அகல் இடத்தை மாவலியை வஞ்சித்து
தன் உலகம் ஆக்குவித்த தாளானை-தாமரைமேல்
மின் இடையாள் நாயகனை,விண் நகருள் பொன் மலையை
பொன்னி மணி கொழிக்கும் பூங் குடந்தைப் போர் விடையை
தென்னன் குறுங்குடியுள் செம்பவளக் குன்றினை
மன்னிய தன் சேறை வள்ளலை-மா மலர்மேல்
அன்னம் துயிலும் அணி நீர் வயல் ஆலி
என்னுடைய இன் அமுதை எவ்வுள் பெரு மலையை
கன்னி மதிள் சூழ்கணமங்கைக் கற்பகத்தை
மின்னை இரு சுடரை வெள்ளறையுள் கல் அறைமேல்
பொன்னை மரதகத்தைப் புட்குழி எம் போர் ஏற்றை
மன்னும் அரங்கத்து எம் மா மணியை-வல்லவாழ்ப் 2773





இப்பெருமான் வட திசையில் உள்ள மந்தர மலையை மத்தாகக் கொண்டு வாசுகியை நாணாகச் சுற்றி சந்திர, சூரியர்கள் வானம் ஆகியவை ஒளியுடன் சுழலத் தானும் சுழன்று கடல் கடைந்து அமுதத்தைத் தேவர்களுக்குக் கொடுத்தான்.

இந்த வள்ளல் பெருமான், தன் வடிவத்தைத் திருமகளும் அறியாதவாறு குள்ள வடிவில் வாமனனாக மாவலி வேள்விச் சாலை சென்றான். பிரமசாரியாய்ச் சென்ற அவன் போரில் வல்ல மாவலியின் மனத்தை வஞ்சனையால் மயக்கினான். தன் நடை அழகால் அவனைக் கவர்நது நெஞ்சை உருக்கி "மன்னனே! என்னுடைய பாதத்தால் நானே அளந்து கொள்ளும்படி மூவடிமண் தா!" என்று வாய் திறந்து கேட்டான். மாவலியும் "என்னால் தரப்பட்டது" என்று சொல்ல அந்த நொடியிலேயே பொற்கழல் அணிந்த தன் திருவடியைத் தூக்கி மேல் உலகங்களைத் தாண்டி வியாபித்தான். அங்குள்ள பகை அரசர்கள் துன்புறும்படி திருவடியை நீட்டி, அகன்ற இந்தப் பூமியை மாவலியை வஞ்சித்துத் தன்னுடையது ஆக்கிக் கொண்டான். இத்தகைய ஆச்சரியமான திருவடிகளை உடையவன் இப்பெருமான்.

தாமரைப் பூவில் அமர்ந்த மின்னல் போலும் இடை உடைய திருமகள் நாயகன் திருவிண்ணகர் என்னும் திருத்தலத்தில் பொன் மலைபோல் எழுந்தருளினான். மணிகளைக் கொழித்துக் கொண்டு ஓடும் காவிரி பாயும் திருக் குடந்தையிலே, போர் செய்த காளை போலச் சாய்ந்து கண் வளர்கிறான். தெற்கே உள்ள திருக்குறுங்குடியிலே சிவந்த பவள மலை போல விளங்குகிறான். குளிர்ந்த திருச்சேறையில் எழுந்தருளிய வள்ளல் இவனே. தாமரைப் பூக்களில் அன்னங்கள் உறங்கும் நீர்வயல்கள் உள்ள திருவாலியில் அமுதமாக எனக்குக் காட்சி தருகிறான். மலை படுத்தது போலத் திருஎவ்வுள் ஊரில் பள்ளி கொண்டான். மதிள்கள் சூழ்ந்த திருக்கண்ண மங்கையில் கற்பக மரமாக எழுந்தருளினான். திருவெள்ளறைக் கற்கோவிலில் திருமகளுடன் சந்திர சூரியர் போலே விளங்குகிறான். மரகத வண்ணனாக இவன் திருப்புட் குழியிலே போர் வேந்தன் போல் உள்ளான். கையாளவல்ல நீலமணிபோலத் திருவரங்கத்திலே காட்சி கொடுக்கிறான். 2773

பின்னை மணாளனை பேரில் பிறப்பிலியை,
தொல் நீர்க் கடல் கிடந்த தோளா மணிச் சுடரை,
என் மனத்து மாலை இடவெந்தை ஈசனை
மன்னும் கடல்மல்லை மாயவனை-வானவர் தம்
சென்னி மணிச் சுடரை, தண்கால் திறல் வலியை
தன்னைப் பிறர் அறியாத் தத்துவத்தை முத்தினை,
அன்னத்தை மீனை அரியை அரு மறையை
முன் இவ் உலகு உண்ட மூர்த்தியை -கோவலூர்
மன்னும் இடைகழி எம் மாயவனை பேய்அலறப்
பின்னும் முலை உண்ட பிள்ளையை -அள்ளல்வாய்
அன்னம் இரை தேர் அழுந்தூர் எழும் சுடரை
தென் தில்லைச்சித்திரகூடத்து என் செல்வனை-
மின்னி மழை தவழும் வேங்கடத்து எம் வித்தகனை
மன்னனை மாலிருஞ்சோலை மணாளனை,
கொல் நவிலும் ஆழிப் படையானை -கோட்டியூர்
அன்ன உருவின் அரியை திருமெய்யத்து
இன் அமுத வெள்ளத்தை இந்தளூர் அந்தணனை.
மன்னு மதிள் கச்சி வேளுக்கை ஆள் அரியை
மன்னிய பாடகத்து எம் மைந்தனை -வெஃகாவில்
உன்னிய யோகத்து உறக்கத்தை ஊரகத்துள்
அன்னவனை, அட்ட புயகரத்து எம்மான் ஏற்றை
என்னை மனம் கவர்ந்த ஈசனை -வானவர் தம்
முன்னவனை மூழிக்களத்து விளக்கினை,
அன்னவனை ஆதனூர் ஆண்டு அளக்கும் ஐயனை
நென்னலை இன்றினை நாளையை -நீர்மலைமேல்
மன்னும் மறை நான்கும் ஆனானை புல்லாணித்
தென்னன் தமிழை வடமொழியை நாங்கூரில் 2782





நப்பின்னைப் பிராட்டியின் நாயகனாய்த் திருவல்லவாழிலே உள்ளான். பிறப்பில்லாத இப் பெருமான் திருப்பேர் நகரிலே எழுந்தருளினான். பிரளயத்தில் பள்ளி கொண்ட இவன் தொளை இல்லா மணி போன்றவன்; என் நெஞ்சை விட்டுப் பிரியாத காதலன்; திருவிடவெந்தையில் எழுந்தருளிய இறைவன் இவனே. திருக்கடல் மல்லையில் நித்திய வாசம் செய்யும் மாயவன்; நித்திய சூரிகளின் திருமுடிச் சுட்டியாக விளங்குபவன், திருத்தண்காவில் வலிமையாளனாகக் காட்சி தருகிறான். அவன் திருவருளுக்கு இலக்கு ஆகாதவர் அவனை அறிய முடியாது. முத்துப் போன்ற அவன், மீன், அன்னம், ஹயக்ரீவன் ஆகிய அவதாரங்கள் செய்த வேதப்பொருள் ஆவான். முன்னொரு கால், உலகங்களை வயிற்றில் வைத்துக் காத்த இந்த மூர்த்தியே, திருக்கோவலூரில் இடைகழியில் நித்திய வாசம் செய்தான். பூதனைப் பேயின் முலை உண்டவனே, அன்னம் வயலில் இரை தேடும் திருவழுந்தூரில் சோதியாய் விளங்குகிறான். தென்தில்லைச் சித்திரகூடத்தில் எழுந்தருளினான். மேகங்கள் மின்னும் திருவேங்கட மலையில் எழுந்தருளிய வித்தகன். இம் மன்னனே திருமாலிருஞ் சோலை மலையில் உள்ள என் மணாளன்.

கொல்லும் இயல்புடைய சக்கரம் ஏந்தியவன் திருக் கோட்டியூரில் உள்ளான். ஒளியுள்ள திருமேனி கொண்ட நரசிம்மன் திருமெய்யத்தில் எழுந்தருளிய அமுத வெள்ளம் ஆவான். திருவிந்தளூரில் அந்தணனாய், மதிள்கள் சூழ்ந்த காஞ்சியில் உள்ள திருவேளுக்கையில் நரசிம்மனாய், எழுந்தருளினான். திருப்பாடகத்தில் உள்ள இந்த இளையோன் திருவெஃகாவில் அடியார்களைக் காக்கும் நினைவுடன் பள்ளி கொண்டான். ஊரகத்தில் நின்றவன், அட்டபுயகரத்தில், என் தலைவனாய் உள்ளம் கவர்ந்தான். நித்திய சூரிகள் தலைவன் திருமுழிக்களத்திலே விளக்காக உள்ளான். இத்தகையோன் என்று கூற முடியாத பெருமான் திருஆதனூரில் காலங்களை அளக்கும் ஆண்டவனாய் எழுந்தருளினான். நேற்று, இன்று, நாளை ஆகிய முக்காலங்களுக்கும் தலைவனாய்த் திருநீர் மலையில் உள்ளான். நான்கு வேதங்களாய்த் திருப்புல்லாணியில் உறைகிறான். தமிழ், வடமொழிகளால் சிறப்பிக்கப்படுபவன் திருநாங்கூரில் மணிமாடக் கோவிலில் என் மணாளனாய் உள்ளான். **2782**

மன்னு மணிமாடக்கோயில் மணாளனை,
நல் நீர்த் தலைச்சங்க நாள் மதியை -நான் வணங்கும்
கண்ணனை, கண்ணபுரத்தானை, தென் நறையூர்
மன்னு மணிமாடக்கோயில் மணாளனை
கல் நவில் தோள் காளையைக் கண்டு ஆங்குக் கைதொழுது
என் நிலைமை எல்லாம் அறிவித்தால் எம் பெருமான்
தன் அருளும் ஆகமும் தாரானேல்-தன்னை நான்
மின் இடையார் சேரியிலும் வேதியர்கள் வாழ்விடத்தும்,
தன் அடியார் முன்பும் தரணி முழுது ஆளும்
கொல் நவிலும் வேல் வேந்தர் கூட்டத்தும் நாட்டகத்தும்
தன் நிலைமை எல்லாம் அறிவிப்பன் -தான் முன நாள்
மின் இடை ஆய்ச்சியர் தம் சேரிக் களவின்கண்
துன்னு படல் திறந்து புக்கு -தயிர் வெண்ணெய்
தன் வயிறு ஆர விழுங்க கொழுங் கயல் கண்
மன்னு மடவோர்கள் பற்றி ஓர் வான் கயிற்றால்
பின்னும் உரலோடு கட்டுண்ட பெற்றிமையும்
அன்னது ஓர் பூதமாய் ஆயர் விழவின்கண்
துன்னு சகடத்தால் புக்க பெருஞ் சோற்றை
முன் இருந்து முற்றத் தான் துற்றிய தெற்றெனவும்
மன்னர் பெருஞ் சவையுள் வாழ் வேந்தர் தூதனாய்த்
தன்னை இகழ்ந்து உரைப்ப, தான் முன நாள் சென்றதுவும்
மன்னு பறை கறங்க மங்கையர் தம் கண் களிப்ப
கொல் நவிலும் கூத்தனாய்ப் பேர்த்தும் குடம் ஆடி
என் இவன்? என்னப்படுகின்ற ஈடறவும்
தென் இலங்கையாட்டி அரக்கர் குலப் பாவை
மன்னன் இராவணன் தன் நல் தங்கை -வாள் எயிற்றுத் 2787





*நீர்வளம் உள்ள திருத்தலைச்சங்காட்டில் முழு மதி போல் விளங்குகிறான். என் விருப்ப தெய்வமாக நான் வணங்கும் கண்ணன் திருக்கண்ணபுரத்தில் எழுந்தருளினான். திருநறையூர் மணிமாடக் கோவிலில் பெயர் பெற்று விளங்கும் என் மணவாளன் இவன்.*

*இப்படிப்பட்ட திவ்விய தேசங்களில் எழுந்தருளி இருக்கும் மலை போன்ற தோள்களை உடைய காளையான எம் பெருமானை நான் திருநறையூரிலே கண்டு வணங்கி, என் நிலைகளை எல்லாம் விண்ணப்பம் செய்தேன். அப்பொழுதும் என் சுவாமி, தன் திருவருளையும் திருமார்பையும் தரவில்லை என்றால் இது பற்றி எங்கும் அறிவிப்பேன்.*

*ஒசிந்த இடை பெற்ற பெண்கள் வாழும் தெருக்களிலும் வேதியர்கள் வாழும் இடங்களிலும் அவனுடைய அடியார்கள் முன்பும், உலகத்தை ஆளும் வேல் வேந்தர்கள் கூட்டத்திலும் மற்றும் நாடு முழுவதும் அவன் எனக்கு செய்த துரோகத்தை வெளிப்படுத்துவேன். என் நிலைமையையும் கூறுவேன்.*

*முற்காலத்தில் மின்னல், இடை உடைய ஆய்ச்சிகள் சேரியில், வெண்ணெய் திருடுவதற்கு, இவன், குடிசைக் கதவுகளைத் திறந்து நுழைந்தானே! வயிறு நிரம்பும்படி தயிரையும் வெண்ணெயையும் உண்டானே! அங்கிருந்த கயல் விழிப் பெண்கள் இவனைச் சிறிய கயிற்றால் உரலுடன் கட்டினார்களே!*

*ஆயர்கள் விழாவில், அவர்கள் வண்டிகளில் கொண்டு வந்த பெருஞ் சோற்றைப் பூத வடிவில் முன் இருந்து தான் ஒருவனாகவே முற்றிலும் உண்ட வெட்கக் கேடு தான் என்னே! தன் வயிற்றை இப்படியா பெருக்குவான்!*

*துரியோதனாதியர் சபையில் பாண்டவர் துணையாக அவர் வாழ்ச்சிப் பெறத் தூதனாகச் சென்று இகழ்ச்சிப் பேச்சுக்களைக் கேட்டானே!*

*மேலும், அரையில் கட்டிய பறைகள் முழங்க பெண்ணும் ஆணும் கூட்டமாய் மகிழும்படி குடக் கூத்து ஆடினானே! "இப்படியும் ஒரு கூத்தாடி உண்டோ? போகாமல் ஆடுகிறானே!" என்று கூறும்படி சீர்மை கெட்டானே!*

*தென் இலங்கைச் செல்வத்துக்காகவே பிறந்தவள் இராவணனின் தங்கையான சூர்ப்பனகை என்பவள். அவள் அரக்கர்களின் குலப்பாவை.* **2787**

துன்னு சுடு சினத்துச் சூர்ப்பணகா சோர்வு எய்தி
பொன் நிறம் கொண்டு புலர்ந்து எழுந்த காமத்தால்
தன்னை நயந்தாளைத் தான் முனிந்து, மூக்கு அரிந்து
மன்னிய திண்ணெனவும் வாய்த்த மலை போலும்
தன் நிகர் ஒன்று இல்லாத தாடகையை -மா முனிக்காத்
தென் உலகம் ஏற்றுவித்த திண் திறலும் மற்று இவைதான்
உன்னி உலவா; உலகு அறிய ஊர்வன் நான்,
முன்னி முளைத்து எழுந்து ஓங்கி ஒளி பரந்த
மன்னிய பூம் பெண்ணை மடல். 2790

*பெரிய திருமடல் முற்றிற்று*

**இயற்பா முற்றிற்று**





*வாள்போன்ற ஒளியுடைய பற்களையும் சுடுகின்ற கோபத்தையும் உடைய சூர்ப்பனகை, கிளர்ந்த காம நோயால் மேனி துவண்டு நிறம் வெளுத்து இராமனிடம் வந்தாள். மிகுந்த பரவசத்துடன் அவனை அவள் நயந்து விரும்பவும், அவன் சீற்றத்துடன் அவள் மூக்கை அறுத்தான். தன்னை விரும்பியவளை வெறுத்ததுடன் மூக்கையும் அறுப்பதா வீரம்!*

*மேலும், இந்த இராமன் விசுவாமித்திர முனிவருக்காகத் தாடகையைக் கொன்றானே! குறைவற்ற வலிமையும், மலை போன்ற உருவமும் கொண்ட தன்னிகர் இல்லாத தாடகையை தெற்கு உலகமான யமன் இடத்துக்கு அனுப்பிய வீரம் என்னே!*

*இப்படிப்பட்ட அவன் செய்கைகள் பலவற்றையும் நினைத்தால் ஒரு முடிவே இல்லை. அவனுடைய செயல்களை பரகால நாயகியாகிய நான் உலகோர் அறியும்படி வெளிப்படுத்தி, முன் நின்று முளைத்து எழுந்து ஒளி வீசும் அழகிய பனை மடலைக் கொண்டு மடல் ஊர்வேன்.* **2790**

*பெரிய திருமடல் முற்றிற்று*

**இயற்பா முற்றிற்று**

ஸ்ரீ:

# இயற்பா

[illegible]
யாரையும் கொண்டாடினான்.
எப்படியோ! அவன் திருவடி
சம்பந்தம் அவனுக்கு கிடைத்த
அவனும் ஆசார்யனான்
[illegible]



திருவரங்கத்தமுதனார் அருளிய இராமாநுச நூற்றந்தாதி

## நாலாயிர திவ்யப் பிரபந்தம்

ஸ்ரீ:

# நாலாயிர திவ்வியப் பிரபந்தம்

திருவரங்கத்தமுதனார் அருளிய

இராமாநுச நூற்றந்தாதி – தனியன்

முன்னை வினை அகல மூங்கிற் குடி அமுதன்
பொன்னங் கழற் கமலப் போதிரண்டும் - என்னுடைய
சென்னிக்கு அணியாச் சேர்த்தினேன் தென் புலத்தார்க்கு
என்னுக் கடவுடையேன் யான்?

நயந்தரு பேரின்பம் எல்லாம் பழுதின்றி நண்ணினர்பால்
சயந்தரு கீர்த்தி இராமானுச முனிதாளிணை மேல்
உயர்ந்த குணத்துத் திருவரங்கத்து அமுது ஓங்கும் அன்பால்
இயம்பும் கலித் துறை அந்தாதி ஓத இசை நெஞ்சமே.

இனி என் குறை நமக்கு? எம்பெருமானார் திருநாமத்தால்
முனி தந்த நூற்றெட்டுச் சாவித்திரி என்னும் நுண்பொருளை
கனி தந்த செஞ்சொற் கலித் துறை அந்தாதி பாடித் தந்தான்
புனிதன் திருவரங்கத் தமுதாகிய புண்ணியனே.

**- வேதப்பிரான் பட்டர் அருளியவை**

சொல்லின் தொகை கொண்டு உனது அடிப் போதுக்குத் தொண்டு செய்யும்
நல்லன்பர் ஏத்தும் உன் நாமம் எல்லாம் என் தன் நாவினுள்ளே
அல்லும் பகலும் அமரும்படி நல்கு அறு சமயம்
வெல்லும் பரம; இராமானுஜ! இது என் விண்ணப்பமே.

**- அபியுக்தர் ஒருவர் அருளியது**



ஸ்ரீ:

நாலாயிர திவ்வியப் பிரபந்தம்

திருவரங்கத்தமுதனார் அருளிய

இராமாநுச நூற்றந்தாதி – தனியன் உரை

தொன்று தொட்டு வரும் என் தீவினைகள் அகல்வதற்கு மூங்கில்குடி என்னும் பெயர் பெற்ற குலத்தில் அவதரித்த திருவரங்கத் தமுதனாரின் பொன்னான கழல்கள் உடைய திருவடித் தாமரைகள் இரண்டினையும் என் தலையில் அணிகலனாகச் சேர்த்துக் கொண்டேன். இனி, தென் திசையிலுள்ள யம படர்களுக்கு நான் என்ன கடமை உடையேன்! இல்லை.

புலன்களால் வரும் சிற்றின்பம் பேரின்பம் போல் தோன்றினாலும், அது கொள்ளத் தக்கது அன்று என்று தள்ளும் அடியார்களுக்குப் புகழுடைய இராமாநுச முனிவரின் இரு திருவடிகளும் வெற்றியைத் தருவன. அப் பொன்னடிகளின் கீழ் உய்ந்த, உயர்ந்த குணமுடைய திருவரங்கத் தமுதனார் தம்முடைய ஆசார்ய பக்தியின் காரணமாய் இக்கலித் துறை அந்தாதியை அருளினார். நெஞ்சமே! இந்தப் பாசுரங்களைப் பயின்று உய்வு அடைய இசைவாய்.

பிரமன் அருளிய காயத்ரி மந்திரத்தின் நுண்பொருளான பிரணவத்தின் ஆழ்ந்த கருத்தை எம்பெருமானார் ஆன இராமாநுசர் திருநாமத்தைக் கொண்டு, புனிதன் ஆகிய திருவரங்கத்தமுதனார் கலித் துறை அந்தாதியில் பாடி அருளினார். புண்ணியரான இவர் அருளிய பிரபன்ன காயத்திரியாகிய இப்பிரபந்தத்தைப் பயிலுவதால் இனி நமக்கு என்ன குறை உண்டாகும்? குறைவில்லை என்றபடி.

**- வேதப்பிரான் பட்டர் அருளியவை**

ஆறு சமயங்களை வென்று மேலோராகிய இராமாநுசப் பெருமானே! சொல், தொடைகளால் ஆன இப் பிரபந்தத்தால் தேவரீர் திருவடித் தாமரைகளில் தொண்டு செய்யும் அடியார் களாகிய அன்பர்கள் துதி செய்யும் உன் திருநாமத்தை அடியேன் நாவினால் இரவும், பகலும், உச்சரிக்குமாறு அருள் செய்ய வேண்டும். இதுவே அடியேன் விடுக்கும் வேண்டுகோள் ஆகும்.

**- அபியுக்தர் ஒருவர் அருளியது**

ஸ்ரீ:

திருவரங்கத்தமுதனார் அருளிச்செய்த

# இராமாநுச நூற்றந்தாதி

பூ மன்னு மாது பொருந்திய மார்பன் புகழ் மலிந்த
பாமன்னு மாறன் அடி பணிந்து உய்ந்தவன், பல் கலையோர்
தாம் மன்ன வந்த இராமநுசன் சரணாரவிந்தம்
நாம் மன்னி வாழ நெஞ்சே! சொல்லுவோம் அவன் நாமங்களே. 2791

கள் ஆர் பொழில் தென் அரங்கன் கமலப் பதங்கள் நெஞ்சில்
கொள்ளா மனிசரை நீக்கி, குறையல் பிரான் அடிக்கீழ்
விள்ளாத அன்பன் இராமாநுசன் மிக்க சீலம் அல்லால்
உள்ளாது என்நெஞ்சு; ஒன்று அறியேன், எனக்கு உற்ற பேர் இயல்வே. 2792

பேர் இயல் நெஞ்சே! அடி பணிந்தேன், உன்னை பேய்ப் பிறவிப்
பூரியரோடு உள்ள சுற்றம் புலர்த்தி பொருவு அரும் சீர்
ஆரியன் செம்மை இராமாநுசமுனிக்கு அன்பு செய்யும்
சீரிய பேறு உடையார் அடிக்கீழ் என்னைச் சேர்த்ததற்கே. 2793

என்னைப் புவியில் ஒரு பொருள் ஆக்கி மருள் சுரந்த
முன்னைப் பழவினை வேர் அறுத்து ஊழி முதல்வனையே
பன்னப்பணித்த இராமாநுசன் பரன் பாதமும் என்
சென்னித் தரிக்க வைத்தான் எனக்கு ஏதும் சிதைவு இல்லையே. 2794

எனக்கு உற்ற செல்வம் இராமாநுசன் என்று இசையகில்லா
மனக் குற்ற மாந்தர் பழிக்கில், புகழ்; அவன் மன்னிய சீர்
தனக்கு உற்ற அன்பர் அவன் திருநாமங்கள் சாற்றும் என் பா
இனக் குற்றம் காணகில்லார் பத்தி ஏய்ந்த இயல் இது என்றே. 2795

இயலும் பொருளும் இசையத் தொடுத்து ஈன் கவிகள் அன்பால்
மயல் கொண்டு வாழ்த்தும் இராமாநுசனை மதி இன்மையால்
பயிலும் கவிகளில் பத்தி இல்லாத என் பாவி நெஞ்சால்
முயல்கின்றனன் அவன் தன் பெருங் கீர்த்தி மொழிந்திடவே. 2796



ஸ்ரீ:

திருவரங்கத்தமுதனார் அருளிச்செய்த

# இராமாநுச நூற்றந்தாதி

மனமே! தாமரைச் செல்வி வாழும் மார்புடைய திருமாலின் கல்யாண குணங்களை நம்மாழ்வார் தமிழ்ப் பாசுரங்களில் பாடினார். அவர் திருவடிகளைப் பணிந்து உய்வு பெற்ற இராமாநுசர் பற்பல கலைகளை ஓதுவோர் நிலை பெற, அவதரித்தார். நாம் அவர் திருவடித் தாமரைகளில் அமர்ந்து அவர் திருநாமங்களையே கூறுவோம். 2791

தேன் மிகுந்த சோலைகள் உள்ள தென் திருவரங்கத்தில் பள்ளி கொள்ளும் நம்பெருமாளின் தாமரைத் திருவடிகளைத் தம் நெஞ்சில் கொள்ளாதவரை விட்டு நீங்குவோம். திருமங்கை மன்னன் திருவடிகளில் நீங்காத பக்தி உடைய இராமாநுசரின் சீல குணத்தைத் தவிர என் நெஞ்சு வேறு ஒன்றை எண்ணாது. இவ்வாறு எனக்குக் கிடைத்த பேற்றிற்கு ஒரு காரணத்தையும் நான் அறியேன். 2792

பெருமை உடைய மனமே! உன்னை வணங்குகிறேன். பேய்ப் பிறப்பை உடைய தாழ்ந்தோர் உறவை நீக்கி, ஒப்பற்ற குணங்களையும் ஒழுக்கங்களையும் உடைய செம்மை சிறந்த இராமாநுசரிடத்தே பக்தி செய்யும் பேறு பெற்ற கூரத்தாழ்வான் போன்றவர் திருவடிக்கீழ் என்னைக் கொண்டு விட்டதற்கு வணங்குகிறேன். 2793

ஊழிக் காலங்களுக்குக் காரணமான எம்பெருமானை எல்லோரும் பரவும்படி உபதேசித்த ஞான வேந்தர் இராமாநுசர் இப்புவியில் அடியேனையும் ஒரு பொருளாகக் கொண்டார். அறிவின்மைக்குக் காரணமான என் பாவங்களின் வேரை அறுத்துத் தம் திருவடிகளை நான் என் தலையிலே உகந்து சூடும்படி செய்தார். இனி எனக்கு எவ்விதக் குறையும் இல்லை. 2794

இராமாநுசரே நாம் அடைய வேண்டிய செல்வம் ஆவார் என்று இசையாதவர்கள் தம் மனத்தே குற்றம் உடையவர்; அம் மனிதர்கள் இந்நூலைப்பழித்தால் அதுவே இதன் புகழ் ஆகும். எம்பெருமானின் குணங்களில் ஈடுபடும் அன்பர்கள். இந்நூல் பக்தி இயல்பு கொண்டது என்று கருதி, இராமாநுசரின் திருநாமங்களைக் கூறும் இப்பாசுரங்களில் குற்றம் காண மாட்டார். 2795

இனிய கவிஞர்கள், இராமாநுசரிடம் கொண்ட பேரன்பால், சொல்லும், பொருளும் பொருந்தும் சிறந்த கவிதைகளைத் தொடுப்பர். புத்தி இல்லாத அடியேனும் பக்தி இல்லாத பாவி நெஞ்சால் இப் பாடல்களில் அவருடைய அளவற்ற பெருமைகளைப் பேச முயல்கிறேன். என்னே இது! 2796

மொழியைக் கடக்கும் பெரும் புகழான், வஞ்ச முக்குறும்பு ஆம்
குழியைக் கடக்கும் நம் கூரத்தாழ்வான் சரண் கூடியபின்
பழியைக் கடத்தும் இராமாநுசன் புகழ் பாடி அல்லா
வழியைக் கடத்தல் எனக்கு இனி யாதும் வருத்தம் அன்றே. 2797

வருத்தும் புற இருள் மாற்ற, என் பொய்கைப் பிரான் மறையின்
குருத்தின் பொருளையும் செந்தமிழ் தன்னையும் கூட்டி ஒன்றத்
திரித்து அன்று எரித்த திருவிளக்கைத் தன் திருவுளத்தே
இருத்தும் பரமன், இராமாநுசன் எம் இறையவனே. 2798

இறைவனைக் காணும் இதயத்து இருள் கெட ஞானம் என்னும்
நிறை விளக்கு ஏற்றிய பூதத் திருவடி தாள்கள் நெஞ்சத்து
உறைய வைத்து ஆளும் இராமாநுசன் புகழ் ஓதும் நல்லோர்
மறையினைக் காத்து இந்த மண்ணகத்தே மன்ன வைப்பவரே. 2799

மன்னிய பேர் இருள் மாண்டபின், கோவலுள் மா மலராள்
தன்னொடும் ஆயனைக் கண்டமை காட்டும் தமிழ்த் தலைவன்
பொன் அடி போற்றும் இராமாநுசற்கு அன்பு பூண்டவர் தாள்
சென்னியில் சூடும் திருவுடையார் என்றும் சீரியரே. 2800

சீரிய நான்மறைச் செம்பொருள் செந்தமிழால் அளித்த
பார் இயலும் புகழ்ப் பாண்பெருமாள் சரண் ஆம் பதுமத்
தார் இயல் சென்னி இராமாநுசன் தன்னைச் சார்ந்தவர் தம்
கார் இயல் வண்மை என்னால் சொல்லொணாது இக் கடல் இடத்தே. 2801

இடம் கொண்ட கீர்த்தி மழிசைக்கு இறைவன் இணைஅடிப் போது
அடங்கும் இதயத்து இராமாநுசன் அம் பொற் பாதம் என்றும்
கடம் கொண்டு இறைஞ்சும் திரு முனிவர்க்கு அன்றி காதல் செய்யாத்
திடம் கொண்டு ஞானியர்க்கே அடியேன் அன்பு செய்வதுவே. 2802

செய்யும் பசுந் துளவத் தொழில் மாலையும் செந்தமிழில்
பெய்யும் மறைத் தமிழ் மாலையும் பேராத சீர் அரங்கத்து
ஐயன் கழற்கு அணியும் பரன் தாள் அன்றி ஆதரியா
மெய்யன் இராமாநுசன் சரணே கதி வேறு எனக்கே. 2803





சொற்களைக் கடந்த பெரும் புகழுடையவரும், கல்வி, செல்வம், குலம் ஆகிய மூன்று செருக்குகளாகிய குறும்பைக் கடந்தவரும், நம் சுவாமியும் ஆன கூரத் தாழ்வான் திருவடிகளை அடைந்த பின், வினைகளை நீக்கும் இராமாநுசரின் புகழைப் பாடி ஆத்மாவுக்கு எதிரான தீய வழிகளிலிருந்து விலகி விட்டேன். இனி அடியேனுக்கு எல்லாம் எளிதே. 2797

உலகியலைப் பற்றிய அறிவின்மையாகிற இருள், துன்பத்தையே உண்டாக்கும். நம் பொய்கை ஆழ்வார் அக்காலத்தில் இவ்விருளைப் போக்கி ஒளிவிடும் விளக்கை ஏற்றினார். வேதாந்தப் பொருளையும் செந்தமிழையும் கூட்டி ஒரு சேர இழைத்த இந்த முதல் திருவந்தாதியை, பரமன் ஆகிய இராமானுசர் தம் உள்ளத்திற் கொண்டார். அவரே நமக்கு இறைவன். 2798

இதயத்து அறிவின்மை ஆகிற இருள் நீங்கி இறைவனைக் காண, பூதத் தாழ்வார் ஞானம் என்னும் நிறைந்த விளக்கை ஏற்றினார். அவர் திருவடிகளைத் தம் நெஞ்சில் நிறுத்தி வைத்து அனுபவிக்கும் இராமாநுசரின் புகழை இடைவிடாமல் ஓதுவோர் இவ்வுலகில் மிக நல்லவர் ஆவர். இவர்கள் வேதங்களைக் காத்து நிலைநிறுத்துவர். 2799

நிலைத்து நின்ற அறிவின்மை ஆகிற இருள், பொய்கையார், பூதத்தார் ஏற்றிய திருவிளக்கால் அகன்றபின் தமிழ்த்தலைவரான பேயாழ்வார் திருக்கோவலூரில் ஆயனாரைத் திருமகளுடன் கண்டு சேவித்தார். இவர் திருவடிகளைப் போற்றும் இராமாநுசரிடத்தே பக்தி உடையவர் திருவடிகளைத் தலையில் சூடும் திரு உடையாரே என்றும் சீரியர்கள். 2800

திருப்பாணாழ்வார், நான்கு வேதப் பொருளைச் செந்தமிழில் அருளிப் பூவுலகில் புகழ் பெற்றார். எம்பெருமானார், இவ்வாழ்வாரின் திருவடித் தாமரைகளைத் தம் தலையில் சூடினார். இந்த இராமானுசரைச் சார்ந்து அடிமைப்பட்டோரின் ஒழுக்கத்தின் மேன்மையை, கடல் சூழ்ந்த இவ்வுலகில், அடியேனால் விவரித்துத் தலைக் கட்ட முடியாது. 2801

எங்கும் பரந்த புகழுடைய திருமழிசைப் பிரானின் இணைத் திருவடிகளை இராமாநுசர் தம் நெஞ்சில் குடி இருக்கச் செய்தார். இத்தகைய எம்பெருமானார் திருவடிகளை என்றும் தமக்குப் புகலிடம் எனக் கொள்ளும் முனிவர்களுக்கே அன்றி, மற்றவர்க்கு அன்பு பூண்டிராத திடமான ஞானிகளிடத்தே அடியேன் பக்தி கொண்டுள்ளேன். 2802

கதிக்குப் பதறி வெம் கானமும் கல்லும் கடலும் எல்லாம்
கொதிக்கத் தவம் செய்யும் கொள்கை அற்றேன் கொல்லி காவலன் சொல்
பதிக்கும் கலைக் கவி பாடும் பெரியவர் பாதங்களே
துதிக்கும் பரமன் இராமாநுசன் என்னைச் சோர்விலனே. 2804

சோராத காதல் பெருஞ் சுழிப்பால் தொல்லை மாலை ஒன்றும்
பாராது அவனைப் பல்லாண்டு என்று காப்பிடும் பான்மையன் தாள்
பேராத உள்ளத்து இராமாநுசன் தன் பிறங்கிய சீர்
சாரா மனிசரைச் சேரேன் எனக்கு என்ன தாழ்வு இனியே? 2805

தாழ்வு ஒன்று இல்லா மறை தாழ்ந்து தலமுழுதும் கலியே
ஆள்கின்ற நாள் வந்து அளித்தவன் காண்மின்அரங்கர் மௌலி
சூழ்கின்ற மாலையைச் சூடிக் கொடுத்தவள் தொல் அருளால்
வாழ்கின்ற வள்ளல் இராமாநுசன் என்னும் மா முனியே. 2806

முனியார் துயரங்கள் முந்திலும்; இன்பங்கள் மொய்த்திடினும்
கனியார் மனம் கண்ணமங்கை நின்றானை கலை பரவும்
தனி ஆனையைத் தண் தமிழ் செய்த நீலன் தனக்கு உலகில்
இனியானை எங்கள் இராமாநுசனை வந்து எய்தினரே. 2807

எய்தற்கு அரிய மறைகளை ஆயிரம் இன் தமிழால்
செய்தற்கு உலகில் வரும் சடகோபனைச் சிந்தையுள்ளே
பெய்தற்கு இசையும் பெரியவர் சீரை உயிர்கள் எல்லாம்
உய்தற்கு உதவும் இராமாநுசன் எம் உறு துணையே. 2808

உறுபெருஞ் செல்வமும் தந்தையும் தாயும் உயர் குருவும்
வெறி தரு பூ மகள் நாதனும் மாறன் விளங்கிய சீர்
நெறி தரும் செந்தமிழ் ஆரணமே என்று இந் நீள் நிலத்தோர்
அறிதர நின்ற இராமாநுசன் எனக்கு ஆர் அமுதே. 2809

ஆரப் பொழில் தென் குருகைப்பிரான் அமுதத் திருவாய்
ஈரத் தமிழின் இசை உணர்ந்தோர்கட்கு இனியவர் தம்
சீரைப் பயின்று உய்யும் சீலம் கொள் நாதமுனியை நெஞ்சால்
வாரிப் பருகும் இராமாநுசன் என் தன் மா நிதியே. 2810





கொல்லிகாவலன் என்னும் குலசேகரரால், சாத்திரச் சொற்களுடன் அருளப் பட்ட பெருமாள் திருமொழியைப் பயிலும் பெரியோர் பாதங்களையே, பரமன் ஆன இராமானுநுசர் துதித்து வணங்குவார். இவர் என்னை விட்டு நீங்காததால், நான் கதி பெற, கொடிய காட்டிலும் மலைகளிலும் சென்றும், கடலில் நின்றும் அங்கங்கள் கொதிக்கும் படியாய்த் தவம் செய்யும் கொள்கையை அறவே விட்டொழிந்தேன். **2804**

பெரியாழ்வார், குறையாது பொங்கும் பரிவாகிய சுழிப்பால், நித்யனாய் சக்தி உடைய எம் பெருமான் படியைப் பாராது பல்லாண்டு பாடிக் காப்புச் செய்தார். இவருடைய திருவடிகள் அகலாத நெஞ்சுடைய இராமாநுசரின் திருக் குணங்களைச் சாராத மனிதர்களுடன் அடியேன் சேரேன். இவ்வுறுதிக்குப் பின் எனக்கு என்ன குறை உண்டு? **2805**

திருவரங்கன் திருமுடியில் அணியும் பூமாலையை ஆண்டாள் தன் திருக்குழலில் சூடிக் கொடுத்தாள். இராமாநுசமாமுனி, இந்த நாச்சியாரின் அருளால் வாழ்பவர். குறைவற்ற வேதம் தாழ்ச்சி அடைந்து, பூமி எங்கும் கலிபுருஷன் ஆட்சி செய்யும் காலத்தில் அவ் வேதத்தை வாழ்விக்க எம்பெருமானார் அவதரித்தார். **2806**

சாத்திரங்கள் யாவும் துதிக்கும் மதயானை போன்ற திருக்கண்ண மங்கைப் பெருமானை தமிழ்ப் பிரபந்தத்தில் துதித்த திருமங்கை ஆழ்வாரிடம், எங்கள் இராமாநுசர் இனிய பேரன்புடையவர். இத்தகைய எம் பெருமானாரை வணங்கும் அடியார்கள், துயரங்கள் ஏற்பட்டாலும் வருந்தார்கள்; இன்பங்கள் உண்டானாலும் மனம் களியார்கள். **2807**

முற்றும் உணரமுடியாத அளவற்ற வேதங்களை ஆயிரம் இனிய தமிழ்ப் பாசுரங்களில் அருளிச் செய்யவே, இவ்வுலகில், நம்மாழ்வார் அவதரித்தார். அவரைத் தம் நெஞ்சில் வைத்துத் தியானம் செய்த மதுரகவிகளின் சீர்மைகளை இராமாநுசர் உலகத்து உயிர்க் கூட்டங்கள் உய்வு பெற விவரித்தார். அன்னாரே எமக்கு உற்ற துணை. **2808**

எம்பெருமானின் திருக்குணங்களை அடைவே அனுபவித்த நம்மாழவாரின் திருவாய்மொழி செந்தமிழ் வேதம் ஆகும். அப்பிரபந்தமே இராமானுசருக்கு பெருஞ்செல்வமாகவும், தந்தை தாயாகவும், உயர்ந்த குருவாகவும், மணம் மிகுந்த பூவில் வாழும் திருமகளுக்கு நாதனான திருமாலாகவும் உள்ளது. இந்த எம்பெருமானாரே அடியேனுக்கு அருமையான அமுதம் ஆவார். **2809**

சந்தனச் சோலைகள் உள்ள திருக்குருகூரில் தோன்றிய நம்மாழ் வாரின் அமுதமயமான வாயில். ஈரச்சொற்களால் ஆன திருவாய் மொழி என்னும் தமிழ் இசை தோன்றியது. இப்பிரபந்தத்தை அறிந்தோரின் இனிய குணங்களைப் பயின்று உய்ந்த நாதமுனிகள் என்றும், சீலம் மிகுந்த ஆசார்யரின் திருஉள்ளத்தைத் தாம் நெஞ்சால் அனுபவிக்கும் இராமாநுசரே அடியேனுக்குக் குறைவற்ற செல்வம் ஆவார். **2810**

நிதியைப் பொழியும் முகில் என்று நீசர் தம் வாசல் பற்றித்
துதி கற்று உலகில் துவள்கின்றிலேன் இனி தூய் நெறி சேர்
எதிகட்கு இறைவன் யமுனைத்துறைவன் இணை அடியாம்
கதி பெற்றுடைய இராமாநுசன் என்னைக் காத்தனனே. 2811

கார்த்திகையானும், கரிமுகத்தானும் கனலும் முக்கண்
மூர்த்தியும் மோடியும் வெப்பும் முதுகிட்டு மூவுலகும்
பூத்தவனே! என்று போற்றிட வாணன் பிழை பொறுத்த
தீர்த்தனை ஏத்தும் இராமாநுசன் என் தன் சேம வைப்பே. 2812

வைப்பு ஆய வான் பொருள் என்று நல் அன்பர் மனத்தகத்தே
எப்போதும் வைக்கும் இராமாநுசனை இரு நிலத்தில்
ஒப்பார் இலாத உறு வினையேன் வஞ்ச நெஞ்சில் வைத்து
முப்போதும் வாழ்த்துவன் என் ஆம் இது அவன் மொய் புகழ்க்கே? 2813

மொய்த்த வெம் தீவினையால், பல் உடல்தொறும் மூத்து அதனால்
எய்த்த ஒழிந்தேன் முனை நாள்கள் எல்லாம்; இன்று கண்டு உயர்ந்தேன்
பொய்த் தவம் போற்றும் புலைச் சமயங்கள் நிலத்து அவியக்
கைத்த மெய்ஞ்ஞானத்து இராமாநுசன் என்னும் கார் தன்னையே. 2814

கார் ஏய் கருணை இராமாநுச! இக் கடலிடத்தில்
ஆரே அறிபவர் நின் அருளின் தன்மை? அல்லலுக்கு
நேரே உறைவிடம் நான்; வந்து நீ என்னை உய்த்தபின், உன்
சீரே உயிர்க்கு உயிராய் அடியேற்கு இன்று தித்திக்குமே. 2815

திக்கு உற்ற கீர்த்தி இராமாநுசனை என் செய் வினை ஆம்
மெய்க்குற்றம் நீக்கி விளங்கிய மேகத்தை மேவும் நல்லோர்
எக் குற்றவாளர் எது பிறப்பு எது இயல்வு ஆக நின்றோர்,
அக் குற்றம் அப் பிறப்பு அவ் இயல்வே நம்மை ஆட்கொள்ளுமே. 2816

கொள்ளக் குறைவு அற்று இலங்கி கொழுந்து விட்டு ஓங்கிய உன்
வள்ளல் தனத்தினால் வல்வினையேன் மனம் நீ புகுந்தாய்;
வெள்ளைச் சுடர் விடும் உன் பெரு மேன்மைக்கு இழுக்கு இது என்று
தள்ளுற்று இரங்கும் இராமாநுசா! என் தனி நெஞ்சமே. 2817





தூய்மையான பக்தி ஒழுக்கத்தில் நின்ற துறவிகள் தலைவரான ஆளவந்தாரின் இணைத் திருவடிகளை அடைந்த சுவாமியான இராமாநுசர் என்னைக் காத்தருளினார். இனிமேல், நான் தாழ்ந்தவர் வாசலைப் பற்றி நின்று ‘நிதியைப் பொழிகின்ற மேகமே’ என்று வீணான துதி செய்து வருந்த மாட்டேன். 2811

முருகனும் யானைமுகனும், அக்னியும், சிவனும், காளியும், வெப்பத் தேவதையும் முதுகு காட்டி ஓடிய பிறகு, பாணாசுரன் கண்ணனிடம் ‘மூவுலகையும் நாபியில் உண்டாக்கியவனே! என் பிழை பொறுத்திடுக’ என வேண்டியதும் அவன் பிழையைப் பொறுத்தான். இத்தூயவனான திருமாலைத் துதிக்கும் இராமாநுசரே எனக்குக் காப்புச் செல்வம் ஆவார். 2812

நல்ல பக்தி உடைய அடியார்கள் இராமாநுசரைத் தங்கள் வைப்பு நிதியாக மனத்தில் கொள்வர். இப்பெரிய உலகில் ஒப்பில்லாத பாவியான அடியேன் எம்பெருமானாரை நெஞ்சிற் கொண்டு மூன்று பொழுதுகளிலும் வாழ்த்துவேன். என்செயல் அவர் சிறந்த புகழுக்குக் கேடாக இருக்குமோ? 2813

கடந்த காலங்களில் அடியேன் பற்பல உடல்கள் எடுத்து, ஆத்மாவை மொய்க்கும் தீவினைகளில் மூத்து, மிக்கத் தளர்ச்சி அடைந்தேன். இன்றோ இராமாநுசரைக் கண்டு கொண்டேன். இவ்வுலகிலுள்ள கபடமான தவங்களைப் போற்றும் தாழ்ந்த சமயத்தாரைத் தாழச் செய்த மெய்ஞானியான இராமாநுச மேகத்தால் உய்வு பெற்றேன். 2814

மேகம் போன்ற கருணை உடைய இராமாநுசரே! நானோ துன்பங்களுக்கே இருப்பிடமாக உள்ளவன். என்னை நீரே ஏற்று அருளிய பின் உமது சீர்மையே அடியேன் ஆத்மாவுக்கு உற்ற துணை ஆகும். உம் குணங்கள் இனிமையாய் உள்ளன. உம்அருளின் தன்மையை கடல்சூழ்ந்த இவ்வுலகில் அறியவல்லவர் யார்? 2815

இராமாநுசர், அடியேன் செய்த நிலையான குற்றங்களாகிய வினைகளை நீக்கி, அருள் செய்தார். திக்குகள் எல்லாம் புகழுடைய மேகம் போன்ற அவரை அண்டிய நல்லடியார்கள், எக்குற்றம் செய்தாலும், என்ன பிறப்புடையவர் ஆயினும், எவ்வியல்பு கொண்டவர் ஆயினும், முன்பு செய்த அவர்கள் குற்றமும் பிறவித் தாழ்ச்சியும் இயல்புகளும் நல்லதாகி, நம்மை அடிமைப்படுத்த வல்லன. 2816

இராமாநுசரே! கொள்ளக் கொள்ள குறையாது கொழுந்து விட்டு ஓங்கும் உமது ஈகைத் தன்மையால் அடியேனுடைய கொடிய மனத்தில் புகுந்தீர். உம்முடைய தூய்மைக்கு இது குற்றமாயிற்றே என்று என் தனிநெஞ்சம் தளர்ந்து வருந்துகிறது. 2817

நெஞ்சில் கறை கொண்ட கஞ்சனைக் காய்ந்த நிமலன் நங்கள்
பஞ்சித் திருவடிப் பின்னை தன் காதலன் பாதம் நண்ணா
வஞ்சர்க்கு அரிய இராமாநுசன் புகழ்அன்றி என் வாய்
கொஞ்சிப் பரவகில்லாது; என்ன வாழ்வு இன்று கூடியதே! 2818

கூட்டும் விதி என்று கூடுங்கொலோ? தென் குருகைப் பிரான்
பாட்டு என்னும் வேதப் பசுந்தமிழ் தன்னைத் தன் பத்தி என்னும்
வீட்டின் கண் வைத்த இராமாநுசன் புகழ் மெய் உணர்ந்தோர்
ஈட்டங்கள் தன்னை என் நாட்டங்கள் கண்டு இன்பம் எய்திடவே. 2819

இன்பம் தரு பெரு வீடு வந்து எய்தில் என்? எண் இறந்த
துன்பம் தரு நிரயம் பல சூழில் என்? தொல் உலகில்
மன் பல் உயிர்கட்கு இறையவன் மாயன் என மொழிந்த
அன்பன், அனகன் இராமாநுசன் என்னை ஆண்டனனே! 2820

ஆண்டுகள் நாள் திங்கள், ஆய், நிகழ் காலம் எல்லாம் மனமே!
ஈண்டு பல் யோனிகள்தோறு உழல்வோம் இன்று ஓர் எண் இன்றியே
காண் தகு தோள் அண்ணல் தென் அத்தி ஊரர் கழல் இணைக்கீழ்ப்
பூண்ட அன்பாளன் இராமாநுசனைப் பொருந்தினமே. 2821

பொருந்திய தேசும் பொறையும் திறலும் புகழும், நல்ல
திருந்திய ஞானமும் செல்வமும் சேரும் செறு கலியால்
வருந்திய ஞாலத்தை! வண்மையினால் வந்து எடுத்து அளித்த
அருந் தவன் எங்கள் இராமாநுசனை அடைபவர்க்கே 2822

அடை ஆர் கமலத்து அலர்மகள் கேள்வன் கை ஆழி என்னும்
படையோடு நாந்தகமும் படர் தண்டும் ஒண் சார்ங்க வில்லும்
புடை ஆர் புரி சங்கமும் இந்தப் பூதலம் காப்பதற்கு என்று
இடையே இராமாநுசமுனி ஆயின இந் நிலத்தே! 2823

நிலத்தைச் செறுத்து உண்ணும் நீசக் கலியை நினைப்பு அரிய
பலத்தைச் செறுத்தும் பிறங்கியது இல்லை; என் பெய் வினை தென்
புலத்தில் பொறித்த அப் புத்தகச் சும்மை பொறுக்கிய பின்,
நலத்தைப் பொறுத்தது இராமாநுசன் தன் நயப் புகழே. 2824





நெஞ்சில் கள்ளமுடைய கம்சனைக் கொன்றவனும், குற்றமற்றவனும், பஞ்சினும் மெல்லிய திருவடிகளுடைய நப்பின்னையின் கணவனும் ஆன கண்ணனின் பாதங்களை அடையாத வஞ்சகர்கள், இராமாநுசரை அடைவதற்கு அரியவர் ஆவார். இத்தகைய சிறப்புடையவர் குணங்களை அன்றி என் வாய் வேறு ஏத்தாது. இன்று என்ன வாழ்வு உடையது! **2818**

நம்மாழ்வாரின் செந்தமிழ் வேதமான திருவாய்மொழிப் பாசுரங்களைத் தம் பக்தி ஆகிற வீட்டில் நிலைப்படுத்திய எம்பெருமானின் புகழை, உள்ளபடி அறிந்தோர் கூட்டத்தையே என் கண்கள் கண்டு, இன்பம் கொள்கின்றன. இதற்கு என்று அவருடைய அருள் கூடுமோ? **2819**

"தொன்மையான இவ்வுலகத்து உயிர்களுக்கெல்லாம் இறைவன் திருமாலே" என்று தம் நூல்களில் கூறிய அன்பராகிய குற்ற மற்ற இராமாநுசர் அடியேனை அடிமை கொண்டார். ஆகவே, இன்பம் தரும் மோட்சம் வந்தால் என்ன? அல்லது அளவற்ற துயரங்களைத் தரும் நரகம் சூழ்ந்து கொண்டால் என்ன? **2820**

மனமே! நாள்கள், மாதங்கள், ஆண்டுகள் என நிகழ்காலம் எல்லாம் இங்கு பல வகைப்பட்ட யோனிகள் தோறும் பிறந்து தடுமாறித் திரிந்த நாம், இன்று, ஒரு நினைவும் இல்லாமலே, கண்களால் சேவிக்கத் தகுந்த திருவத்தியூர் தேவராஜன் திருவடிகளில் பக்தி உடைய இராமாநுசருடன் சேரப் பெற்றோம். என்னே பேறு. **2821**

சீறும் கலி புருஷனால் துன்புறும் உலகத்தைத் தமது அருளால் காத்தவரும், அரிய தவமுடைய எங்கள் சுவாமியும் ஆன இராமாநுசரை அடைபவர்க்கு, ஆத்மாவுக்கு உள்ள ஒளியும், பொறுமையும், புலன்களை வெல்லும் வலிமையும், புகழும், திருத்தமான ஞானமும், பக்திச் செல்வமும் தானே வந்து சேரும். **2822**

இதழ்களுடன் கூடிய தாமரைச் செல்வியான திருமகள் கேள்வனின் கையில் உள்ள சக்கரம் ஆகிய ஆயுதமும், நாந்தக வாளும், கதையும், அழகிய சார்ங்க வில்லும், சங்கும் இந்தப் பூவுலகைக் காக்க, இராமாநுசர் பக்கலில் வந்து சேர்ந்தன. **2823**

இராமாநுசரின் கல்யாண குணங்கள், பூவுலகைத் துன்புறுத்தித் தின்னும் தாழ்ந்த கலியின், நினைக்க முடியாத பலத்தை அழித்த அளவில் கூட ஒளி பெறவில்லை. ஆனால், அடியேனால் செய்யப்பட்ட பாவங்களை அவர் அருளால், யமனுலகில் எழுதி வைத்த அப்புத்தகக் கட்டுகளைக் கொளுத்திய பின்னரே ஒளி பெற்று விட்டன. **2824**

நயவேன் ஒரு தெய்வம்; நானிலத்தே சில மானிடத்தைப்
புயலே எனக் கவி போற்றி செய்யேன்; பொன் அரங்கம் என்னில்
மயலே பெருகும் இராமானுசன் மன்னு மா மலர்த்தாள்
அயரேன்; அருவினை என்னை எவ்வாறு இன்று அடர்ப்பதுவே? 2825

அடல்கொண்ட நேமியன், ஆர் உயிர் நாதன், அன்று ஆரணச் சொல்
கடல் கொண்ட ஒண் பொருள் கண்டு அளிப்ப, பின்னும் காசினியோர்
இடரின்கண் வீழ்ந்திடத் தானும் அவ் ஒண் பொருள் கொண்டு அவர்பின்
படரும் குணன்; எம் இராமானுசன் தன் படி இதுவே. 2826

படி கொண்ட கீர்த்தி இராமாயணம் என்னும் பத்தி வெள்ளம்
குடி கொண்ட கோயில் இராமானுசன் குணம் கூறும் அன்பர்
கடி கொண்ட மா மலர்த் தாள் கலந்து உள்ளம் கனியும் நல்லோர்
அடி கண்டு கொண்டு உகந்து என்னையும் ஆள் அவர்க்கு ஆக்கினரே. 2827

ஆக்கி அடிமை நிலைப்பித்தனை என்னை இன்று; அவமே
போக்கிப் புறத்திட்டது என் பொருளா முன்பு? புண்ணியர் தம்
வாக்கில் பிரியா இராமானுச! நின் அருளின் வண்ணம்
நோக்கில் தெரிவு அரிதால்; உரையாய், இந்த நுண் பொருளே. 2828

பொருளும் புதல்வரும் பூமியும் பூங்குழலாரும் என்றே
மருள் கொண்டு இளைக்கும் நமக்கு நெஞ்சே! மற்று உளார் தரமோ?
இருள் கொண்ட வெம் துயர் மாற்றித் தன் ஈறு இல் பெரும் புகழே
தெருளும் தெருள் தந்து இராமானுசன் செய்யும் சேமங்களே 2829

சேம நல் வீடும் பொருளும் தருமமும் சீரிய நல்
காமமும் என்று இவை நான்கு என்பர்; நான்கினும் கண்ணனுக்கே
ஆம் அது காமம் அறம் பொருள், வீடு இதற்கு என்று உரைத்தான்
வாமனன் சீலன் இராமானுசன் இந்த மண்மிசையே. 2830

மண்மிசை யோனிகள் தோறும் பிறந்து எங்கள் மாதவனே
கண் உற நிற்கிலும் காணகில்லா உலகோர்கள் எல்லாம்
அண்ணல் இராமானுசன் வந்து தோன்றிய அப் பொழுதே
நண்ணரும் ஞானம் தலைக்கொண்டு நாரணற்கு ஆயினரே. 2831





*அடியேன் வேறு ஒரு தெய்வத்தை விரும்பேன். இவ்வுலகில் தாழ்ந்த மனிதரை "மேகம் போன்றவர்களே!" என்று கவிகளால் துதி செய்யேன். திருவரங்கம் என்றவாறே அளவற்ற பக்தி கொள்ளும் இராமாநுசரின் நிலையான திருவடித் தாமரைகளை மறக்க மாட்டேன். பின்பு கொடிய வினைகள் எவ்வாறு என்னைத் தாக்கும்?* 2825

*வலிமை உடைய சக்கரம் ஏந்திய இறைவன் ஆத்மாக்களின் தலைவனாய், வேதக் கடலில் மறைந்த நுண்பொருளைப் பகவத் கீதையாக உபதேசித்தான். ஆயினும் உலகோர் பிறவித் துயரில் அழுந்துவதைக் கண்ட இராமாநுசர் அக்கீதைப் பொருளை விவரித்து அவர்கள் பின் தொடர்ந்து அருள் செய்தார். இதுவே இவர் இயல்பாகும்.* 2826

*எம்பெருமானார் பரந்த புகழுடைய இராமாயண வெள்ளத்தில் மூழ்குபவர். அவர் குணங்களைக் கூறும் அன்பர்களின் திருவடித் தாமரைகளில் நெஞ்சு பொருந்திக் கனியும் நல்லவர்கள், இராமாநுசரிடம் அடிமைப்படுவதை உகந்து, அடியேனையும் அவர்க்கு ஆள் ஆக்கினார்கள்.* 2827

*எம்பெருமானாரே! அகங்காரம் உடைய என்னை இன்று ஒரு பொருளாக்கி, தேவரீர் அடிமைத் திறத்தில் நிலை நிறுத்தினீர். முன்பெல்லாம் வீணாகப் புறவிஷயங்களிலே தள்ளி விட்டது ஏன்? புண்ணியர்கள் வாக்கை விட்டுப் பிரியாதவரே! உம் அருளின் தன்மையை நோக்குமளவில் அறிய முடியவில்லை. இந்நுட்பத்தைக் கூறுவீர்.* 2828

*பொருள், பூமி, புதல்வர், பூச்சூடிய பெண்கள் என்றெல்லாம் விரும்பி அறிவு கெட்டு வருந்தும் நமக்கு அறிவின்மையுடன் கூடிய துயரங்களை இராமாநுசர் போக்கினார். தம் புகழையே சிந்திக்கும் ஞானத்தைத் தந்தார். நெஞ்சமே! எம்பெருமானார் செய்யும் நன்மைகள், மற்றவர்க்குச் செய்கிற மாதிரியோ? அல்ல.* 2829

*உய்வான வீடும், பொருளும், அறமும், சிறந்த காமமும் எனப்படுவன உறுதிப் பொருள்கள் என்று கூறுவர். இவற்றுள் காமம் கண்ணபெருமானைப் பற்றியதாகவே அமைவது. அறம், பொருள், வீடு மூன்றும், இறைவன் மேலான காமத்திற்கு உட்பட்டது என்று இவ்வுலகில் இராமாநுசர் உரைத்தார். இவர், வாமனப் பெருமானின் சீலம் உடையவர்.* 2830

*நம் திருமால், தாமே உலகில் பல பிறவிகள் எடுத்து, எல்லோர் கண்களுக்கும் இலக்கானபொழுதும் அவர்கள் தம் தலைவனாக அவரைப் பார்க்க வில்லை. ஆனால் எல்லோருக்கும் தலைவரான இராமாநுசர் அவதரித்த பின்னர், பெறற்கரிய ஞானத்தை அவர்கள் பெற்று ஸ்ரீமந் நாராயணனுக்கு ஆட்பட்டனர்.* 2831

ஆயிழையார் கொங்கை தங்கும் அக் காதல் அளற்று அழுந்தி
மாயும் என் ஆவியை வந்து எடுத்தான் இன்று மா மலராள்
நாயகன் எல்லா உயிர்கட்கும் நாதன் அரங்கன் என்னும்
தூயவன் தீது இல் இராமாநுசன், தொல் அருள் சுரந்தே. 2832

சுரக்கும் திருவும் உணர்வும்; சொலப்புகில் வாய் அமுதம்
பரக்கும்; இரு வினை பற்று அற ஓடும் படியில் உள்ளீர்!
உரைக்கின்றனன் உமக்கு யான்; அறம் சீறும் உறு கலியைத்
துரக்கும் பெருமை இராமாநுசன் என்று சொல்லுமினே. 2833

சொல் ஆர் தமிழ் ஒரு மூன்றும் சுருதிகள் நான்கும் எல்லை
இல்லா அறநெறி யாவும் தெரிந்தவன் எண் அரும் சீர்
நல்லார் பரவும் இராமாநுசன் திருநாமம் நம்பிக்
கல்லார் அகல் இடத்தோர் எது பேறு என்று காமிப்பரே! 2834

பேறு ஒன்று மற்று இல்லை, நின் சரண் அன்றி; அப் பேறு அளித்தற்கு
ஆறு ஒன்றும் இல்லை, மற்று அச் சரண் அன்றி என்று இப் பொருளைத்
தேறும் அவர்க்கும் எனக்கும் உனைத் தந்த செம்மை சொல்லால்
கூறும் பரம் அன்று இராமாநுச! மெய்ம்மை கூறிடிலே. 2835

கூறும் சமயங்கள் ஆறும் குலையக் குவலயத்தே
மாறன் பணித்த மறை உணர்ந்தோனை, மதியிலியேன்
தேறும்படி என் மனம் புகுந்தானைத் திசை அனைத்தும்
ஏறும் குணனை, இராமாநுசனை இறைஞ்சினமே. 2836

இறைஞ்சப் படும் பரன், ஈசன் அரங்கன் என்று இவ் உலகத்து
அறம் செப்பும் அண்ணல் இராமாநுசன் என் அருவினையின்
திறம் செற்று இரவும் பகலும் விடாது என் தன் சிந்தையுள்ளே
நிறைந்து ஒப்பு அற இருந்தான்; எனக்கு ஆரும் நிகர் இல்லையே. 2837

நிகர் இன்றி நின்ற என் நீசதைக்கு உன் அருளின்கண் அன்றிப்
புகல் ஒன்றும் இல்லை; அருட்கும் அஃதே புகல் புன்மையிலோர்
பகரும் பெருமை இராமாநுச! இனி நாம் பழுதே
அகலும் பொருள் என் பயன் இருவோமுக்கும் ஆன பின்னே? 2838





திருமகள் கேள்வனான திருவரங்கன் எல்லா ஆத்மாக்களுக்கும் இறைவன் என்று உபதேசித்தவரும் தூயவரும் ஆன குற்றமற்ற இராமாநுசர், அடியேனுக்கு அருள் செய்தார். அணிகலன் களுடைய மார்புகள் பெற்ற பெண்களின் ஆசையில் அழுந்தும் என் ஆத்மாவை இன்று காப்பதற்கு அவர் தாமே தம் அருள் பொழிந்து உய்வித்தார். 2832

உலகத்தோரே! நான் ஒன்று கூறுவேன். அறத்தைச்சீறும் கலியை ஓட்டி விடுபவர் இராமாநுசரே என்று கூறுங்கள். அப்படிக் கூறினால், பக்தி, ஞானம் ஆகியவை பெருகும். அவர் திருநாமத்தைக்கூறும் பொழுதே, வாய் அமுதம் பெருகி வினைகள் ஓடிவிடும். 2833

இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழையும், நான்கு வேதங்களையும், எல்லை இல்லா அறநெறிகளையும் அறிந்தவர் இராமாநுசர் ஆவார். எண்ணற்ற நற்குணங்களை உடைய இவரை, நல்லவர் துதிப்பார்கள். ஆனால், உலகோரில் சிலர் இவர் திருநாமத்தை என் சொல்லை நம்பிக் கற்பதில்லை. அறியாத இவர்கள் எது உறுதிப் பொருள் என்று கேட்கின்றார்களே! 2834

இராமாநுசப் பிரானே! உம் திருவடிகளைத் தவிர, வேறு உபாயம் இல்லை. அப்பேற்றை அளிப்பதற்கு அத்திருவடிகள் தவிர வேறு வழி இல்லை. இவ்வாறு உண்மைப் பொருளை தெளிவாக அறிந்தவர்க்கும், எனக்கும், உம்மைத் தந்த பேரருள் செயலானது உண்மையாகக் கூறில், வாயால் சொல்லத் தரம் அன்று; அனுபவமே தான் முடிவு. 2835

இவ்வுலகில் புறச் சமயங்கள் ஆறும் உரைக்கும் பொய்கள் தலைசாயும்படி நம்மாழ்வார் தமிழ் வேதத்தை அருளினார். இதனைக் கற்றுணர்ந்தவரும், மதியற்ற அடியேன் மனம் புகுந்தவரும், திசைகள் எங்கும் பரவிய குணங்களுடையவரும் ஆன இராமாநுசரை வணங்கினோம். 2836

"எல்லோராலும் வணங்கத் தக்க பரம் பொருள் இறைவனான திருவரங்க நாதனே" என்று இவ்வுலகத்தில் இராமாநுசர் உண்மை யான தர்மத்தை அருளிச் செய்தார். எல்லோர்க்கும் தலைவரான எம்பெருமானார், என்னுடைய போக்க முடியாத கொடிய வினைக் கூட்டத்தைப் போக்கினார். பகலும் இரவும், விடாமல் என் இதயத்தின் உள்ளே நிறைந்து ஒப்பில்லாத படி இருக்கிறார். இத்தகைய எனக்கு ஒப்பாவார் யாரும் இல்லை. 2837

உயர்ந்தோர் புகழும் பெருமை உடைய இராமாநுசரே! ஒப்பற்ற தாழ்ச்சி உடைய என் நீசத் தன்மைக்கு உம்முடைய அருளைத் தவிர வேறு புகலிடம் இல்லை. தேவரீர் அருளுக்கும் அடியேன் தாழ்வைத் தவிர வேறு பற்றிடம் இல்லை. அடியேன் தாழ்வில் உமக்கும், உமது அருளால் எனக்கும் பயன் ஏற்பட்ட பிறகு, இனிமேலும் இருவரும் வீணாகப் பிரிந்திருக்கலாமா? 2838

ஆனது செம்மை அறநெறி; பொய்ம்மை அறு சமயம்
போனது பொன்றி; இறந்தது வெம் கலி பூங் கமலத்
தேன் நதி பாய் வயல் தென் அரங்கன் கழல் சென்னி வைத்துத்
தான் அதில் மன்னும் இராமாநுசன் இத் தலத்து உதித்தே. 2839

உதிப்பன உத்தமர் சிந்தையுள்; ஒன்னலர் நெஞ்சம் அஞ்சி,
கொதித்திட மாறி நடப்பன; கொள்ளை வன் குற்றம் எல்லாம்
பதித்த என் புன் கவிப் பா இனம் பூண்டன பாவு தொல் சீர்
எதித் தலை நாதன் இராமாநுசன் தன் இணை அடியே. 2840

அடியைத் தொடர்ந்து எழும் ஐவர்கட்காய் அன்று, பாரதப் போர்
முடியப் பரி நெடுந் தேர் விடும் கோனை முழுது உணர்ந்த
அடியர்க்கு அமுதம் இராமாநுசன் என்னை ஆள வந்து இப்
படியில் பிறந்தது; மற்று இல்லை காரணம், பார்த்திடிலே. 2841

பார்த்தான் அறு சமயங்கள் பதைப்ப; இப் பார் முழுதும்
போர்த்தான் புகழ்கொண்டு; புன்மையினேனிடைத் தான் புகுந்து
தீர்த்தான் இரு வினை; தீர்த்து அரங்கன் செய்ய தாள் இணையோடு
ஆர்த்தான்; இவை எம் இராமாநுசன் செய்யும் அற்புதமே. 2842

அற்புதன், செம்மை இராமாநுசன் என்னை ஆள வந்த
கற்பகம், கற்றவர் காமுறு சீலன் கருது அரிய
பற்பல் உயிர்களும் பல் உலகு யாவும் பரனது என்னும்
நற்பொருள் தன்னை இந் நானிலத்தே வந்து நாட்டினனே. 2843

நாட்டிய நீசச் சமயங்கள் மாண்டன; நாரணனைக்
காட்டிய வேதம் களிப்புற்றது; தென் குருகை வள்ளல்
வாட்டம் இலா வண் தமிழ் மறை வாழ்ந்தது மண்ணுலகில்
ஈட்டிய சீலத்து இராமாநுசன் தன் இயல்வு கண்டே. 2844

கண்டவர் சிந்தை கவரும் கடி பொழில் தென்அரங்கன்
தொண்டர் குலாவும் இராமாநுசனை, தொகை இறந்த
பண் தரு வேதங்கள் பார் மேல் நிலவிடப் பார்த்தருளும்
கொண்டலை, மேவித் தொழும் குடி ஆம் எங்கள் கோக்குடியே. 2845





தாமரைப் பூக்களின் தேன், ஆறாகப் பாயும் வயல்களுடைய திருவரங்கத்தில் உள்ள பெருமானின் திருவடிகளைத் தலை மேல் கொண்டு, வாழும் இராமாநுசர், இப்பூமியில் அவதரித்த பின்னர், அறம் வாழ்ச்சி பெற்றது; பொய்யான ஆறு சமயங்களும் நாசம் அடைந்தன. கொடிய கலியுகமும் இறந்தது. 2839

உலகெங்கும் பரவிய சீர்மைகள் உடைய துறவிகள் தலைவரான இராமாநுசரின் திருவடி இணைகள், உத்தமமான அடியார்கள் நெஞ்சில் ஒளி விடுவன. எதிரிகளின் நெஞ்சம் பயப்பட்டுக் கொதிக்கும்படி மாறி நடப்பன. குற்றங்கள் நிறைந்தனவும் தாழ்ந்தனவையும் ஆன அடியேன் பாவினங்களை அவர் திருவடிகள் பெற்றுக் கொண்டனவே! 2840

கண்ணபிரான், தன் திருவடிகளைப் பற்றிய பஞ்சபாண்டவர்களுக்காக அன்று பாரதப் போரில், பகைவர் மாளும் படியாகக் குதிரைகள் பூட்டிய தேரை ஓட்டினான். அவ்விறைவனை முற்றிலும் தெரிந்து கொண்ட அடியார்களுக்கு அமுதம் போன்ற இராமாநுசர் இவவுலகில் அவதரித்தது அடியேனை ஆட் கொள்ளவே. இது தவிர வேறு காரணமில்லை. 2841

ஆறு சமயங்கள் பதைத்து ஒடுங்கும்படி எம்பெருமானார் திருக்கண் பார்த்தார். இவ்வுலகம் முழுதும் அவர் புகழே பரந்து வளைத்தது. தாழ்ந்தவனான அடியேனிடத்தே தாமாகவே புகுந்து வினைகளைத் தீர்த்தார். திருவரங்கன் அழகிய திருவடிகளில் நான் சேரும்படி செய்தார். இவைகள் இராமாநுசர் செய்த அற்புதச் செயல்கள். 2842

என்னை ஆட்கொள்ள அவதரித்த கற்பகம் ஆன இராமாநுசர் ஞானிகள் ஆசை கொள்ளும் சீலகுணம் கொண்டவர். ஆச்சரியச் செயல்களும், செம்மையும் உடைய இவர், உலகத்து உயிர்களான பல கூட்டங்களும், உலகமும், எம்பெருமானின் உடைமைகள் என்னும் பேருண்மையைத் தாம் அவதரித்து நிலை நாட்டினார். 2843

இவ்வுலகில், இராமாநுசரின் சீல குணத்தைப் பார்த்த, தாழ்ந்த சமயங்கள் எல்லாம் அழிந்தன. ஸ்ரீமந் நாராயணனைக் காட்டிய வேதங்கள் தமக்குக் குறை இல்லை என்று களிப்புற்றன. தென்குருகூர்ப்பிரான் நம்மாழ்வார் அருளிய குறையற்ற சிறந்த திருவாய் மொழியும் வாழ்வு பெற்றது. 2844

கணக்கற்ற சுரங்களாகிய இசை பெற்ற வேதங்கள், பாரில் ஓங்கி வளரும்படி செய்த இராமாநுசர் அடியார்களால் கொண்டாடப்பட்டார். கண்டோர் நெஞ்சு கவரும் சோலைகள் சூழ்ந்த திருவரங்கத்தில் உள்ள எம்பெருமானுக்கு அடிமைப் பட்டவர் இத்தொண்டர்கள். இத்தகைய உடையவரை எங்கள் சுவாமியாகப் பெற்றோம். 2845

கோக் குல மன்னரை மூவெழு கால், ஒரு கூர் மழுவால்
போக்கிய தேவனைப் போற்றும் புனிதன், புவனம் எங்கும்
ஆக்கிய கீர்த்தி இராமானுசனை அடைந்தபின் என்
வாக்கு உரையாது, என் மனம் நினையாது இனி மற்று ஒன்றையே. 2846

மற்று ஒரு பேறு மதியாது, அரங்கன் மலர் அடிக்கு ஆள்
உற்றவரே தனக்கு உற்றவராய்க் கொள்ளும் உத்தமனை,
நல் தவர் போற்றும் இராமானுசனை இந் நானிலத்தே
பெற்றனன்; பெற்றபின் மற்று அறியேன் ஒரு பேதைமையே. 2847

பேதையர் வேதப் பொருள் இது என்று உன்னிப் பிரமம் நன்று என்று
ஓதி மற்று எல்லா உயிரும் அஃது என்று, உயிர்கள் மெய்விட்டு
ஆதிப் பரனோடு ஒன்று ஆம் என்று சொல்லும் அவ் அல்லல் எல்லாம்
வாதில் வென்றான், எம் இராமானுசன் மெய்ம் மதிக்கடலே. 2848

கடல் அளவு ஆய திசை எட்டினுள்ளும், கலி இருளே
மிடைதரு காலத்து இராமானுசன், மிக்க நான்மறையின்
சுடர் ஒளியால் அவ் இருளைத் துரந்திலனேல், உயிரை
உடையவன் நாரணன் என்று அறிவார் இல்லை உற்று உணர்ந்தே. 2849

உணர்ந்த மெய்ஞ்ஞானியர் யோகம் தொறும், திருவாய்மொழியின்
மணம் தரும் இன் இசை மன்னும் இடம்தொறும், மா மலராள்
புணர்ந்த பொன் மார்பன் பொருந்தும் பதிதொறும் புக்கு நிற்கும்
குணம் திகழ் கொண்டல், இராமானுசன் எம் குலக் கொழுந்தே. 2850

கொழுந்துவிட்டு ஓடிப் படரும் வெம் கோள் வினையால், நிரயத்து
அழுந்தியிட்டேனை வந்து ஆட்கொண்ட பின்னும், அரு முனிவர்
தொழும் தவத்தோன் எம் இராமானுசன் தொல் புகழ் சுடர் மிக்கு
எழுந்தது; அத்தால் நல் அதிசயம் கண்டது இருநிலமே. 2851

இருந்தேன் இரு வினைப் பாசம் கழற்றி இன்று; யான் இறையும்
வருந்தேன் இனி எம் இராமானுசன் மன்னு மா மலர்த் தாள்
பொருந்தா நிலை உடைப் புன்மையினோர்க்கு ஒன்றும் நன்மை செய்யாப்
பெருந் தேவரைப் பரவும், பெரியோர் தம் கழல் பிடித்தே. 2852





*அரச குல மன்னர்களை இருபத்தொரு தலைமுறைகள் தம் மழுவால் அழித்த பரசுராமனாய் அவதரித்த எம்பெருமானைத் தூயவரான இராமானுசர் எப்பொழுதும் துதிப்பார். உலகு எல்லாம் பரவிய புகழுடைய அவரை அடியேன் அடைந்தபிறகு வேறு எதிலும் என் மனம் செல்லாது; என் வாக்கும் வேறெதையும் பேசாது.* **2846**

*நல்லடியார்களால் போற்றப்படும் உத்தமராகிய இராமானுசர், பயன் கருதாமல் திருவரங்கன் திருவடிகளுக்கு ஆட்பட்டவரையே தம் ஆத்ம பந்துக்களாகக் கொண்டவர். இவ்வுலகில் அடியேன் அவருக்கு ஆட்பட்டு மற்றப் பேதமைகள் தீரப் பெற்றேன்.* **2847**

*ஞானக் குறைபாடு உடையவர் தாங்கள் கூறுவதே வேதப் பொருள் என்று எண்ணி, எல்லா உயிர்களும் பிரமமே என்று கூறுவர். அவர்கள் கொள்கைப்படி சீவாத்மாக்கள் உடலை விட்டபின், பரப் பிரமத்தோடு ஒன்றுபடுவதே மோட்சம் ஆகும். இக் கொள்கையை தத்துவ ஞானக் கடலான இராமானுசர் வாதத்தில் வென்றார்.* **2848**

*கடலே எல்லை ஆக உள்ள எல்லாத் திசைகளிலும், கலிபுருஷன் இருளாகப் பரவிய காலத்தில், இராமானுசர் தோன்றி நான்கு வேதங்களின் சுடர் மிக்க ஒளிகளால் அக்கலியின் விளைவு களைப் போக்கினார். இவ்வாறு அவர் போக்கி இராவிட்டால் எல்லா ஆத்மாக்களுக்கும் ஸ்ரீமந் நாராயணனே தலைவன் என்பதை யாரும் அறிந்துணர்ந்திருக்க மாட்டார்கள்.* **2849**

*ஆத்ம குணத்தில் உயர்ந்த மேகம் போன்ற எங்கள் வைணவ குலத் தலைவர் இராமானுசர், கற்றுணர்ந்த தத்துவ ஞானிகள் கூட்டத்தில் இருப்பார். திருவாய்மொழியின் மணம் மிக்க இசை இனிமை பரவும் இடங்களில் இருப்பார். திருமகள் தங்கும் மார்பு உடைய திருமால் எழுந்தருளிய திவ்விய தேசங்களிலும் இருப்பார்.* **2850**

*முனிவர்களால் வணங்கப்படும் தவமுடைய எம் இராமானுசரின் தொன்மையான கல்யாண குணங்கள் என்னை ஆட் கொண்டன. மேன் மேலும் பெருகிய என் வினைகளால், பிறவியாகிற நரகத்திலே அழுந்திய என்னை அவர் அருள் ஆட்கொண்டு உய்வித்தது. இதைக் கண்டு இந்த அகன்ற உலகம் மிக்க ஆச்சரியம் அடைந்தது.* **2851**

*சுவாமி இராமானுசரின் திருவடிகளில் சேராத தாழ்ந்தவர்க்குப் பெரிய பெருமாளான திருவரங்கன் அருள் செய்யான். இந்தப் பெரிய பெருமாளைத் துதிக்கும் கூரத்தாழ்வானாகிற பெரியவரின் திருவடிகளை அடியேன் பிடித்ததனால், புண்ணிய பாவங்களிலிருந்து விடுபட்டேன். இனிமேல் சிறிதும் வருத்தம் இல்லை.* **2852**

பிடியைத் தொடரும் களிறு என்ன, யான் உன் பிறங்கிய சீர்
அடியைத் தொடரும்படி நல்க வேண்டும், அறு சமயச்
செடியைத் தொடரும் மருள் செறிந்தோர் சிதைந்து ஓட வந்து இப்
படியைத் தொடரும், இராமாநுச! மிக்க பண்டிதனே! 2853

பண் தரு மாறன் பசுந் தமிழ் ஆனந்தம் பாய் மதமாய்
விண்டிட எங்கள் இராமாநுசமுனி வேழம் மெய்ம்மை
கொண்ட நல் வேதக் கொழுந் தண்டம் ஏந்தி, குவலயத்தே
மண்டி வந்து ஏன்றது; வாதியர்காள்! உங்கள் வாழ்வு அற்றதே. 2854

வாழ்வு அற்றது தொல்லை வாதியர்க்கு; என்றும் மறையவர் தம்
தாழ்வு அற்றது; தவம் தாரணி பெற்றது; தத்துவ நூல்
கூழ் அற்றது; குற்றம் எல்லாம் பதித்த குணத்தினர்க்கு அந்
நாழ் அற்றது, நம் இராமாநுசன்தந்த ஞானத்திலே. 2855

ஞானம் கனிந்த நலம் கொண்டு நாள்தொறும் நைபவர்க்கு
வானம் கொடுப்பது மாதவன்; வல்வினையேன் மனத்தில்
ஈனம் கடிந்த இராமாநுசன் தன்னை எய்தினர்க்கு அத்
தானம் கொடுப்பது தன் தகவு என்னும் சரண் கொடுத்தே. 2856

சரணம் அடைந்த தருமனுக்காப் பண்டு நூற்றுவரை
மரணம் அடைவித்த மாயவன், தன்னை வணங்க வைத்த
கரணம் இவை உமக்கு என்று இராமாநுசன் உயிர்கட்கு
அரண் அங்கு அமைத்திலனேல், அரண் ஆர் மற்று இவ் ஆர் உயிர்க்கே? 2857

ஆர் எனக்கு இன்று நிகர், சொல்லில்? மாயன் அன்று ஐவர் தெய்வத்
தேரினில் செப்பிய கீதையின் செம்மைப் பொருள் தெரியப்
பாரினில் சொன்ன இராமாநுசனைப் பணியும் நல்லோர்
சீரினில் சென்று பணிந்தது என் ஆவியும் சிந்தையுமே 2858

சிந்தையினோடு கரணங்கள் யாவும் சிதைந்து முன் நாள்
அந்தம் உற்று ஆழ்ந்தது கண்டு அவை என் தனக்கு அன்று அருளால்
தந்த அரங்கனும் தன் சரண் தந்திலன்; தான்அது தந்து
எந்தை இராமாநுசன் வந்து எடுத்தனன் இன்று என்னையே. 2859





*ஆறு புறச் சமயங்களின் தூறுகளில் படியும் அறிவின்மை உடையோர் பயந்து ஓடும்படி, இவ்வுலகில் அவதரித்த பண்டிதரான இராமாநுசரே! பெண் யானையைத் தொடரும் ஆண் யானை போல் அடியேன் உம்முடைய சீர்மைக் குணங்களால் ஈர்க்கப்பட்டுப் பின் தொடரும்படி அருள் செய்ய வேண்டும். நீர் அவதரித்தது என் போல்வாரின் உய்வுக்கு அன்றோ!* 2853

*எங்கள் இராமாநுச முனிவராகிய மதயானை, நம்மாழ்வாரின் இசை நிறைந்த பசுந்தமிழான, திருவாய் மொழியால் உண்டாகிய மதநீரைப் பெருக்கிக் கொண்டு வந்தது. சத்தியமே கூறும் வேதம் என்னும் தண்டத்தை ஏந்தி, இப்பூவுலகில் உம்மை நெருக்க வந்துள்ளார். வாதம் செய்பவரே! உங்கள் பிழைப்பு இனிப் போயிற்று.* 2854

*நம் எம்பெருமானார் அருளிய ஞானத்தில், இந்தப் பழைய வாதம் செய்வோரின் வாழ்வு அற்றது. வேதியர்கள், குறை தீர்ந்தது. பூவுலகம் தவம் பெற்றது. தத்துவ நூல்களோ ஐயம் இன்றி உணரப்பட்டன. பல்வகைக் குற்றம் உள்ளவர்க்கு அவை தீர்ந்தன.* 2855

*ஞானம் பக்தி வடிவமாகி, அந்த பக்தியினால் தினமும் உருகுபவர்களுக்குத் திருமால் வீடுபேறு அளிக்கிறான். ஆனால், கொடிய வினையேன் மனத்தின் மாசுகளைப் போக்கிய இராமாநுசர் தம்மைப் பற்றியோர்க்குத் தம் அருளாகிய கைம்முதலைத் தந்து, தம் திவ்விய கிருபையாலே மோட்சத்தை அளிக்கிறார்.* 2856

*எம்பெருமான் தன்னைச் சரணம் அடைந்த, தருமபுத்திரருக்காக முன்பு துரியோதனாதியர் நூறு பேர்களையும் மரணம் அடையச் செய்தான். ஆயின் எம் பெருமானாரோ தம் உபதேசம் மூலமே ஆத்மாக்களுக்குக் காப்பு செய்தார். இறைவனை வழிபட உண்டான புலன்கள் நமக்கு உரிமைப்பட்டன அல்ல என்று கூறினார். இவரை விட ஆத்மாக்களுக்கு வேறு காப்பாளர் உண்டோ?* 2857

*மாயனான கண்ணன் அன்று பாண்டவரின் தேரில் ஏறி நின்று உரைத்த கீதையின் செம்மைப் பொருளை இராமாநுசர் பாரில் உள்ளோர் தெரிந்து கொள்ளும்படி தம் உரையாலே அருளிச் செய்தார். இவரை அடி பணிந்த நல்லோர் குணங்களிலே அடியேன் ஆத்மாவும் சிந்தையும் சென்று பணிந்தன. எனவே எனக்கு ஒப்பு யார்?* 2858

*படைப்புக்கு முன்பு, சித்தமும் புலன்களும் இல்லாமல் அழிந்து கிடந்த ஆத்மாக்கள், அறிவற்றவைகளாய் இருப்பதைக் கண்ட இறைவன் அவற்றுக்கு உடல் உறுப்புகளைப் படைத்து வாழ்வித்தான். அவற்றில் ஒன்றாய்க் கிடந்த அடியேனுக்கு அரங்கன் தன் அருள் காட்டித் தம் திருவடிகளைத் தரவில்லை. அக்குறை நீங்க, இராமாநுசர் தாமாகவே வந்து, இன்று தம் திருவடிகளைத் தந்து என்னை உய்வித்தார்.* 2859

என்னையும் பார்த்து என் இயல்வையும் பார்த்து, எண் இல் பல் குணத்த
உன்னையும் பார்க்கில் அருள் செய்வதே நலம்; அன்றி என்பால்
பின்னையும் பார்க்கில் நலம் உளதே? உன் பெருங் கருணை
தன்னை என் பார்ப்பர், இராமாநுச! உன்னைச் சார்ந்தவரே? 2860

சார்ந்தது என் சிந்தை உன் தாள் இணைக்கீழ்; அன்பு தான் மிகவும்
கூர்ந்தது அத் தாமரைத் தாள்களுக்கு; உன் தன் குணங்களுக்கே
தீர்ந்தது என் செய்கை; முன் செய்வினை நீ செய்வினை அதனால்
பேர்ந்தது, வண்மை இராமாநுச! எம் பெருந்தகையே! 2861

கைத்தனன் தீய சமயக் கலகரை; காசினிக்கே
உய்த்தனன், தூய மறைநெறி தன்னை என்று உன்னி உள்ளம்
நெய்த்த அன்போடு இருந்து ஏத்தும் நிறை புகழோருடனே
வைத்தனன் என்னை, இராமாநுசன் மிக்க வண்மை செய்தே. 2862

வன்மையினாலும் தன் மா தகவாலும் மதி புரையும்
தண்மையினாலும் இத் தாரணியோர்கட்குத் தான் சரணாய்
உண்மை நல் ஞானம் உரைத்த இராமாநுசனை உன்னும்
திண்மை அல்லால் எனக்கு இல்லை, மற்று ஓர் நிலை தேர்ந்திடிலே. 2863

தேரார் மறையின் திறம் என்று, மாயவன் தீயவரைக்
கூர் ஆழி கொண்டு குறைப்பது; கொண்டல் அனைய வண்மை
ஏர் ஆர் குணத்து எம் இராமாநுசன் அவ் எழில் மறையில்
சேராதவரைச் சிதைப்பது, அப்போது ஒரு சிந்தைசெய்தே. 2864

செய்த்தலைச் சங்கம் செழு முத்தம் ஈனும் திரு அரங்கர்
கைத்தலத்து ஆழியும் சங்கமும் ஏந்தி நம் கண்முகப்பே
மொய்த்து அலைத்து உன்னை விடேன் என்று இருக்கிலும் நின் புகழே
மொய்த்து அலைக்கும் வந்து, இராமாநுச! என்னை முற்றும் நின்றே. 2865

நின்ற வண் கீர்த்தியும் நீள் புனலும் நிறை வேங்கடப் பொன்
குன்றமும் வைகுந்த நாடும், குலவிய பாற்கடலும்
உன் தனக்கு எத்தனை இன்பம் தரும் உன் இணைமலர்த் தாள்
என் தனக்கும் அது; இராமாநுச! இவை ஈந்து அருளே. 2866





*இராமாநுசரே! குற்றமே வடிவான என்னை நோக்கி, என் தன்மையையும் பார்த்து, எண்ணற்ற குணங்களுடைய உம்மையும் பார்த்தால் நீர் அருள் செய்வதே நல்லது. இது மட்டுமின்றி என்னிடம் நன்மை உண்டோ எனில் சிறிதும் இல்லை. ஆனாலும் உமக்கு ஆட்பட்டவர்கள் உமது கருணையான அருளைப் பற்றித் தாழ்வாக எண்ணலாகாது அன்றோ!* **2860**

*வள்ளல் தன்மை கொண்ட எம் பெருந்தகையான இராமாநுசரே; என் நெஞ்சம் உம் இணைத் திருவடிகளின் கீழ் அமர்ந்தது. அவைகளிலே பக்தி மிகுந்து என் செயல்களும் உம் குணங்களுக்கே அற்றுத் தீர்ந்தன. உன் அருளால் என் வினைப் பலன்கள் தொலைந்தன.* **2861**

*எம்பெருமானார் தம் வண்மைக் குணத்தால், தீமை செய்த மதக் கலவரவாதிகளை ஒழித்து விட்டார். தூய்மையான வேத நெறியை உலகில் நிலை நாட்டினார். இவ்வாறு நினைந்து, இதயம் உருகிற அன்புடன் அவர் புகழையே ஏத்தும் அடியாருடன், என்னையும் சேர்த்து விட்டார்.* **2862**

*எம்பெருமானார், தம் வள்ளல் தனத்தாலும், பேரருளாலும் சந்திரனை ஒத்த குளிர்ந்த திருவுள்ளத்தாலும் இவ்வுலகோர்க்குத் தாமே காப்பாளராக தம் உண்மை ஞானத்தை உபதேசித்தார். இதைச் சிந்திப்பதைத் தவிர அடியேனுக்கு வேறு ஒரு நிலையும் இல்லை.* **2863**

*வேதம் கூறும் வழியைத் தேர்ந்து கொள்ளாத தீயவர்களை, எம் பெருமான் தன் கூர்மையான சக்கரத்தாலே தண்டிக்கிறான். ஆனால், மேகம் போன்ற ஈகைத் தன்மை உடைய எம்பெருமானாரோ, தம் நல்ல குணத்தால் வேதப்பொருளைத் தெரியாதவர்களை ஒவ்வோர் உண்மை விளக்கத்தாலே தலை குனியச் செய்து அறிவுறுத்தி உய்விப்பார்.* **2864**

*சங்குகளிலிருந்து செழுமையான முத்துக்கள் தோன்றும் வயல்கள் உள்ள திருவரங்கத்தில் எழுந்தருளிய பெருமான், தன் கையில் திருவாழி திருச் சங்குகளைக் கொண்டவனாய்த் தன் அழகாலே கண்எதிரிலே நின்று வலியப் பற்றுகிறான். என்றாலும் அதனால் சிந்தனை தடுமாறாமல் உம் குணத்தில் நான் ஈடுபடுகிறேன் என்பதை விட, உம்முடை திவ்விய குணங்களே என்பக்கம் சூழ்ந்து கவர்கின்றன. இராமாநுசரே உம் அருள்தான் என்னே!* **2865**

*இராமாநுசா! புகழ் நிலை பெற்றதும், நீர் வளமும் உடைய திருவேங்கட மலையும், ஸ்ரீவைகுண்ட நாடும், கொண்டாடப் படும் பாற்கடலும் உமக்கு எவ்வளவு மகிழ்ச்சியை உண்டாக்குமோ அவ்வளவு, உம்முடைய இணைத் திருவடித் தாமரைகளும் அடியேனுக்கு ஆனந்தத்தைத் தருவன. அவைகளை அடியேனுக்கு ஈந்தருள வேண்டும்.* **2866**

ஈந்தனன் ஈயாத இன்னருள்; எண் இல் மறைக் குறும்பைப்
பாய்ந்தனன் அம் மறைப் பல் பொருளால்; இப் படி அனைத்தும்
ஏய்ந்தனன் கீர்த்தியினால்; என் வினைகளை வேர் பறியக்
காய்ந்தனன், வண்மை இராமாநுசற்கு என் கருத்து இனியே? 2867

கருத்தில் புகுந்து உள்ளில் கள்ளம் கழற்றி கருது அரிய
வருத்தத்தினால் மிக வஞ்சித்து, நீ இந்த மண்ணகத்தே
திருத்தித் திருமகள் கேள்வனுக்கு ஆக்கிய பின் என் நெஞ்சில்
பொருத்தப்படாது, எம் இராமாநுச! மற்று ஓர் பொய்ப்பொருளே. 2868

பொய்யைச் சுரக்கும் பொருளைத் துரந்து இந்தப் பூதலத்தே
மெய்யைப் புரக்கும் இராமாநுசன் நிற்க, வேறு நம்மை
உய்யக் கொள்ள வல்ல தெய்வம் இங்கு யாது என்று உலர்ந்து அவமே
ஐயப்படா நிற்பர், வையத்துள்ளோர் நல் அறிவு இழந்தே. 2869

நல்லார் பரவும் இராமாநுசன், திருநாமம் நம்ப
வல்லார் திறத்தை மறவாதவர்கள் எவர், அவர்க்கே
எல்லா இடத்திலும் என்றும் எப்போதிலும் எத் தொழும்பும்
சொல்லால் மனத்தால் கருமத்தினால் செய்வன் சோர்வு இன்றியே. 2870

சோர்வு இன்றி உன் தன் துணை அடிக்கீழ்த் தொண்டுபட்டவர்பால்
சார்வு இன்றி நின்ற எனக்கு அரங்கன் செய்ய தாள் இணைகள்
பேர்வு இன்றி இன்று பெறுத்தும் இராமாநுச! இனி உன்
சீர் ஒன்றிய கருணைக்கு, இல்லை மாறு தெரிவுறிலே. 2871

தெரிவு உற்ற ஞானம் செறியப் பெறாது, வெம் தீவினையால்
உரு அற்ற ஞானத்து உழல்கின்ற என்னை, ஒரு பொழுதில்
பொரு அற்ற கேள்வியன் ஆக்கி நின்றான்; என்ன புண்ணியனோ?
தெரிவு உற்ற கீர்த்தி இராமாநுசன் என்னும் சீர் முகிலே. 2872

சீர் கொண்டு பேர் அறம் செய்து, நல் வீடு செறிதும் என்னும்
பார் கொண்ட மேன்மையர் கூட்டன் அல்லேன்; உன் பத யுகம் ஆம்
ஏர் கொண்ட வீட்டை எளிதினில் எய்துவன்; உன்னுடைய
கார் கொண்ட வண்மை, இராமாநுச! இது; கண்டு கொள்ளே. 2873





எவர்க்கும் கொடுக்காத இன்னருளை இராமாநுசர் அடியேனுக்கு ஈந்தார். வேத விரோத மதங்களை அவ்வேதத்தைக் கொண்டே தம் ஞானத்தால் கண்டித்தார். இவ்வுலகெங்கும் தம் புகழாலே வியாபித்தார். என் வினைகளை வேருடன் அறுத்தார். இன்னமும் செய்யத்தக்கது அவர் திருவுள்ளத்தில் ஏதேனும் உண்டோ? 2867

எம்பெருமானாரே! நீர், எண்ண முடியாத சிரமங்களுடன் என் நெஞ்சிற் புகுந்து நான் புறக் கணித்தும் என்னை ஏமாற்றி உள் புகுந்து என் குற்றங்களைப் போக்கி, இவ்வுலகில் அடியேன் திருமாலுக்கு ஆளாகும் படி செய்தீர். இனி இதற்கு மாறாக வேறு எதுவும் என் நெஞ்சில் பொருந்தாமல் தேவரீரே அருள் செய்ய வேண்டும். 2868

இவ்வுலகில் பொய்யை வெளிப்படுத்தி மதம் வளர்க்கும் புறச் சமயத்தவரின் போலிப் பொருள்களைக் கண்டித்து உண்மையை எம் பெருமானார் காப்பாற்றினார். இவரைப் பணிந்து ஆட் படாமல், இவ்வுலகில் உள்ளோர், "நமக்கு நன்மை செய்யும் வேறு தெய்வம் உண்டோ?" எனத்தேடி உலர்ந்து, நல்ல ஞானத்தை இழந்து வீணாக சந்தேகப்படுகிறார்களே! 2869

சான்றோரால் கொண்டாடப்படும் இராமாநுசருடைய திருநாமத்தைத் தஞ்சமாகக் கொண்டு மறவாமல் சிந்திப்பவர்களுக்கே அடியேன் எல்லா இடங்களிலும், எல்லா நிலைகளிலும் எப்பொழுதும் ,எந்தவிதக் கைங்கர்யங்களையும் மனம், மொழி, மெய் என்னும் மூவகைகளாலும் பிரியாமல் செய்வேன். 2870

உம்முடைய திருவடிகளின் கீழே சிறிதும் அயர்வின்றி அடிமைப் பட்டவருடன் சேராமல் இருந்த எனக்கு, இன்று திருவரங்கன் திருவடி இணைகளை விட்டு நீங்காத படி அடியேன் இருக்க அருள் செய்த எம் பெருமானாரே! இனி, உம் திருவருளுக்கு ஒப்பாக ஒன்றும் இல்லை என்று அடியேன் தெளிந்தேன். 2871

அடியேன் தெளிவான ஞானம் இன்றி, கொடிய கரும வினைகளிலே பயனற்றதில் திரிந்தேன். நொடிப் பொழுதிலே அடியேனை ஒப்பற்ற கேள்வி உடையவன் ஆக்கிய எம்பெருமானார் அருள் என்னே! புகழ் சிறந்த மேகம் போன்ற அவர் எத்தகைய வள்ளலோ? 2872

இராமாநுசரே! சமம் தமம் முதலிய குணங்களுடன் சரணாகதி தர்மத்தைப் பின்பற்றி வீடு பெறும் புகழுடையோர் கூட்டத்தில் அடியேன் இல்லையே! ஆனால் உமது இரு பாதங்கள் ஆகிற அழகான வீட்டை எளிதில் அடைவேன். உம்முடைய மேகம் போன்ற வள்ளல் தனமே அடியேனை அவ்வாறு ஆட்கொள்ளும். நீரே இதைக் காணலாம். 2873

கண்டு கொண்டேன் எம் இராமாநுசன் தன்னை; காண்டலுமே
தொண்டுகொண்டேன்அவன்தொண்டர்பொன்தாளில்; என்தொல்லைவெம்நோய்
விண்டுகொண்டேன்; அவன் சீர் வெள்ள வாரியை வாய்மடுத்து இன்று
உண்டுகொண்டேன்; இன்னம் உற்றன ஓதில் உலப்பு இல்லையே. 2874

ஓதிய வேதத்தின் உட்பொருளாய் அதன் உச்சி மிக்க
சோதியை நாதன் என அறியாது உழல்கின்ற தொண்டர்
பேதைமை தீர்த்த இராமாநுசனைத் தொழும் பெரியோர்
பாதம் அல்லால் என் தன் ஆர் உயிர்க்கு யாதென்றும் பற்று இல்லையே. 2875

பற்றா மனிசரைப் பற்றி, அப் பற்று விடாதவரே
உற்றார் என உழன்று ஓடி நையேன் இனி; ஒள்ளிய நூல்
கற்றார் பரவும் இராமாநுசனைக் கருதும் உள்ளம்
பெற்றார் எவர், அவர் எம்மை நின்று ஆளும் பெரியவரே. 2876

பெரியவர் பேசிலும் பேதையர் பேசிலும், தன் குணங்கட்கு
உரிய சொல் என்றும் உடையவன் என்று என்று உணர்வில் மிக்கோர்
தெரியும் வண் கீர்த்தி இராமாநுசன் மறை தேர்ந்து உலகில்
புரியும் நல் ஞானம் பொருந்தாதவரைப் பொரும் கலியே. 2877

கலி மிக்க செந்நெல் கழனிக் குறையல், கலைப் பெருமான்
ஒலி மிக்க பாடலை உண்டு தன் உள்ளம் தடித்து, அதனால்
வலி மிக்க சீயம் இராமாநுசன் மறைவாதியர் ஆம்
புலி மிக்கது என்று, இப் புவனத்தில் வந்தமை போற்றுவனே. 2878

போற்று அரும் சீலத்து இராமாநுச! நின் புகழ் தெரிந்து
சாற்றுவனேல் அது தாழ்வு; அது தீரில் உன் சீர் தனக்கு ஓர்
ஏற்றம் என்றே கொண்டு இருக்கிலும் என் மனம் ஏத்தி அன்றி,
ஆற்றகில்லாது; இதற்கு என் நினைவாய் என்றிட்டு அஞ்சுவனே. 2879

நினையார் பிறவியை நீக்கும் பிரானை, இந் நீள் நிலத்தே
எனை ஆள வந்த இராமாநுசனை; இருங் கவிகள்
புனையார்; புனையும் பெரியவர் தாள்களில் பூந்தொடையல்
வனையார்; பிறப்பில் வருந்துவார் மாந்தர் மருள் சுரந்தே. 2880





*எம் இராமாநுசரை இன்று உள்ளபடி கண்டு கொண்டேன். அதனால் அவர் அடியார்களின் அழகிய திருவடிகளில் அடிமைப் பட்டேன். என் பழைய வினைகள் தீரப் பெற்றேன். அவர் திருக்குணங்களை வாயார அனுபவிக்கப் பெற்றேன். இவ்வாறு நான் பெற்ற நன்மைகளை கூறத் தொடங்கினால் அதற்கு ஒரு முடிவு இல்லை.* **2874**

*"ஓதப்படும் வேதங்களின் முடிவான உபநிடதப் பொருள் ஸ்ரீமந் நாராயணனே; அவனே எல்லோர்க்கும் இறைவன்" என்பது, தெரியாமல் உழல்கிற பாமரர்களின் அறிவின்மையை இராமாநுசர் போக்கினார். அவரை வணங்கும் பெரியவர்களின் பாதங்கள் அல்லால் என் ஆத்மாவுக்கு வேறு ஏதும் புகலிடம் இல்லை.* **2875**

*பயன் அற்ற மனிதர்களைப் பற்றி, பாசத்தால் அவரே உறவினர் எனக்கொண்டு, அவர்கள் பின்னால் அலைந்து ஓடி, இனிமேல் துவளமாட்டேன். தெளிவாக நூல்களைக் கற்றவராலே கொண்டாடப் படுகிற இராமாநுசரைத் தொழும் நெஞ்சுடையவரே நம்மை ஆளும் பெரியவர் ஆவார்.* **2876**

*ஞானமுடைய பெரியவர் பேசினாலும், அறிவற்ற பேதையர் பேசினாலும், இராமாநுசர் தம் திருக்குணங்களுக்கு ஏற்றபடி, அவரவர் நிலைக்கேற்பத் துதிக்கத் தகுந்தவர். சிறந்த ஞானிகள் போற்றும் புகழுடைய இராமாநுசர், வேதங்களை ஆராய்ந்து, இவ்வுலகில் உபதேசித்த வழியில் சேராதவர்களைக் கலிபுருஷன் துன்புறுத்துவான்.* **2877**

*சிங்கம் போன்ற உடையவர், வளம் மிகுந்த நெல் வயல்கள் உள்ள திருக்குறையலூரில் தோன்றிய கலைப்பெருமான் ஆன திருமங்கை ஆழ்வார் பாசுரங்களை அனுபவித்துத் தம் உள்ளம் பூரித்தார். அதனால் வலிமை மிகப் பெற்று, வேதத்தைத் தவறாக வாதிட்ட புலிகளைத தாக்கிக் கண்டிக்கவே, சிங்கமான இராமாநுசர் அவதரித்தார் என்று போற்றுவேன்.* **2878**

*புகழ்ச்சிக்கு அப்பாற்பட்ட சீல குணமுடைய இராமாநுசரே! உணர்ந்து பேசினால், தாழ்ந்தவனாகிய அடியேன் பேச்சு தள்ளத் தக்கதே. நான் பேசாதிருந்தாலே உம் திருக்குணங்களுக்கு மேன்மை ஏற்படும். இப்படித் தெரிந்தாலும் என் நெஞ்சு உம்மைப் புகழாமல் தரித்திருக்காதே; இதுபற்றித் தேவரீர் எண்ணம் எதுவோ என்று அஞ்சுகிறேன்.* **2879**

*எம்பெருமானார் அடியேன் பிறவித் துன்பத்தை நீக்கவே அவதரித்தார். என்னை அடிமை கொண்டார். அவரைப் பற்றி எண்ணாமல், கவி பாடாமல், அவர் திருவடிகளில் ஆட்பட்டவரை யாவது துதியாமல், பூமாலைகள் இடாமல், அறிவின்மையில் உழன்று மனிதர்கள் உலக வாழ்வில் துன்புறுகிறார்களே!* **2880**

மருள் சுரந்து ஆகமாவதியர் கூறும் அவப் பொருள் ஆம்
இருள் சுரந்து எய்த்த உலகு இருள் நீங்கத் தன் ஈண்டிய சீர்
அருள் சுரந்து எல்லா உயிர்கட்கும் நாதன் அரங்கன் என்னும்
பொருள் சுரந்தான் எம் இராமாநுசன் மிக்க புண்ணியனே. 2881

புண்ணிய நோன்பு புரிந்தும் இலேன்; அடி போற்றி செய்யும்
நுண்அரும் கேள்வி நுவன்றும் இலேன்; செம்மை நூல் புலவர்க்கு
என் அரும் கீர்த்தி இராமாநுச! இன்று நீ புகுந்து என்
கண்ணுள்ளும் நெஞ்சுள்ளும் நின்ற இக் காரணம் கட்டுரையே. 2882

கட்டப் பொருளை மறைப் பொருள் என்று, கயவர் சொல்லும்
பெட்டைக் கெடுக்கும் பிரான் அல்லனே? என் பெரு வினையைக்
கிட்டிக் கிழங்கொடு தன் அருள் என்னும் ஒள் வாள் உருவி,
வெட்டிக் களைந்த இராமாநுசன் என்னும் மெய்த்தவனே. 2883

தவம் தரும்; செல்வம் தகவும் தரும்; சலியாப் பிறவிப்
பவம் தரும் தீவினை பாற்றித் தரும்; பரந்தாமம் என்னும்
திவம் தரும் தீது இல் இராமாநுசன் தன்னைச் சார்ந்தவர்கட்கு;
உவந்து அருந்தேன் அவன் சீர் அன்றி யான் ஒன்றும் உள் மகிழ்ந்தே. 2884

உள் நின்று உயிர்களுக்கு உற்றனவே செய்து, அவர்க்கு உயவே
பண்ணும் பரனும் பரிவிலன் ஆம்படி பல் உயிர்க்கும்
விண்ணின்தலை நின்று வீடு அளிப்பான், எம் இராமாநுசன்
மண்ணின் தலத்து உதித்து உய்மறை நாலும் வளர்த்தனனே. 2885

வளரும் பிணிகொண்ட வல்வினையால், மிக்க நல்வினையில்
கிளரும் துணிவு கிடைத்தறியாது, முடைத்தலை ஊன்
தளரும் அளவும் தரித்தும் விழுந்தும் தனி திரிவேற்கு
உளர் எம் இறைவர், இராமாநுசன் தன்னை உற்றவரே. 2886

தன்னை உற்று ஆட்செய்யும் தன்மையினோர், மன்னு தாமரைத் தாள்
தன்னை உற்று ஆட்செய்ய என்னை உற்றான் இன்று, தன் தகவால்
தன்னை உற்றார் அன்றி தன்மை உற்றார் இல்லை என்று அறிந்து
தன்னை உற்றாரை, இராமாநுசன், குணம் சாற்றிடுமே. 2887





*சைவ ஆகமத்தைக் கொண்டு வாதம் செய்யும் பாசுபதரின் அறிவின்மை மேல் ஓங்கிக் கூறுகிற தாழ்ந்த பொருளால் உலகத்தவர் கெட்டனர். இத்தகைய அறிவின்மை இருள் போகும்படி புண்ணியரான எம்பெருமானார் தம் அருளால், ''எல்லா ஆத்மாக்களுக்கும் இறைவன் திருவரங்கனே'' என்னும் அரிய பொருளை வெளியிட்டார்.* **2881**

*சிறந்த நூல்களைக் கற்ற புலவர்களாலும் விவரிக்க முடியாத புகழுடைய எம் இராமாநுசரே! அடியேன் புண்ணியம் தரும் நோன்பு எதுவும் செய்யவில்லை. தேவரீர் திருவடி போற்றும் நுட்பமான கேள்விச் செல்வத்தை வாயால் கூடியும் இல்லை. இவ்வாறு அடியேன் ஒன்றுமில்லாமல் இருக்க, இன்று நீரே அடியேன் கண்ணிலும் நெஞ்சிலும் புகுந்து நிற்கக் காரணம் என்ன உண்டோ? பதில் அருள வேண்டும்.* **2882**

*எம்பெருமானார் ஆகிய மாமுனிவர், அடியேனை நெருங்கித் தம்முடைய அருள் எனனும் வாளை உருவி என் பாவங்களை வேருடன் வெட்டிக் களைந்தார். கீழோரானவர் வேதப் பொருளை மாற்றிப் பொய்ப் பேச்சுக்கள் பரப்பியபொழுது, அவற்றைக் கண்டித்து உண்மையை நிலை நிறுத்திய மஹான்தான் இவர் அன்றோ!* **2883**

*குற்றமற்ற இராமாநுசரை அடைந்தவர்க்கு அவர் சரணாகதி தருமத்தைக் கொடுப்பார். பக்திச் செல்வத்தையும் அருளையும் தருவார். பிறவியை உண்டாக்கும் வினைகளைப் போக்குவார். பரமபதம் என்னும் வீடுபேற்றை அளிப்பார். ஆகவே அடியேன் அந்த எம்பெருமானாரின் திருக்குணங்களை விட்டு, வேறொன்றையும் மனம் கொள்ளேன்.* **2884**

*உயிர்கள் எல்லாவற்றின் உள் இருந்து, அவற்றுக்கு வேண்டியவற்றையே செய்து, அவை உய்வடையச் செய்பவன் இறைவனான எம்பெருமான் ஆவான். இப்பெருமான் பரிவும் குறைவோ என்னும் படி, எல்லா ஆத்மாக்களின் வீடு பேறான உய்வுக்காக அன்றோ, இராமாநுசர் வைகுண்டத்திலிருந்து வந்து இப்பூவுலகில் அவதரித்தார்? நான்கு வேதங்களையும் வளரச் செய்தவரும் இவரே அன்றோ!* **2885**

*என்னுடைய கொடிய வினைகளால், என் நெஞ்சில் சரணாகதி வழியும், அதற்கான ஆழ்ந்த நம்பிக்கையும் பிறக்காமல் போயிற்று. கெட்ட நாற்றங்களுக்கு இருப்பிடமான உடல் விழும் வரையில் புலன் இன்பங்களிலேயே ஊன்றித் துணையின்றித் தளர்ந்தேன். கதியற்ற எனக்கு இராமாநுசரின் அந்தரங்க அடியார்களே உற்றவர் என உணர்ந்தேன்.* **2886**

*இராமாநுசர், தமக்கு அடியார்கள் இருப்பதைக் கண்டும், தம் அடியார்களுக்கு அடியார், அவர் குணங்களை உகந்து பேசுவாராய் யாரும் இல்லையே என்று திருவுள்ளம் பற்றினார். ஆகவே, அடியேனை இன்று, தம் அருளால் அவர் தம்மை அடைந்து தொண்டு செய்வாரிடத்தே, அடிமை கொண்டு அவர்கள் திருவடித் தாமரைகளை, அடியேன் அடையுமாறு, அருள் செய்தார்.* **2887**

இடுமே இனிய சுவர்க்கத்தில்? இன்னும் நரகில் இட்டுச்
சுடுமே? அவற்றைத் தொடர் தரு தொல்லைச் சுழல் பிறப்பில்
நடுமே? இனி நம் இராமாநுசன் நம்மை நம் வசத்தே
விடுமே? சரணம் என்றால் மனமே! நையல் மேவுதற்கே. 2888

தற்கச் சமணரும் சாக்கியப் பேய்களும், தாழ் சடையோன்
சொல் கற்ற சோம்பரும் சூனியவாதரும், நான்மறையும்
நிற்கக் குறும்பு செய் நீசரும் மாண்டனர் நீள் நிலத்தே
பொன் கற்பகம், எம் இராமாநுச முனி போந்த பின்னே. 2889

போந்தது என் நெஞ்சு என்னும் பொன் வண்டு, உனது அடிப்போதில் ஒண் சீர்
ஆம் தெளி தேன் உண்டு அமர்ந்திட வேண்டி நின்பால்; அதுவே
ஈந்திட வேண்டும்; இராமாநுச! இது அன்றி ஒன்றும்
மாந்தகில்லாது ; இனி மற்று ஒன்று காட்டி மயக்கிடலே. 2890

மயக்கும் இரு வினை வல்லியில் பூண்டு, மதி மயங்கித்
துயக்கும் பிறவியில் தோன்றிய என்னை, துயர் அகற்றி
உயக்கொண்டு நல்கும் இராமாநுச! என்றது உன்னை உன்னி
நயக்கும் அவர்க்கு இது இழுக்கு என்பவர் நல்லவர் என்றும் நைந்தே. 2891

நையும் மனம் உன் குணங்களை உன்னி; என் நா இருந்து எம்
ஐயன் இராமாநுசன் என்று அழைக்கும்; அருவினையேன்
கையும் தொழும்;கண் கருதிடும் காண; கடல் புடை சூழ்
வையம் இதனில், உன் வண்மை என்பால் என் வளர்ந்ததுவே? 2892

வளர்ந்த வெம் கோப மடங்கல் ஒன்று ஆய், அன்று வாள் அவுணன்
கிளர்ந்த பொன் ஆகம் கிழித்தவன், கீர்த்திப் பயிர் எழுந்து
விளைந்திடும் சிந்தை இராமாநுசன் என் தன் மெய்வினை நோய்
களைந்த நல் ஞானம் அளித்தவன், கையில் கனி என்னவே. 2893

கையில் கனி என்னக் கண்ணனைக் காட்டித் தரிலும், உன் தன்
மெய்யில் பிறங்கிய சீர் அன்றி வேண்டிலன் யான்; நிரயத்
தொய்யில் கிடக்கிலும் சோதி விண் சேரிலும் இவ் அருள் நீ
செய்யில் தரிப்பன், இராமாநுச! என் செழுங் கொண்டலே! 2894





நாம், எம்பெருமானார் திருவடிகளே சரணம் என்று கூறி விட்டால் இனிதாக சுவர்க்கத்தில் சேர்ந்திடுவாரோ? அல்லது நரகத்தில் தள்ளிச் சுடச் செய்வாரோ? அவற்றைத் தொடர்ந்துள்ள தொன்மையான பிறப்பிலே நிறுத்துவாரோ? நம்மை நம் வசத்தே விட்டு விடுவாரோ? நெஞ்சமே! இவைகளைப் பற்றி நீ நைந்து போக வேண்டாம். **2888**

தர்க்கம் செய்யும் சமணர்களும் பேய்கள் போன்ற பௌத்தர் களும், சிவனின் ஆகமத்தைக் கற்ற சோம்பேறிகளான சைவர்களும், சூனியவாதம் பேசுபவரும், நான்கு வேதங்களுக்குப் பொருந்தாத பொருள் கூறும் நீசர்களும், கற்பக மரம் போன்ற வள்ளல் இராமாநுசர் தோன்றிய பின் தாழ்ச்சி அடைந்து நீங்கினர். **2889**

இராமாநுசரே! என் இதயமாகிற வண்டு, உமது திருவடித் தாமரைகளில், உம் குணங்களாகிய தேனைப் பருகி அமர எண்ணி, உம்பால் வந்தது. அத்திருக்குணங்களையே ஈந்திட வேண்டும். அதைத் தவிர வேறு ஒன்றையும் உண்ணாது, இனி வேறு விஷயங்களைக் காட்டி மயக்க வேண்டாம். **2890**

"புண்ணியம், பாவம் என்னும் விலங்கில் அகப்பட்டு அறிவு கெட்டு மயக்கும் பிறவியில் சிக்கிய என் துயரங்களைப் போக்கி அருள் செய்து உய்விக்கின்ற எம்பெருமானாரே!" என்று உம்மை நினைத்து உருகி உமது பாவனத்தைப் பேசுவது நல்லவர்களுக்குத் தகாதது. உம்மை அனுபவித்ததையே பேச வேண்டும். **2891**

இராமாநுசரே! என் நெஞ்சம் உம் குணங்களை எண்ணிக் கரைகின்றது. என் நாக்கு. எம்பெருமானாரே! என்று அழைக்கிறது. பாவியேன் கைகளும் தொழுகின்றன. கண்கள் உம்மை சேவிக்க விரும்புகின்றன. கடல் சூழ்ந்த இவ்வுலகில் உமது வள்ளல் தன்மை அடியேன் மீது வளரக் காரணம் யாதோ? **2892**

அன்று கோபம் மேலிட்ட நரசிம்மப் பிரான் வாளுடைய இரணியன் பொன் மார்பைக் கிழித்துக் கொன்றான். அப்பெருமானின் புகழ் என்னும் பயிர் விளையப் பெற்ற உள்ளமுடைய இராமாநுசர், என் உடலைப் பற்றிய வினைகளை ஒழித்து, கையில் நெல்லிக் கனிபோலே நல்ல ஞானத்தைத் தந்து அருளினார். **2893**

மேகம் போன்ற இராமாநுசரே! எம்பெருமானை உள்ளங்கை நெல்லிக்கனி போலக் காட்டிக் கொடுத்தாலும், உன் திருமேனி அழகையும் குணங்களையும் விட்டு வேறு காணமாட்டேன். நரகில் அழுந்தினாலும், பரமபதம் அடைந்தாலும், உம் அழகை அனுபவிக்கும் அருளையே தேவரீர் காட்டினால், நான் கால் பாவி நிற்பேன். **2894**

செழுந்திரைப் பாற்கடல் கண் துயில் மாயன், திருவடிக்கீழ்
விழுந்திருப்பார் நெஞ்சில் மேவு நல் ஞானி, நல் வேதியர்கள்
தொழும் திருப் பாதன் இராமாநுசனைத் தொழும் பெரியோர்
எழுந்து இரைத்து ஆடும் இடம் அடியேனுக்கு இருப்பிடமே. 2895

இருப்பிடம் வைகுந்தம் வேங்கடம், மாலிருஞ்சோலை என்னும்
பொருப்பிடம் மாயனுக்கு என்பர் நல்லோர்; அவை தம்மொடும் வந்து
இருப்பிடம் மாயன் இராமாநுசன் மனத்து; இன்று அவன் வந்து
இருப்பிடம் என் தன் இதயத்துள்ளே, தனக்கு இன்புறவே. 2896

இன்பு உற்ற சீலத்து இராமாநுச! என்றும் எவ்விடத்தும்
என்பு உற்ற நோய் உடல்தோறும் பிறந்து இறந்து, எண் அரிய
துன்பு உற்ற வீயினும் சொல்லுவது ஒன்று உண்டு; உன் தொண்டர்கட்கே
அன்பு உற்று இருக்கும்படி, என்னை ஆக்கி அங்கு ஆட்படுத்தே. 2897

அம் கயல் பாய் வயல் தென் அரங்கன் அணி ஆகம் மன்னும்
பங்கய மலர்ப் பாவையைப் போற்றதும், பத்தி எல்லாம்
தங்கியது என்னத் தழைத்து நெஞ்சே! நம் தலைமிசையே
பொங்கிய கீர்த்தி இராமாநுசன் அடிப் பூ மன்னவே. 2898

## இராமாநுச நூற்றந்தாதி முற்றிற்று

---





அலைகளை உடைய திருப்பாற்கடலில் பள்ளி கொண்ட எம் பெருமான் திருவடிக் கீழ் விழுந்து கிடப்பவர்கள் நெஞ்சிலும் இராமாநுசரே எழுந்தருளி உள்ளார். சிறந்த ஞானியாயும், வேதியர்களால் வணங்கப்படும் பாதங்களை உடையவராயும் உள்ள இராமாநுசரை வணங்கும் பெரியோர்கள் கிளர்ந்து கூத்தாடும் இடம், அடியேன் வாழும் இடமே ஆகும். அவ்விடமே எனக்கு உகந்தது. 2895

எம்பெருமானுக்கு இருப்பிடம் பரமபதமும், திருவேங்கட மலையும், திருமாலிருஞ்சோலை மலையும் ஆகும் என்று நல்லோர்கள் கூறுவார்கள். மாயனான திருமால், ஸ்ரீவைகுண்டம் முதலியவற்றுடன் கூடவே எழுந்தருளி இருப்பது, இராமாநுசரின் திரு உள்ளமே ஆகும். அந்த எம்பெருமானார் இன்று இன்பமாக எழுந்தருளி இருக்கும் இடம் அடியேன் இதயத்திலே ஆகும். 2896

ஆனந்தமும் சீலமும் வாய்க்கப்பெற்ற இராமாநுசரே! அடியேன் விண்ணப்பிப்பது ஒன்றுண்டு. எலும்பில் உற்ற நோய்களுக்கு இடமான உடல்களெல்லாம், பிறந்தும் இறந்தும் எண்ண முடியாத துன்பங்களை அனுபவித்தாலும், என்றும் எவ்விடத்தும் உம் தொண்டர்களுக்கே பக்தியுடன் அடிமை செய்யும்படி, அடியேனை ஆட்படுத்தி அருள் புரிய வேண்டும். 2897

நெஞ்சமே! பக்தி அனைத்தும் தங்கியது என்ன பலம் பெற்று, பொங்கிய புகழுடைய எம்பெருமானாரின் திருவடித் தாமரைகள் நம் தலைமேலே நிலைத்து இருக்கும் படி ஆக வேண்டும். கயல் மீன்கள் பாயும் வயல்கள் சூழ்ந்த திருவரங்கத்தில் எழுந்தருளியவனின் மார்பில் வாழும் தாமரைச் செல்வியான பெரிய பிராட்டியாரை நாம் வணங்கி வாழ்த்துவோம். 2898

## இராமாநுச நூற்றந்தாதி முற்றிற்று

---

ஸ்ரீ:

# நாலாயிர திவ்யப் பிரபந்தம்

## இயற்பா

## நூல் : 3

## பாடல் முதற்குறிப்பு அகராதி


### அ

- அகம் சிவந்த 2653
- அகைப்பு இல் 2419
- அங்கற்கு இடர் 2346
- அடர் பொன் 2654
- அடல்கொண்ட 2826
- அடிச்சகடம் 2414
- அடிமூன்றில் 2186
- அடியால்படி 2611
- அடியால் முன் 2273
- அடியும்படி 2098
- அடியைத் தொடர்ந் 2841
- அடிவண்ணம் 2286
- அடுத்த கடும் 2161
- அடை ஆர் 2823
- அடைக்கலத்து 2563
- அடைந்தஅரு 2140
- அடைந்தது அரவு 2309
- அத்தியூரான் 2277
- அது நன்று 2369
- அதுவோ நன்று 2651
- அம்கயல்பாய் 2898
- அமுது என்றும் 2266
- அமைக்கும் 2622
- அயர்ப்பாய் 2667
- அயல் நின்ற 2138
- அரண்ஆம் 2359
- அரவம் அடல் 2135
- அரன் நாரணன் 2086
- அரிய புலன் 2131
- அரியது எளிது 2203
- அரியன யாம் 2488
- அருகும் சுவடும் 2592
- அருள் ஆர் 2510
- அருள் புரிந்த 2240
- அருளாது ஒழியுமே 2300
- அலர் எடுத்த 2378
- அவர் அவர் 2095
- அவர் இவர் 2193
- அவர் இவர் 2437
- அவற்கு அடிமைப் 2318
- அவன் ஆம் 2620
- அவன் என்னை 2411
- அவன் கண்டாய் 2205
- அவன் தமர் 2136
- அவனே அரு 2332
- அவையம் என 2627
- அழகி யான் தானே 2403
- அழகு அன்றே 2287
- அழகும் 2615
- அழைக்கும் கருங் 2529
- அழைப்பன் திருமா 2231
- அழைப்பன் திருவே 2420
- அளப்பு அரும் 2536
- அற்புதன் செம்மை 2843
- அறிந்து ஐந்தும் 2187
- அறியார் சமணர் 2387
- அறியும் உலகு 2103
- அறிவு என்னும் 2293
- அன்பு ஆவாய் 2440
- அன்பு அழியானை 2153
- அன்பே தகளியா 2182
- அன்று அது 2190
- அன்று இவ் 2315
- அன்றே நம் 2612
- அன்னம் செல் 2507

### ஆ

- ஆக்கி அடிமை 2828
- ஆங்கு ஆரவாரம் 2391
- ஆங்கு மலரும் 2348
- ஆண்டுகள் நாள் 2821
- ஆம் ஆறு 2621
- ஆமே அமரர்க்கு 2126
- ஆய்ந்த அரு 2358
- ஆய்ந்து உரைப்பன் 2254
- ஆய்ந்து கொண்டு 2460
- ஆயிழையார் கொங் 2832
- ஆர் எனக்கு 2858
- ஆரப்பொழில் 2810
- ஆரானும் ஆதானும் 2609
- ஆரே அறிவார் 2454
- ஆரே துயர் 2308
- ஆல நிழல் கீழ் 2398
- ஆள் அமர் 2162
- ஆள் பார்த்து 2441
- ஆறிய அன்பு 2116
- ஆறு சடைக் 2385
- ஆனது செம்மை 2839

### இ

- இங்கு இல்லை 2614
- இசைந்த அரவமும் 2345
- இசைமின்கள் தூது 2508
- இடங்கை வலம்புரி 2252
- இடந்தது பூமி 2120
- இடம் ஆவது 2447
- இடம் கொண்ட 2802
- இடம் போய் 2553
- இடம் வலம் 2354
- இடர் ஆர்படுவார் 2159
- இடுமே இனிய 2888
- இது இலங்கை 2409
- இது கண்டாய் 2247
- இப்போதும் 2671
- இமம் சூழ் 2379
- இமையப்பெருமலை 2468
- இமையாதகண் 2113
- இயல்வாயின 2501
- இயல்வு ஆக 2094







- இயலும் பொரு 2796
- இருக்கு ஆர் 2541
- இருந்தேன் 2852
- இரு நால்வர் 2594
- இருப்பிடம் 2896
- இரும்தண் 2218
- இருள் விரிந்தால் 2494
- இல்லறம் இல்லேல் 2453
- இலை துணை 2389
- இலை அவன் 2312
- இவை அன்றே 2587
- இவையா பிலவாய் 2402
- இளைப்பாய் இளை 2607
- இறை ஆய் 2320
- இறை எம் 2280
- இறைஞ்சப்படும் 2837
- இறை முறையான் 2645
- இறையும் நிலனும் 2110
- இறையோ இரக் 2539
- இறைவனைக் 2799
- இன்பம் தரு 2820
- இன்பு உற்ற 2897
- இன்றா அறிகின் 2268
- இன்று ஆக 2388
- இன்றேகழல் 2283
- இன்னன்ன தூது 2506
- இனி அவன் 2364
- இனி அறிந்தேன் 2477
- இனி நின்று 2655
- இனி யார் 2168
- இனிது என்பர் 2216

### ஈ

- ஈய்ந்தனன் 2867
- ஈர்வனவேலும் 2491
- ஈனச் சொல் 2576

### உ

- உகந்து உன்னை 2189
- உகப்பு உருவன் 2410
- உண்ணாது உறங் 2543
- உணர்ந்த மெய்ஞ் 2850
- உணர்ந்தாய் மறை 2229
- உணர்வார் ஆர் 2149
- உணர ஒருவர்க்கு 2613
- உணரில் உணர்வு 2363
- உதிப்பன உத்தமர் 2840
- உய்த்து உணர்வு 2375
- உயிர் கொண்டு 2469
- உரைக்கில் ஓர் 2661
- உரை மேற் 2106
- உலகமும் ஊழியும் 2325
- உலகு படைத்து 2579
- உலகும் உலகு 2142
- உலாகின்ற 2552
- உள் நாட்டுத் தேசு 2663
- உள் நின்று 2885
- உள்ளிலும் உள்ளம் 2660
- உளது என்று 2226
- உளன் கண்டாய் 2180
- உளன் கண்டாய் 2321
- உளன் கண்டாய் 2467
- உளனாய நான் 2365
- உற்று வணங்கித் 2275
- உறுபெருஞ் 2809
- உறுகின்ற கன்மங் 2558
- உறும்கண்டாய் 2258

### ஊ

- ஊரும் வரி அரவம் 2119
- ஊழிகள் ஆய் 2548
- ஊழி தோறு ஊழி 2581
- ஊனக்குரம்பையின் 2172

### எ

- எங்கள் பெருமான் 2278
- எண்மர்பதி 2133
- எம் கோல் வளை 2502
- எமக்கு என்று 2219
- எமக்கு யாம் 2632
- எய்தற்கு அரிய 2808
- எய்தான் மராமரம் 2333
- எரிகொள் செந் 2559
- எழில் கொண்ட 2367
- எழுவதும் மீண்டே 2574
- எழுவார் விடை 2107
- எளிதில் இரண்டு 2132
- என் ஒருவர் 2115
- என்நெஞ்சம் 2276
- என்நெஞ்சம் 2439
- என்று கடல் 2083
- என்றும் ஒரு நாள் 2658
- என்றும்புன் 2518
- என்றும் மறந்தறி 2236
- என்றும் மறந்தறி 2473
- என்னின் மிகு 2588
- என்னைப் புவியில் 2794
- என்னையும் 2860
- எனக்கு ஆவார் 2432
- எனக்கு ஆவார் 2170
- எனக்கு உற்ற 2795

### ஏ

- ஏற்றான் புள் 2155
- ஏறு ஏழும் 2244
- ஏன்றேன் அடிமை 2476

### ஒ

- ஒருபேர் உந்தி 2672
- ஒருங்கு இருந்த 2438
- ஒள்நுதல் மாமை 2527
- ஒன்று உண்டு 2637
- ஒன்றும் மறந்தறி 2087

### ஓ

- ஓஓ உலகினது 2583
- ஓர் அடியும் 2181
- ஓர் உருவன் 2241
- ஓத்தின் பொருள் 2220
- ஓதிய வேதத்தின் 2875
- ஓர்த்த மனத்தராய் 2360

### க

- கட்டப்பொருளை 2883
- கடம் ஆயினகள் 2515
- கடல் அளவு ஆய 2849
- கடல் கொண்டு 2495
- கடிதுகொடு 2274
- கடை நின்று 2192
- கடை நின்று 2436
- கண்டவர் சிந்தை 2845
- கண்டு கொண்டே 2874

கண்டு வணங்கினார் 2459
கண்டேன் திரு 2248
கண்ணும் கமலம் 2290
கண்ணும் செந்தா 2520
கதவி, கதம் 2270
கதவு மனம் 2462
கதிக்குப் பதறி 2804
கதையின் பெரும் 2245
கதைப் பொருள் 2413
கயலோ நும 2492
கருத்தில் புகுந்து 2868
கல்லாதவர் இலங் 2434
கல்லும் கனைகட 2652
கலந்தான் என் 2463
கலந்து நலியும் 2649
கலந்து மணி 2368
கலி மிக்க 2878
கவியினார் கை 2366
கழல் எடுத்து 2188
கழல் ஒன்று 2129
கழல் தலம் ஒன்றே 2535
கழல் தொழுதும் 2288
கள் ஆர் 2792
களிறு முகில் 2352
கற்றுப் பிணை மலர் 2542

கா

காண் காண் 2316
காண்கின்றனகளு 2485
காணக்கழி 2237
காணப்புகில் 2604
காணல் உறுகின் 2422
காப்பு உன்னை 2156
காப்பு மறந்தறியே 2474
காய்ந்து இருளை 2347
கார் ஆர் 2673-2710
கார் ஏய் கருணை 2815
கார் ஏற்று இருள் 2546
கார் கலந்த 2670
கார்த்திகையானும் 2812
காரி கையார் நிறை 2496
காலை எழுந்து 2147
காவியும் நீலமும் 2544
காலே பொதத் 2606
காலைவெய்யோற்கு 2570

கு

குழல் கோவலர் 2480
குறிப்பில் கொண்டு 2580
குறிப்பு எனக்குக் 2415
குறை கொண்டு 2390
குறையாக வெம் 2264
குன்று அனைய 2122
குன்று ஒன்றின் 2353

கூ

கூட்டும் விதி 2819
கூற்றமும் சாரா 2431
கூறும் சமயங்கள் 2836

கை

கைத்தனன் தீய 2862
கைய கனல் 2317
கையவலம் புரியும் 2109
கையில் கனி 2894

கொ

கொடுங் கால் 2514
கொண்டல் தான் 2633
கொண்டது உலகம் 2199
கொண்டானை 2160
கொண்டுகுடங் 2425
கொண்டு வளர்க்க 2279
கொம்பு ஆர் தழை 2499
கொழுந்து விட்டு 2851
கொள்ளக் குறைவு 2817

கோ

கோ ஆகி 2250
கோக்குல 2846
கோலப் பகல் 2517
கோவலனாய் 2323

ச

சரணம் அடைந்த 2857
சரணாமறை 2141

சா

சாயால் கரியானை 2598
சார்ந்தது என் 2861
சார்ந்து அகடு 2356
சார்வு நமக்கு 2381

சி

சிதைக்கின்றது 2511
சிந்தையினோடு 2859
சில்மொழி நோயோ 2497
சிலம்பும் செறி 2371
சிறந்த என் 2307
சிறந்தார்க்கு எழு 2225
சிறியார் பெருமை 2217
சின மாமத 2324

சீ

சீர் அரசு ஆண்டு 2557
சீர் கொண்டு 2873
சீரால் பிறந்து 2600
சீரியநான் மறைச் 2801

சு

சுரக்கும் திருவும் 2833
சுருக்காக வாங்கி 2221
சுருங்கு உறி 2568

சூ

சூட்டாய நேமியான் 2650
சூட்டு நல் மாலை 2498
சூது ஆவது 2446
சூழ்கின்ற கங்குல் 2549
சூழ்ந்த துழாய் 2331
சூழ்ந்து அடியார் 2601

செ

செக்கர் மாமுகில் 2578
செய்த்தலைச் 2865
செய்யும் பசுந் 2803
செவி வாய் 2093
செவிக்கு இன்பம் 2450
செழுந்திரைப் 2895
செழுநீர்த் தடத்து 2479
செற்றதுவும் சேரா 2330
செற்று எழுந்து 2175
சென்ற நாள் 2298
சென்றது இலங்கை 2206





சென்றால் குடை 2134
சென்று அங்கு 2605
சென்று வணங்கு 2423

சே

சேமநல் 2830
சேமம் செங்கோன் 2504
சேயன் அணியன் 2452
சேர்ந்த திருமால் 2311

சொ

சொல் ஆர் தமிழ் 2834
சொல்லில் குறை 2603
சொல்லும் தனை 2151

சோ

சோர்வு இன்றி 2871
சோராத காதல் 2805

ஞா

ஞாலம் பனிப்பச் 2484
ஞானத்தால் நன்கு 2183
ஞானம் கனிந்த 2856

த

தங்கா முயற்றிய 2669
தடாவிய அம்பும் 2483
தண் அம் துழாய் 2505
தமக்கு அடிமை 2616
தமர் ஆவார் 2472
தமர் உகந்தது 2125
தமர் உள்ளம் 2251
தரித்திருந்தேன் 2444
தலைப்பெய்து 2567
தவம் செய்து 2400
தவம் செய்து 2259
தவம் தரும் 2884
தழும்பு இருந்த 2104
தளர்ந்தும் முறிந் 2551
தற்கச் சமணரும் 2889
தற்பு என்னைத் 2458
தன்னை உற்று 2887
தனக்கு அடிமை 2197
தனி நெஞ்சம் 2481
தனி வளர் செங் 2490

தா

தாம் உளரே 2202
தாம்பால் ஆப்பு 2602
தாழ்சடையும் நீள் 2344
தாழ்ந்து வரம் 2204
தாழ்வு ஒன்று 2806
தாளால் உலகம் 2416
தாளால் சகடம் 2335
தான் ஒருவன் ஆகி 2451
தானே தனக்கு 2319
தானே தனித் 2608

தி

திக்கு உற்ற 2816
திங்கள் அம் 2554
திசையும் திசை 2088
திண் பூஞ்சுடர் 2486
திரிகின்றது வட 2524
திரிந்தது வெம் 2196
திருக் கண்டேன் 2282
திருநின்ற 2443
திருமகளும் மண் 2123
திருமங்கை 2238
திருமால் உரு 2565
திறம்பாது என் 2177
திறம்பிற்று இனி 2269
திறம்பேன்மின் 2449

தீ

தீவினைக்கு ஆரு 2566

து

துஞ்சா முனிவரும் 2575
துணிந்தது சிந்தை 2214
துணை நாள் 2662
துழா நெடும் சூழ 2513

தெ

தெரிந்துணர்வு 2666
தெரிவு உற்ற 2872
தெளிது ஆக 2111
தெளிந்த சிலாதல 2339

தே

தேசும் திறலும் 2291
தேரார் மறையின் 2864
தேருங்கால் தேவ 2383
தேவராய் நிற்கும் 2435

தை

தையல் நல்லார்கள் 2561

தொ

தொகுத்த வரத்த 2386
தொட்ட படை 2380
தொடர் எடுத்த 2194
தொழில் எனக்குத் 2466
தொழுதால் பழுது 2306
தொழுது மலர் 2139

தோ

தோள் அவனை 2144
தோள் இரண்டு 2224

ந

நகர் இழைத்து 2185
நகரம் அருள்புரி 2114
நயவேன் ஒரு 2825
நயவேன் பிறர் 2145
நல்லார் பரவும் 2870
நல்லார் நவில் 2577
நலமே வலிது 2355
நலியம் நரகனை 2555
நவின்று உரைத்த 2267
நன்கு ஒதும் 2292
நன்மணி வண்ணன் 2428
நன்று பிணி 2152
நளிர் மதிச் சடைய 2584

நா

நாவாயில் 2176
நாக்கொண்டு 2456
நாகத்து அணைக் 2417
நாட்டிய நீசச் 2844
நாடிலும் நின் 2169
நாம்பெற்ற 2239
நாமம் பல 2289
நாராயணன் 2395
நாழால் அமர் 2595
நான் கூறும் 2630

நான்முகனை 2382
நான்ற முலைத்தலை 2099
நானிலம் வாய்க் 2503

நி

நிகர் இன்றி 2838
நிகழ்ந்தாய் பால் 2405
நிதியைப் பொழியும் 2811
நிலத்தைச் செறுத் 2824
நிலைமன்னும் என் 2397
நிறம் உயர் கோலமு 2521
நிறம் கரியன் 2233
நிறம் வெளிது 2337
நின்ற பெருமானே 2328
நின்ற வண் 2866
நின்றது ஓர் 2242
நின்று எதிராய 2361
நின்று நிலம் 2102
நின்றும் இருந்தும் 2619
நினைத்து இறைஞ் 2631
நினைத்து உலகில் 2374
நினைப்பன் திருமா 2223
நினையார் பிறவி 2880

நீ

நீ அன்று 2211
நீ அன்றே 2329
நீ அன்றே ஆழ் 2596
நீயும் திருமகளும் 2167
நீயே உலகு 2401
நீலத் தடவரை 2516

நு

நுமக்கு அடியோம் 2593

நெ

நெஞ்சால் நினைப்பு 2362
நெஞ்சில் கறை 2818
நெறி காட்டி 2590
நெறி வாசல் 2085
நெறியார் குழல் 2234

நே

நேர்ந்தேன் அடிமை 2261

நை

நையும் மனம் 2892

ப

பகல் இரா 2665
பகல் கண்டேன் 2262
படி கண்டு 2166
படி கொண்ட 2827
படி வட்டத் 2294
படை ஆரும் 2163
பண்டிப்பெரும் 2195
பண்டும் பலபல 2526
பண்டு எல்லாம் 2342
பண் தருமாறன் 2854
பண் புரிந்த 2127
பணிந்து உயர்ந்த 2296
பணிந்தேன் திரு 2246
பதி அமைந்து 2208
பதிப் பகைஞற்கு 2455
பயின்றது அரங்கம் 2227
பரன் ஆம் அவன் 2648
பரிசுநறு 2184
பலபல ஊழிகள் 2493
பல தேவர் 2396
பழி பாவம் 2201
பழுது ஆகாது 2470
பழுதே பல 2097
பற்றா மனிசரைப் 2876
பனிப்பு இயல்வாக 2482

பா

பாட்டும் முறையும் 2457
பார் அளவும் 2084
பார் உண்டான் 2626
பார்த்த கடுவன் 2349
பார்த்தான் அறு 2842
பார்த்து ஓர் 2599
பால் ஆழி நீ 2618
பால் வாய்ப்பிறைப் 2512
பாலகனாய் ஆல் 2314
பாலன் தனது 2150
பாலில் கிடந்த 2384
பாற்கடலும் வேங்க 2313

பி

பிடிசேர் 2178
பிடியைத் தொட 2853
பிதிரும் மனம் 2465
பிரான் உன் 2165
பிரான் என்றும் 2212
பிரிந்து ஒன்று 2634
பிழைக்க முயன் 2623
பிறப்பு இறப்பு 2664
பின் துரக்கும் 2647
பின் நின்று 2260
பின்னால் அரு 2272

பு

புகழ்வாய்பழிப்பா 2154
புகழ்வோம் பழிப் 2586
புகுந்து இலங்கும் 2376
புகு மதத்தால் 2351
புண்ணிய நோன்பு 2882
புணர் மருதின் 2143
புரி ஒரு கை 2112
புரிந்து மலர் இட்டு 2426
புரிந்து மத 2326
புலக்குண்டலப் 2534
புலம்பும் கன 2564
புவியும் இருவிசும்பு 2659
புனமோ புனத்து 2500

பூ

பூமன்னு 2791
பூவையும் காயாவும் 2657

பெ

பெயரும் கருங் 2148
பெரியவர் பேசிலும் 2877
பெரியவரை 2336
பெருவில் பகழிக் 2121
பெருகு மத 2256
பெருங்கேழலார் 2522
பெற்றதாய் நீயே 2589
பெற்றம்பிணை 2341
பெற்றார் தளை 2101

பே

பேசுவார் எவ்வளவு 2302
பேணநலம் இல் 2569
பேதையர் வேதப் 2848
பேய்ச்சிபால் 2310
பேர் இயல் 2793
பேர்கின்றது மணி 2489
பேர்த்தனைமா 2191
பேர்ந்து ஒன்று 2644
பேரே வரப் 2137
பேறுஒன்றும் 2243
பேறு ஒன்று மற்று 2835

பொ

பொய்யைச் சுரக் 2869
பொய்ந்நின்ற 2478
பொருகோட்டு 2090
பொருப்பிடையே 2357
பொருந்திய தேசு 2822
பொருளால் அமர் 2222
பொருளும் புதல்வ 2829
பொலிந்து இருண் 2338
பொன் திகழும் 2179

போ

போதான இட்டு 2445
போது அறிந்து 2253
போந்தது என் 2890
போற்று அரும் 2879

ம

மகன் ஒருவர்க்கு 2373
மகனாகக் கொண்டு 2210
மகிழ் அலகு 2130
மகிழ்ந்தது சிந்தை 2213
மங்குல் தோய் 2424
மடநெஞ்சம் 2523
மண் உண்டும் 2372
மண்ணும் மலையும் 2091
மண்ணுலகம் 2271
மண்மிசையோனி 2831
மதிக் கண்டாய் 2232
மதித்தாய் போய் 2393
மயக்கும் இருவினை 2891
மயங்க வலம்புரி 2089
மருங்கு ஓதம் 2639
மருந்தும் பொருளு 2285
மருள் சுரந்து 2881
மலர்ந்தே ஒழிந் 2545
மலை ஆமை 2430
மலைஏழும் 2230
மலைகொண்டு 2528
மலை முகடு மேல் 2327
மலையால்குடை 2108
மற்று ஆர் 2198
மற்று ஒருபேறு 2847
மற்றுத் தொழுவார் 2407
மன்னியபல் 2711-2790
மன்னியபேர் 2800
மன்னுமணி 2322
மனக்கேதம் 2442
மனத்து உள்ளான் 2209
மனத்து உள்ளான் 2284
மனமாசு 2124
மனம் ஆளும் 2635

மா

மாடே வரப் 2643
மாண் பாவித்து 2636
மாணிக்கம் கொண் 2562
மாமுதல் அடிப் 2582
மாயோன் வட 2487
மால் தான் 2408
மால் பால் 2295
மாலும் கருங்கட 2100
மாலே நெடியோ 2281
மாலே படிச் 2642
மாலை அரி 2228
மாறு ஆய 2399

மீ

மீன் என்னும் 2646

மு

முடிந்த பொழுதில் 2370
முதல் ஆம் 2656
முதல் ஆவார் 2096
முயற்றி சுமந்து 2585
முயன்று தொழு 2334
முரணைவலி 2117
முலையோ முழு 2537
முன் உலகம் 2301
முனியார் துயரங் 2807

மெ

மெய் தெளிந்தார் 2475
மெல்லியல் ஆக் 2525

மே

மேகங்களோ உரை 2509
மேல் நான்முகன் 2412

மை

மைப்படி மேனி 2571

மொ

மொய்த்தவெம் 2814
மொழியைக் கடக் 2797

யா

யாதானும் ஒன்று 2617
யாதானும் ஓர் 2572
யாமே அருவினை 2591
யானும் என் 2610
யானே தவம் 2255

வ

வகை அறுநுண் 2118
வகை சேர்ந்த 2628
வகையால் அவனி 2215
வகையால் மதி யாது 2406
வடிக்கோல 2263
வடிவு ஆர் முடி 2303
வண்டுகளோ 2532
வண்ணம் சிவந்துள 2540
வண்மையினாலும் 2863
வணங்கும் துறை 2573
வந்தித்து அவனை 2207
வந்து உதைத்த 2297
வயிறு அழல 2174
வரத்தால் வலி 2171
வரம் கருதி 2265
வரவு ஆறு 2640
வருங்கால் இரு 2305
வருத்தும்புற இருள் 2798
வரைகுடை 2164
வரைச் சந்தனக் 2257
வலம் ஆக 2448
வலியம் என 2625
வலி மிக்க 2249
வழக்கு அன்று 2200
வழக்கொடு மாறு 2597

வழித் தங்கு 2641
வழி நின்று 2157
வளர்ந்த வெம் 2893
வளரும் பிணி 2886
வளைவாய்த் திருச் 2547
வன் காற்று 2519

**வா**

வாசகம் செய்வது 2538
வாய் அவனை அல் 2092
வாய்ப்போ இது 2624
வாய்மொழிந்து 2299
வார் ஆயின 2530
வாரி சுருக்கி 2128
வால்வெண் 2550
வாழ்த்தி அவன் 2668
வாழ்த்திய வாய 2377
வாழ்த்துக வாய் 2392
வாழ்வு அற்றது 2855
வாழும் வகை 2340
வான் ஆகி 2173
வான் உலவு தீ 2418
வானோமறி கட 2638

**வி**

விண்ணகரம் 2343
வித்தும் இடவேண் 2404
வியலிடம் உண்ட 2533
விரலோடு வாய் 2105
விரும்பி விண் 2304
விரைந்து அடை 2461
விலைக்கு ஆட்படு 2433
விளரிக்குரல் அன் 2560
வினையார் தர 2629
வினையால் அடர்ப் 2146

**வீ**

வீசும் சிறகால் 2531
வீடு ஆக்கும் 2394
வீற்றிருந்து விண் 2471

**வெ**

வெற்பு என்று இரு 2235
வெற்பு என்று வே 2350
வெற்பு என்று வே 2421

**வே**

வேங்கடமும் விண் 2158
வேங்கடமேவிண் 2429
வேதனை வெண் 2556
வேந்தர் ஆய் 2464

**வை**

வைப்பன் மணி 2427
வைப்பு ஆய 2813
வையம் தகளியா 2082

---